# கல்கி



தவறு செய்தவன் அதனை ஒப்புக் கொண்டு திருத்திக் கொள்ளாதபோது இன்னொரு தவறு செய்கிறான்.

— கன்ஃபியூஷியஸ்

## பொருளடக்கம்

விசுவாவசு தை 24 ❋ பிப்ரவரி 6



“கல்கி”யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே




அடக்கி ஆள முடியுமா?



மலர் 25 ● இதழ் 28



# எதிர்க்கட்சிகளின் கடமை

**ராஜாஜி**

**பி**ரதமராக இருக்க வேண்டியவரைக் காங்கிரஸ் கட்சி தேர்ந்தெடுத்த முறை பற்றி உடனடியாக எழுந்த எண்ணங்கள் ஒருபுறமிருக்கட்டும்; இரண்டு அபேட்சகர்களின் தகுதிகள் பற்றிய வாதங்களும் ஒருபுறமிருக்கட்டும் (இவை பற்றிப் பத்திரிகைகள் பத்தி பத்தியாக எழுதிவிட்டன); மற்றோர் அம்சம் குறித்தே காங்கிரஸல்லாத மற்ற எல்லா அரசியல் கட்சிகளும் தீவிரமாகச் சிந்திக்க வேண்டும் எனக் கருதுகிறேன். நெருக்கடி என்று கூறப்படும் நிலையைக் காட்டிக் கட்சிக்குள் நடைபெற வேண்டிய தேர்தல்களைத் தள்ளிப்போட்ட காங்கிரஸ், பிரதம மந்திரி ஸ்தானத்தில் ஸ்ரீமதி இந்திரா காந்தியை அமர்த்துவதற்கான தேர்தலில் இவ்வளவு அவசரம் காட்டியது விசித்திரம். உண்மையாக நெருக்கடி இருப்பதாக உணர்வு இருந்திருந்தால் ராஷ்டிரபதி செய்திருந்த இடைக்கால ஏற்பாட்டை நீடித்திருக்க வேண்டும்; அல்லது நெருக்கடிக்கு முகம் கொடுக்கக் கூடிய விசேஷத் தகுதி பொருந்திய ஒரு தலைசிறந்த அநுபவசாலியைத் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். அனைவருமே ஸ்ரீமதி இந்திரா காந்தி அவர்கள் தமது பதவியை நன்கு வகிப்பார் என்று நம்பிக்கை தான் தெரிவித்திருக்கிறார்களே யன்றி, அவர் இந்தக் கடினமான பதவிக்குரிய விசேஷத் திறமை பெற்றிருப்பதாக யாரும் கூறவில்லை. எனவே, நெருங்கி வரும் தேர்தலில் காங்கிரஸின் வெற்றி வாய்ப்பை அதிகப்படுத்துவது ஒன்றுக்காகவே அவர் தேர்வு செய்யப்பட்டிருக்கவேண்டும் என்பது வெளிப்படை. பாகிஸ்தான் நெருக்கடியும், சீன நெருக்கடியும் ஒருபுறமிருக்க, தேர்தல் நெருக்கடியில் கைகொடுக்குமாறு நேரு குடும்பம் இப்போது தக்கபடி பயன்படுத்திக் கொள்ளப்பட்டிருக்கிறது.

ஸ்ரீ ஏ. பி. ஜெயின் அவர்களின் நடத்தை ஒன்றே காங்கிரஸின் போக்குக்குப் போதிய சான்றாகும். ''ஸ்ரீமதி இந்திரா காந்தியின் அபேட்சை நியமனத்தை ஆதரித்து அவருக்காகச் சக்தியுடன் பிரசாரம் செய்வதற்காகவே'' தம்மைக் கேரள கவர்னர் பதவியிலிருந்து விடுவிக்கக் கோரியதாக அவரே கூறியிருக்கிறார். அரசாங்க நிருவாகத்துக்கு மேலாகக் கட்சியின் ஆதிக்கத்தை ஏற்படுத்துவதற்காகக் காங்கிரஸ்காரர்கள் எவ்வளவு தூரம் செல்வார்கள் என்பதற்கு இது ஓர் அடையாளம். ஸ்ரீ ஜெயினைக் கண்டித்துப் பதவிக்குத் திரும்புமாறு சொல்லியிருக்க வேண்டிய மத்திய அரசாங்கம் அவ்வாறு செய்யாமல் அவருக்குக் கட்சியில் இடம் தருவதற்கும், அவரது தவறுகளை மறைப்பதற்கும் இயன்றதையெல்லாம் செய்திருக்கிறது. புதுதில்லியில் காங்கிரஸின் ஓர் அபேட்சகருக்காக அவர் ஆதரவுப் பிரசாரம் செய்தபோது அவர் கவர்னராகவே தான் இருந்தார்; அப்பதவியிலிருந்து நீக்கம் பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அதன் பிறகும், புதிய கவர்னர் பதவி ஏற்கும்வரை தமது உத்தியோகத்தைத் தொடர்ந்து வகிப்பதற்காக அவர் கேரளத்துக்குத் திரும்பியிருக்கிறார்.

இதற்கெல்லாம் காரணம் காங்கிரஸ்காரர்கள் அடுத்த தேர்தலில் அதிகப்பட்ச அநுகூலம் பெறுவதற்காக நேரு குடும்பத்தைச் சேர்ந்தவரை எப்படியாவது பிரதமர் பதவிக்குத் தேர்ந்தெடுத்துவிட வேண்டும் என்று கருதியதுதான். இந்தக் கட்சி எஜமானர்களை யெல்லாம் நடத்திச் சென்றவர் அக்கிராசனர் ஸ்ரீ காமராஜ் அவர்கள். தேசத்துக்குத் தேவைப்பட்டது பிரதம மந்திரி; கட்சிக்குத் தேவைப்பட்டதோ தேர்தலில் அதிர்ஷ்டம் கொண்டு வரக் கூடிய ஒரு தாயத்து. அதிர்ஷ்டக் கவசத்தைக் காங்கிரஸ் பெற்றுவிட்டது. இது தேசப் பற்றுக்கு உகந்ததா, கௌரவமான போக்குக்கு உகந்ததா என்றெல்லாம் கேட்டுப் பயனில்லை. இந்தத் தந்திரத்தை உணர்ந்து

உரிய நடவடிக்கை எடுப்பதே இப்போது எதிர்க் கட்சிகளின் பொறுப்பு. இனியும் தேர்தல் சமயத்தில் தேச நிருவாகம் காங்கிரஸ் மந்திரி சபையின் கையில் இருக்க விடக் கூடாது; பொதுத் தேர்தலுக்குக் கணிசமான காலம் முன்னதாகவே நிருவாகம் ராஷ்டிரபதியின் கைக்கு மாறவேண்டும்; அவர் கட்சிச் சார்பற்ற ஆலோசகர்களின் உதவியுடன் ஆட்சி புரிய வேண்டும் — இதை எதிர்க் கட்சிகள் யாவும் தீர்மானமாக வலியுறுத்த வேண்டுமென்பதே இன்றைய நிலவரத்தில் எனது முக்கியமான யோசனை. இவ்வாறு செய்ய இயலாமற்போனால் ஆதியில் காந்திஜி கையாண்ட கொள்கைப்படி எதிர்க் கட்சிகள் யாவும் ஒன்று சேர்ந்து தேர்தல்களில் ஒத்துழையாமை செய்து, மக்கள் வோட்டுப் போடக் கூடாது என்பதற்கு இயக்கம் நடத்த வேண்டும். இந்த யோசனையை எதிர்க்கட்சிகள் யாவும் ஆராயுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

1965-ம் ஆண்டில் காங்கிரஸ் கொள்கையின் 'சரித்திரப் பிரசித்தி பெற்ற' அம்சம் யாதெனில், சர்க்காருக்குரிய அதிகாரங்களைக் கட்சியின் காரியக் கமிட்டி அறிவேகமாக ஆக்கிரமித்ததேயாகும். ஆள்கிற கட்சிக்கு உட்பட்ட ஓர் அங்கமாகவே அரசாங்கம் நடைபெற வேண்டும் என்ற காங்கிரஸ் ஸ்தாபனத்தின் சட்டவிரோதமான கருத்தை ராஜ்ய சர்க்கார்களும், மத்திய சர்க்காரும் நிச்சயமாக ஒப்புக் கொள்ளத் தொடங்கி விட்டன. சோவியத் ருஷிய முறையைநோக்கி நம் நாட்டிலும் நிலை முன்னேறி வருவது கண்கூடு. ஆரம்பக் காலத்தில் அடால்ஃப் ஹிட்லரின் ஆட்சி எவ்வளவு வேகத்தில் சென்றதோ, அதே வேகத்தில் இந்தப் போக்கு முன்னேறி வருகிறது.

இப்போதைக்குக் காங்கிரஸ் கட்சி தனியார் தொழில்களைப் 'பொறுத்து'க் கொண்டிருப்பினும் அதனுடைய அடிப்படைக் கொள்கை, சர்க்காரே பொருளாதாரம் முழுவதையும் நிர்வகிக்க வேண்டும் என்பதுதான். இதனால்தான் தனியார் தொழில் கணக்கற்ற தடைகளால் நெரிக்கப்படுகிறது; ஓயாத தலையீடுகளால் துன்புறுத்தப்படுகிறது. இதன் விளைவாக, சுதந்திரத்துடன் தொழில்களைத் தொடங்கவும் நிருவகிக்கவும் அபிவிருத்தி செய்யவும் இயலாமற்போகிறது. சோஷலிஸ இலட்சியங்களைக் கொண்டுள்ள பல கட்சிகளும்கூட இத்தகைய சர்க்கார் சர்வாதிபத்தியத்தை எதிர்க்கின்றன. எனவே, அடுத்த பொதுத் தேர்தல்களில் காங்கிரஸை முறியடிப்பதற்காக இந்த சோஷலிஸ்ட் கட்சிகளும் சுதந்திரக் கட்சியுடன் ஒத்துழைத்து ஒரு தேசிய ஜனநாயக முன்னணியை உண்டாக்குவதில் தடங்கல் ஏதும் இல்லை. காங்கிரஸின் இடையறாத ஆட்சிக்கு ஓர் ஆரோக்கியமான மாற்று வேண்டும்.

இன்றைய லஞ்ச ஊழல்களையும், திறமையின்மையையும், ருஷிய மோஸ்தரை நோக்கி முன்னேறும் சட்டவிரோதமான போக்கையும் தடுத்து நிறுத்தி மக்களுக்கு நல்ல நிருவாகத்தை அளிக்க வேண்டும். இதற்கு எதிர்க் கட்சிகள் யாவும் சேர்ந்து ஒத்துழைக்க வேண்டியது அவசியம். அவை பிரிந்து நின்று, நடப்பதையெல்லாம் தடுக்க முடியாமல் வெறுமே பலவீனமாகப் பார்த்துக் கொண்டிருக்கும் நிலைமை இனியும் தொடர்வதற்கு அழுத்தமான காரணம் ஏதுமில்லை.

# கந்தன் கருணை

இவ்விதழ் அட்டையில் வள்ளி – தேவசேனா சமேதரான முருகப் பெருமானின் கோலத் திருவுருவைக் கண்டவுடன் வாசகர்களின் மனம் களிகொள்ளும் என்பது நிச்சயம். ஆனால் களிகொள்ளுவதோடு நின்றுவிடாது. அதையடுத்தே அதற்கு நேர்மாறான உணர்வும் அவர்கள் இதயத்தில் எழும். இவ்விதழில் 'கந்தன் கருணை' நிறைவு பெறுவதைக் குறிக்கவே அட்டையில் ஆறுமுகன் அமர்ந்திருக்கிறான் என்பதை வாசகர்கள் அநுமானிக்க முடியுமாதலால்தான், களிப்புக்கு மாறான உணர்ச்சியும் பெறுவார்கள் என்று கூறினோம்.

சுமார் பதினைந்து மாதங்களுக்கு முன்பு 'கல்கி'யில் 'கந்தன் கருணை' என்ற அற்புதமான தொடரைக் கந்தனின் பரம பக்தசிகாமணியும், தமது பரம பக்தியைச் சக்தி வாய்ந்த சொல்லில் வடித்துத் தரும் ஆற்றல் படைத்தவருமான திருமுருக கிருபானந்த வாரியார் அவர்கள் தொடங்கினார்கள். இராமாயணத்தையும், மகாபாரதத்தையும், பாகவதத்தையும் வெளியிடும் பேறு கொண்ட நாம் தமிழகத்தின் தனிப் பெரும் தெய்வமாகிய கந்தனின் திவ்விய சரிதத்தையும் தகுதி வாய்ந்த சான்றோர் ஒருவர் மூலம் வெளியிடுவதற்கு இறையருள் கூட்டி வைத்ததை நினைந்து நினைந்து மகிழ்கிறோம். கடந்த ஒன்றேகால் ஆண்டுகளாக நடைபெற்ற இந்த ஞான யக்ஞத்தில் வாசகர்கள் காட்டிய உள்ளார்ந்த ஈடுபாடு என்றும் மறக்கவொண்ணாதது. தொடரைச் சமைத்த திருமுருக வாரியாரவர்களுக்கும், அதனை ருசித்த வாசகர்களுக்கும் ஒருங்கே நன்றி கூறுகிறோம்.

வாரியாரவர்களுக்கும் நமது வாசகர்களுக்கும் ஏற்பட்டுள்ள இந்தத் தெய்வீகத் தொடர்பு இதோடு நீங்கிவிடப் போவதில்லை என்பதையும் இப்போதே தெரிவித்துக் கொள்ளுகிறோம். 'கந்தன் கருணை' முடிந்து விட்டதே என்று வாசகர்கள் தாபம் கொள்ள வேண்டியதில்லை; விரைவிலேயே வாசகர்களைத் திருமுருக வாரியார் சுவாமிகள் சந்திக்கும் வாய்ப்புக்களைக் 'கல்கி' ஏற்படுத்தித் தந்து பெருமை கொள்ளப் போகிறது என்று இப்போதே சொல்லி வைக்கிறோம்.

# என்ன சேதி?

- கேரளத்தில் ஹர்த்தால்
- நெசவாளர் நிலைமை
- வரிமுறையும் நரசிம்மனும்

இந்திய சர்க்கார் கேரள மக்களுக்கு ஜனவரி முப்பதாம் தேதியிலிருந்தே உணவு ரேஷன் விகிதாசாரத்தை அதிகப்படுத்தி விடுவதாக வாக்களித்தும் காங்கிரஸ் உள் ளிட்ட அத்தனை கட்சிகளும் வேலை நிறுத்தத்தில் ஈடுபடப் போவதாக அறிவித் தன. இவ்விதம் அச்சாகும் தருணத்தில் கேரளத்தில் உக்கிரமான மறியல் நடந்துள்ள செய்தி வந்துள்ளது. தான் எந்த நோக்கம் கருதி மறியல் செய்யவிருந்ததோ அந்த நோக்கம் நிறைவேறிய பின்பும் நடவடிக்கை யைக் கைவிடாதிருப்பது பரிதாப அரசியல் சூழ்நிலையை எடுத்துக் காட்டுகிறது. கேரளத் தில் மக்களைச் சரியான பாதையில் இட்டுச் செல்லும் பொறுப்புள்ள அரசியல் தலைவர்கள் கிடையாது என்பதுதான் தெளிவாகிறது. கேரள மக்களின் பரிதாப நிலையை உன்னி அநுதாபப்படத்தான் தோன்றுகிறது. பலாத் காரமின்றி வேறெதற்கும் மசியாத சர்க்காருக் காகவும் பரிதாபப்படுகிறோம்.

ஃ ஃ ஃ

பிப்ரவரி நான்காம் தேதி காஞ்சிபுரத்தில் தமிழ்நாடு நெசவாளர் காங்கிரஸின் 12வது மகாநாடு நடைபெறுகிறது. சென்ற பதி னேழு ஆண்டுகளாக கைத்தறி நெசவாளர்கள் நிம்மதியாக வாழ இந்திய சர்க்கார் எடுத்துக் கொண்ட முயற்சிகள் எல்லாம் வீணாகிக் கொண்டுதான் வருகின்றன. மில் துணிமீது செஸ் வரி விதித்துக் கைத்தறி நெசவாளர்க ளுக்கு என்று ஒதுக்கும் பணத்தை இடையில் யாரெல்லாமோ பெற்றுக் கொழுத்து வரு கிறார்கள். நெசவாளிகள் அன்றிருந்தாற் போலவே இன்றும் நிச்சயமற்ற வாழ்க்கை நடத்த வேண்டி யிருக்கிறது.

ஆகவே, இதற்கு என்ன பரிகாரம் என்று நெசவாளியைக் கேட்டால் "மில் துணிக்கு செஸ் வரி வேண்டியதில்லை; கைத்தறி கூட் டுறவுச் சங்கங்கள் வேண்டியதில்லை; இலாக் காக்கள், குமாஸ்தாக்கள், ஆபீஸர்கள் என்ற அமைப்புத் தேவையில்லை. வாழ விட்டால் போதும். அன்று ராஜாஜி சொன்னது தவிர வேறு உபாயமில்லை. கரை போட்ட வேஷ்டியும் சேலையும் கைத்தறிகள்தான் நெய்ய வேண்டும் என்று எங்களுக்கு ஒதுக்கி விட்டால் போதும். நாங்கள் பிழைத்துக் கொள்வோம்" என்பார்.

ஏர் பிடித்து உழும் விவசாயிகளுக்கு அடுத்தபடியாக நாட்டில் பெருவாரியாக உள்ள சமுதாயத்தினர் கைத்தறி நெசவா ளர்கள். இன்றைய ஆளும் காங்கிரஸ் கட்சி யையும், மந்திரிகளையும், அவர்களது ஏமாற்று வார்த்தைகளையும், நைப்பாசை மொழிகளை யும் நம்பாமல் ஒவ்வொரு நெசவாளியும் எங்கள் வோட்டு காங்கிரஸுக்குக் கிடையாது என்று முகத்தில் அடித்தாற்போல் சொல்லி யும் செய்தும் காட்டினால்தான் விமோசனம் பிறக்கும்.

ஃ ஃ ஃ

சென்னையிலும் புது தில்லியிலும் ஐ. ஸி. எஸ். அதிகாரியாக அபாரமான திறமை யுடன் பணியாற்றிவிட்டு, இப்போது ஐ.நா. பொதுக் காரியதரிசியின் அலுவலகத்தில் பிரதானமான பதவி வகிப்பவர் ஸ்ரீ ஸி.வி. நரசிம்மன் அவர்கள். சமீபத்தில் சென்னைக்கு வந்திருந்தபோது அவர் ஓர் உரையில் பின் வருமாறு குறிப்பிட்டார்:

> "வரிமுறைகளைப் பரிசோதனை செய்து பார்க்கும் சோதனையமாகியுள்ளது இந் தியா. உலகில் உள்ள எல்லா வரிமுறை களையும் இந்தியாவில் காண்கிறோம். நான் சர்க்காரின் மீது கண்டனம் தெரி விக்கவில்லை. எனினும் உண்மையாகவே கேட்கிறேன்: இந்தத் தாங்கமுடியாத வரி முறை, சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் உள்ள ஊக்கத்தை அழித்து, வரி தராமல் ஏய்க்கும் மனப்பான்மையை வளர்ப்பதோடு நில்லா மல், இன்னமும் கஜானாவுக்குப் போதிய பொருள் சேர்த்துத் தராதது ஏன்? இந்திய வரி முறையின் அமைப்பு முழுவதையும் பரிசோதிப்பதற்கு ஒரு பார்லிமெண்டரி குழு அமைப்பதற்குத் தருணம் வந்து விட்டதென எண்ணுகிறேன்."

இவ்வார்த்தைகள் தீவிரமான கவனத்துக் கும் நடவடிக்கைக்கும் உரியனவாகும்.



காங்கிரஸையும் 14 காரட்டாகப் பண்ணிவிட்டேன்!

★

ஸ்ரீ லால் பகதூர் அவர்கள் காலமாவதற்கு முன் மாலை எனக்கு எழுதியிருந்த கடிதத்தில், அவரும் ஜெனரல் அயூப் கானும் கண்ட முடிவுகளை நான் முற்றிலும் ஆதரிப்பேன் என்று நம்புவதாகக் கூறியிருந்தார். நான்மட்டுமல்ல, இந்தியாவில் உள்ள அறிவு படைத்த அனைவரின் ஆதரவையும் தாஷ்கெண்ட் பிரகடனம் பெறும் என்பது நிச்சயம். பிரகடனம் கூறும் இந்தியா—பாகிஸ்தான் நட்பை நன்கு போஷித்து வளர்ப்பதே தமது முக்கியமான பணி என ஸ்ரீமதி இந்திரா காந்தி கருத வேண்டும். இப்போது படைகளை அந்தந்த நாட்டுக்குப் பின்வாங்கிக் கொள்வது நட்புத் திட்டத்தின் தொடக்கமும், அதனுடைய ஒரு சிறிய அம்சமுமேயாகும். பொருளாதார ரீதியில் இரு நாடுகளும் ஒன்று சேர்ந்து உற்பத்தி புரிந்து, சுங்கவரியும் காப்புவரியுமின்றி இரு நாடுகளிடையே பண்டங்கள் பரிவர்த்தனை யாவதே நட்புக்கு நல்ல வேராக அமையும். பொருளாதார ரீதியில் போட்டி போடுவதற்குப் பதிலாக ஒருவருக்கொருவர் சார்ந்து இருப்பது என்று ஏற்படுத்திக் கொண்டால் நட்பு தானாகவே வளரும்.




★

'நம்முடைய ராணுவ வீரர்கள் இரத்தம் சிந்திச் சாதித்ததையெல்லாம் தாஷ்கெண்ட் ஒப்பந்தம் தூக்கி எறிந்துவிட்டது' என்று பாகிஸ்தானின் எதிர்க் கட்சித் தலைவர் மிஸ் ஜின்னா கூறியிருக்கிறார். இந்தியத் தலைவர்களில் சிலரும் இதேபோல் நமது வீரர்களின் இரத்தம் சாதித்ததைத் தாஷ்கெண்ட் ஒப்பந்தம் தூக்கி எறிந்து விட்டது என எண்ணக்கூடும். ஆனால் இதுவே லால் பகதூர் அவர்களுடைய வெற்றியின் இரகசியம். இரத்தத்தினால் சாதித்தது என்றோ ஒருநாள் 'தூக்கி எறியப்பட்டு'த்தான் ஆகவேண்டும். சந்தேக மிருந்தால் மகாபாரதத்தையும் காந்திஜி எழுதியவற்றையும் படியுங்கள்.

★

''தேசத்தின் முன்னேற்றப் பணிகளில் ஈடுபடாமல் காங்கிரஸின் உயர் தலைவர்கள் முக்கிய ஸ்தானம் பெறுவதற்குப் பேரம் நடத்திக் கொண்டிருந்தது கண்டு அடிமட்டத்திலுள்ள காங்கிரஸ்காரர்கள் கவலை காட்டினார்கள்'' என்று 'ஹிந்து' நிருபர் ஸ்ரீ கே. ரங்கஸ்வாமி எழுதி யிருக்கிறார். உயர் தலைவர்கள் மட்டுமல்ல; காங்கிரஸ் கட்சியில் அனைவருமே அவரவரது ஸ்தானத்துக்கேற்ப இதைத்தான் செய்து வருகிறார்கள். காங்கிரஸ் கூட்டம் முழுவதுமே இன்று பேரம் பேசுபவர்கள் நிறைந்துள்ளதாக ஆகிவிட்டது. பிரதமராக வேண்டியவரே தாம் விசேஷ பாக்கியம் பெற்றுள்ளதாய் நினைத்துப் போட்டியில் வெற்றிபெற்றதற்காக ஆனந்தக் கண்ணீரும் சிந்தியபோது இதில் அதிசயப்பட என்ன இருக்கிறது? நிருவாகத்தை எதிர்நோக்கியுள்ள பிரச்னைகளின் பயங்கரத்தைத் தேர்தலில் ஈடுபட்டிருந்த யாருமே உணரவில்லை எனத் தெளிவாகத் தெரிகிறது.

★

ராஷ்டிரபதி மந்திரிகளுக்குப் பதவிப் பிரமாணம் செய்து வைக்கும்போது பொதுமக்கள் அநுமதிக்கப்படுவதில்லை என்றே நினைக்கிறேன். எல்லாக் கட்சித் தலைவர்களும் இதற்கு அழைக்கப்பட்டிருப்பார்கள் என்றும் நான் நினைக்கவில்லை. எனவே இந்த விழாவுக்குக் காங்கிரஸ் அக்கிராசனரை அழைத்திருந்தது சர்க்காரையும் ஆள்கிற கட்சியையும் ஒன்றாகக் குழப்புவதற்கு இன்னோர் அடையாளமே என்று கருதுகிறேன். காங்கிரஸ் கட்சியின் பலத்திலேயே பிரதமர் தமது அந்தஸ்தைப் பெறுகிறார் எனினும், பதவி ஏற்றபின் கட்சி அக்கிராசனரிடம் அவர் விஷயங்களைத் தெரிவிப்பதும் கூட அவர் எடுத்துக்கொண்டுள்ள 'இரகசியப் பிரமாணத்து'க்கு முரணானதுதான் என்பது என் அபிப்பிராயம். நான் இவ்விவகாரங்களைச் சரியாகப் புரிந்துகொண்டிருக்கிறேன் எனில், பதவி ஏற்பு வைபவத்தில் காங்கிரஸ் அக்கிராஸனர் இடம் பெற்றது சர்க்காருக்கு மேலாகக் கட்சி இடம் பெற்றுள்ள கம்யூனிஸ முறையை நெருங்குவதற்கு ஒரு கவலை தரும் அடையாளமாகும்.

★

முக்கியஸ்தர்கள்தான் சர்வ தேச விமானப் பயணங்களில் பங்கெடுத்துக் கொள்ள இயலும். எனவே சர்வ தேசப் போக்குவரத்தில் உள்ள ஒரு விமானம் நொறுங்கி விழுவது உலகத்துக்குப் பயங்கரமான நஷ்டமாகவே இருக்கும். சமீபத்தில் நடந்த விமான விபத்தில் அணுசக்தி நிலையத்தின் பிரதான அதிகாரி ஸ்ரீ ஹோமி பாபா அவர்கள் காலமானது அனைவரின் கவனத்துக்கும் வந்துள்ளது. தேசத்துக்கு மிகவும் முக்கியத்வம் வாய்ந்த ஒரு ஸ்தானத்தை வகித்தவர் அவர். நாடு வருந்த வேண்டிய வேறு பலரும் இவ்விபத்தில் மாண்டிருப்பார்கள் என்பது நிச்சயம். துயரமுற்ற எல்லாக் குடும்பங்களுக்கும் அநுதாபங்கள்.

முக்கியஸ்தர்களுடன் மரணமுற்ற என்பத்தைந்து குரங்குகள் மட்டும் இவ்விபத்தில் அதிர்ஷ்டம் பெற்ற பிரயாணிகள். விபத்துக்கு ஆளாகி உடனடியாக மரணமடைந்திராவிடில் அவை 'ஸயன்ஸ்' ஆராய்ச்சிகளுக்கு ஆளாகியிருக்கும். மான்ட் பிளான்க் சிகரத்தில் அவை அடைந்த திடீர் மரணம் அவற்றைப் பொறுத்தமட்டில் ஒரு பாக்கியம் என்றே சொல்ல வேண்டும்.

# ஸ்ரீ ஷண்முகானந்தா பைன் ஆர்ட்ஸ் & சங்கீத சபா (Regd.)

பம்பாய் - 22



## இசை, நடன, நாடக விழா

10 - 2 - 66 முதல் 28 - 2 - 66 முடிய

இடம்: ஷண்முகானந்தா கலை அரங்கு

நிகழ்ச்சி நிரல் D. V.

| தேதி | நேரம் | நிகழ்ச்சி | |
|---|---|---|---|
| 10 - 2 - 66 வியாழன்<br>11 - 2 - 66 வெள்ளி | இரவு 8-00 | லால்குடி & ஸ்ரீமதி<br>பாலக்காடு மணி &<br>இராஜாமணி | –இரு வயலின்கள்<br>–மிருதங்கம் |
| 12 - 2 - 66 சனி<br>13 - 2 - 66 ஞாயிறு | மாலை 6-00 | ஜய லலிதா | –பரத நாட்டியம் |
| 14 - 2 - 66 திங்கள்<br>15 - 2 - 66 செவ்வாய் | இரவு 8-00 | மதுரை மணி<br>M. S. கோபாலகிருஷ்ணன்<br>பாலக்காடு மணி | –பாட்டு<br>–வயலின்<br>–மிருதங்கம் |
| 16 - 2 - 66 புதன்<br>17 - 2 - 66 வியாழன் | இரவு 8-00 | M. L. வசந்தகுமாரி<br>குழுவினர் | –பாட்டு |
| 19 - 2 - 66 சனி<br>20 - 2 - 66 ஞாயிறு | இரவு 8-00<br>மாலை 6-00 | பத்மினி குழுவினர்<br>,, | –நாட்டியநாடகம்<br>(இராமாயணம்) |
| 21 - 2 - 66 திங்கள்<br>22 - 2 - 66 செவ்வாய் | இரவு 8-00 | A. K. C. நடராஜன்<br>குழுவினர் | –கிளாரினட் |

## டி. கே. எஸ், சகோதரர்கள் நடிக்கும்

[மகத்தான நாடகங்கள்

| தேதி | நேரம் | நாடகம் |
|---|---|---|
| 23 - 2 - 66 புதன்<br>24 - 2 - 66 வியாழன் | இரவு 8-00 | **அப்பாவின் ஆசை** |
| 25 - 2 - 66 வெள்ளி<br>26 - 2 - 66 சனி | இரவு 8-00 ] | **கள்வனின் காதலி** |
| 27 - 2 - 66 ஞாயிறு<br>28 - 2 - 66 திங்கள் | மாலை 6-00<br>இரவு 8-00 | **ஔவையார்** |

கட்டணம் (சீஸன்): அங்கத்தினர்களுக்கு மட்டும் ரூ. 100, 50, 30, 20, 10
அங்கத்தினர் அல்லாதவர்களுக்கு ரூ. 125, 70, 40, 25, 15
(தினசரி): ரூ. 20, 10, 5, 3, 2

( 12 வயதிற்குட்பட்ட குழந்தைகளுக்கு சலுகை உண்டு )

*2-2-66 முதல் ரிசர்வேஷன் துவங்கப்படும். டிக்கட்டுகளுக்கும், ரிசர்வேஷன் முதலிய விவரங்களுக்கும் நேரிலும் டெலிபோனிலும் அறியலாம்*

போன்: 471588

பி. எஸ். சுப்பிரமணியன்
கே. எஸ். எஸ். மணி } செயலாளர்கள்



# செய்திப் படங்கள்

1. பெங்களூரிலுள்ள கோகலே பொது நிலையத்தில் ராஜாஜி என்டோமெண்ட் விரிவுரைகளில் முதல் பிரசங்கத்தை ஆற்றுவதற்காக டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் வந்தபோது ஸ்ரீ குண்டப்பா அவரை வரவேற்கிறார்.



2. மயிலாப்பூர் ஸினிவாஸ சாஸ்திரி ஹாலில் பிரஹலாத பக்தி விஜயம் சங்கீத நாடக நூல் வெளியீட்டு விழாவில் அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார் அந்நூலை ஸ்ரீ பார்த்தசாரதியிடம் வழங்குகிறார்.

3. அமெரிக்காவிலிருந்து அமரர் சாஸ்திரிக்கு இறுதி அஞ்சலி செலுத்த வந்த ராஜ்யக் காரியதரிசி டீன் ரஸ்க், அமெரிக்காவுக்குத் திரும்புவதற்கு முன்னால் தூதர் செஸ்டர் பௌல்ஸோடு ஸ்ரீமதி சாஸ்திரியையும் அவரது மகனையும் சந்தித்து அமெரிக்க மக்களின் அநுதாபத்தை மீண்டும் தெரிவித்துக் கொண்டார்.




### அத்தியாயம் இருபத்தொன்பது

## இதய சாம்ராஜ்யம்

எப்போதெல்லாம் விசுவநாதனின் மனம் தனிமையை நாடியதோ, எப்போதெல்லாம் அவனுக்கு ஓய்வு கிடைத்ததோ, அப்போதெல்லாம் அவன் துங்கபத்திரா நதிக்கு அப்பாலிருந்த குன்றுகளை நாடிச் சென்று விடுவது வழக்கம். சுறுசுறுப்பும், பரபரப்பும், மக்கள் கூட்டத்தின் நெரிசலும் நிறைந்த விஜயநகரத்துக்கு அருகிலேயே இயற்கைத்தேவி அமைதியும் அழகுமே உருவான பல அற்புதமான இடங்களைப் படைத்திருந்தான். துங்கபத்திரா நதியைக் கடந்துசெல்ல வேண்டுமென்றால் பாலத்

தின் வழியாகவும் செல்லலாம்; படகில் ஏறியும் செல்லலாம், — ஆற்றைக் கடந்து விட்டால், அங்கு திரும்பிய பக்கமெல்லாம் குன்றுகள்; அவற்றினிடையே இயற்கையாகவே அமைந்து விட்ட மண்டபங்கள், குகைகள், கூடங்கள்...

வெற்றித் திருநகரம் உருவாவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அங்கோர் அழகுத் திருநகரத்தை உருவாக்கி இயற்கைத் தேவி அதில் கொலுவீற்றிருக்கத் தொடங்கி விட்டாள். காலங்காலமாகத் துங்கபத்திரா நதி தீரத்தில் நடந்து வரும் அவளுடைய ஆட்சி யாராலுமே அழிக்க முடியாத ஆட்சி; இன்றும் அவளுடைய அற்புதமான சாம்ராஜ்யம் அங்கே நடந்து வருகிறது: என்றும் அதை அவள் அங்கு நடத்தி வருவாள்.

விசுவநாதன் சிறுவனாக இருந்தபோதே, அடிக்கடி அங்கு சென்று தன் தோழர்களுடன் சுற்றி வருவான். வானுற உயர்ந்து நிற்கும் வண்ணப் பாறைகளின் மேல் தாவிச் செல்வது, சுழித்தோடும் துங்கபத்திராவில் மூழ்கித் திளைப்பது, புதர்களிடையே மூலைத் துள்ள பாறைகளின் மீது அமர்ந்துகொண்டு இயற்கை அழகைப் பருகுவது முதலியவை அவனுடன் ஒன்றாக வளர்ந்த பழக்கங்கள். பொறுப்புக்களும், கடமைகளும் மிகுந்து, அவன் இளைஞனகிய பிறகும் அந்தப் பழக்கங்கள் அவனை விடவில்லை. வாரத்துக்கொரு முறையாவது மாலை வேளைகளில் அங்கு சென்று திரும்புவான். சமயங்களில் அரியநாத முதலியாரை மட்டும் உடன் அழைத்துச் செல்வதுண்டு.

மண்டபம் போன்று அமைந்த ஒரு மலையடிவாரமும், அதையடுத்துச் சுற்றிலும் பாறைகளால் சூழப் பெற்றிருந்த ஒரு திறந்த வெளியுமே அவனுடைய மாளிகையும் திறந்த வெளி முற்றமுமாகி விட்டன. எப்போது அங்கு சென்று திரும்பினாலும், திரும்பும்போது அவன் புதிய உற்சாகமும் ஊக்கமும் பெற்றவனாகக் காணப்பட்டான்.

விசுவநாதனுக்குப் பல தினங்களுக்குப் பின் அன்றுதான் ஓய்வு கிடைத்தது. ராமராயர் வடநாட்டிலிருந்து திரும்பி வந்து அவனுடைய கடமைச் சுமைகளை ஓரளவு குறைத்து விட்டார். அவர் கொண்டுவந்திருந்த செய்தி மகிழ்ச்சியளிக்கக்கூடிய செய்தியாக இல்லாவிட்டாலும் ஆறுதல் தரும் செய்தியாக இருந்தது. ஹூஸேன் காணேயும் ராணா நரசிம்மரையும் பாபர் போரில் முறியடித்து விட்டாராம். அதன் மூலமாகப் பாபரின் மொகலாய ஆட்சி டில்லியில் உதயமாகி விட்டது என்ற செய்தியோடு வந்திருந்தார் ராமராயர். ஆனாலும் கிருஷ்ண தேவராயரின் ஓலையைக் கண்ட பாபர் அதைக் கொண்டு சென்ற ராமராயரைப் பெருமையோடு வரவேற்று உபசரித்தாராம். விஜயநகரத்தோடு தாம் நட்புறவுடன் வாழ விரும்புவதாகவும் மறுமொழி அளித்திருந்தார். சமய உணர்ச்சியைத் தனி மனித வாழ்வுக்கும் சமய வேறுபாடற்ற பொதுவான ஆட்சி முறையைக் குடிமக்களின் வாழ்வுக்குமாக வைத்து நீதி வழங்குவதாகவும் அதில் அவர் குறிப்பிட்டிருந்தார். கிருஷ்ண தேவராயரின் ராஜதந்திரத்தை எண்ணி ஒருபுறம் பெருமையடைந்த விசுவநாதன், மறுபுறம் அவருக்கு நேர்ந்த துன்பத்தையும் நினைத்து வருந்தினன். எத்தனையோ விஷயங்களை அவனுடைய மனம் தனிமையிலிருந்து சிந்தனை செய்ய விரும்பியது. அதற்காகவே அவன் ஆற்றைக் கடந்து குன்றுகளை நோக்கிப் புறப்பட்டு விட்டான்.

வெயிலுக்கு மண்டபத்துக் கல்லில் சரிந்து கிடந்தவன், வெயில் குறைந்து மாலை மயங்கியவுடன் திறந்தவெளிக்கு வந்தான். நேரம் சென்றதே தெரியவில்லை. கண்ணிமைக்காமல் சுழித்தோடும் துங்கபத்திராவையே பார்த்துக் கொண்டிருந்தான். மலைப் புல்லின் நறுமணத்தைச் சுமந்து கொண்டு குளிர்த் தென்றல் மெல்ல வீசியது.

சிலம்பொலி கேட்டது. வளைகள் குலுங்கும் ஓசை எழும்பியது. வியப்போடு திரும்பிப் பார்த்தான் விசுவநாதன். அவனுடைய கண்களையே அவனல் நம்ப முடியவில்லை. பாறைகளின் இடுக்கில் குலுங்கும் பூங்கொடி போல் விழிகளை மலர மலர விழித்துக் கொண்டு அங்கே லட்சுமி வந்து நின்றாள். அவளை அந்த இடத்தில் தனிமையில் கண்டவுடன் தூக்கி வாரிப் போட்டது விசுவநாதனுக்கு. வழக்கமாக யாருமே அந்தப் பக்கம் வருவதில்லை. வன விலங்குகளின் நடமாட்டமுள்ள இடம் என்ற அச்சமும் பலருக்கு இருந்தது. 'ஆண்களே தனிமையில் வருவதற்கு அஞ்சும் இந்த இடத்துக்கு இவள் எப்படி வந்தாள்?'

''லட்சுமி!'' என்றான் விசுவநாதன் பரபரப்போடு.

''ஓ! இதுதான் உங்கள் மறைவிடமோ? அற்புதமான இடமாகத்தான் தேடிப் பிடித்திருக்கிறீர்கள்!''

''நீ எங்கே இங்கே வந்தாய்?''



''ஏண்டா, பையா! உங்கப்பா பூஜையில் இருப்பதாகச் சொன்னயே, இன்னமுமா பூஜை முடியவில்லை?''

''பூஜை அப்பவே முடிஞ்சு போச்சு!''

''பின்னே ஏன் இன்னும் வரவில்லை?''

''கற்பூரத்தை பத்தவைச்சிண்டிருக்கிறார்.''

''வரக்கூடாதென்றால் இப்போதே திரும்பி விடுகிறேன்!'' என்று பொய்க் கோபத்தோடு கூறி விட்டு, அவனருகில் வந்து அடுத்த பாறையில் அமர்ந்தாள் லட்சுமி.

''எப்படி உனக்கு இடம் தெரிந்தது?''

''உண்மையைக் கூறினால் அரியநாத முதலியார் என்மீது கோபித்துக் கொள்வார். அவர் கூறியதாக நான் உங்களிடம் சொல்லக் கூடாது! எதேச்சையாக என் தோழிகளுடன் தோணியில் நான் வந்து சேர்ந்தேன்! அவர்கள் அங்கே தொலைவில் தோணித் துறையில் இருக்கிறார்கள். உங்களை இங்கே தேடிக் கண்டுபிடிப்பதற்குள் நான் பட்ட பாடு....''

''காட்டு மிருகங்கள் அலையும் இடமாயிற்றே இது?''

''அப்படி ஏதாவது எதிர்ப்பட்டிருந்தால் எவ்வளவோ தேவலாமே! நான் குரல் எழுப்பிச் சத்தம் போட்டிருப்பேன்; நீங்கள் வாளை உருவிக் கொண்டு திடீரென்று வந்து குதித்திருப்பீர்கள்; இந்த அலைச்சல் எனக்கு மிஞ்சியிருக்கும்!'' என்று கூறிக் கலகல வென்று நகைத்தாள் அவள்.

''அரியநாத முதலியார் மிகவும் பொல்லாதவர்!'' என்றான் விசுவநாதன்.

''அவருடைய இந்த இடத்தை நான் பிடித்துக் கொண்டு விட்டேனும்; அதுதான் அவருக்கு வருத்தம்.''

''வருத்தமிருந்தால் உன்னிடம் சொல்லியிருக்கவே மாட்டார்; இவருடைய இடத்தை நீ பிடித்துக் கொண்டது அவருக்கு மகிழ்ச்சியைத் தந்திருக்கும்.''

''உங்களுக்கு?''

பேச நா எழவில்லை விசுவநாதனுக்கு. அவளையும் அவளைச் சுற்றிச் சூழ்ந்திருந்த இயற்கை வனப்பையும் புதிய கண்களோடு மீண்டும் பார்த்தான் விசுவநாதன். அவனுடைய நெஞ்சிலிருந்து நீண்ட பெருமூச்சு எழுந்து வெளியே தவழ்ந்த குளிர்த் தென்றலுடன் கலந்தது.

''லட்சுமி! எத்தனையோ மாலைப் பொழுதுகளில் நீ இதற்கு முன்பே என்னோடு ஒன்றாக இங்கு வந்திருக்கிறாய். அப்போதெல்லாம் நீ செருக்குற்றிருந்தவள்; என்னை அலட்சியம் செய்து கொண்டிருந்தவள்; என் உள்ளத்தைத் துன்புறுத்தி விளையாடியவள்; ஆனாலும் உன்னை என்னால் மறக்க முடியவில்லை. இந்த இடத்துக்கு நான் மட்டும் தனித்து வந்த போதெல்லாம் உன்னையும் என்னுள்ளே சுமந்து கொண்டு வந்திருக்கிறேன். இப்படி நீயே என்னைத் தேடி வரும் ஒரு நாள் வரப் போகிறதென்று நான் கனவிலும் நினைக்கவில்லை.'' — விசுவநாதனின் குரல் தழுதழுத்தது.

லட்சுமியின் உள்ளம் ஆயிரமாயிரம் பூஞ்சிட்டுகளாக மாறி வானத்தில் பறந்தது; தேன் பாகாய் உருகித் துங்கபத்திரையாகப் பெருக்கெடுத்தது. மெல்ல அவனருகில் நெருங்கி வந்து அவன் கரங்களிரண்டையும் பற்றி அவற்றில் தன் முகத்தைப் பதித்துக் கொண்டாள். கண்ணீர்த் துளிகளின் வெப்பத்தை உணர்ந்து மெய் சிலிர்த்தான் விசுவநாதன்.

''ஒரே ஒரு வேண்டுகோள்...'' என்று தடுமாறினாள் லட்சுமி.

''என்ன?''

''நகரத்துக்கு அருகிலேயே இப்படி ஒரு சாம்ராஜ்யத்தை உங்களுக்கென்று தனியாகத் தேடிக் கொண்டிருக்கிறீர்களே, இனி இது நம்முடைய சாம்ராஜ்யமாக இருக்கட்டும். நான்கூட என் வாழ்நாளில் என்றுமே இவ்வளவு ஆனந்தமடைந்ததில்லை. இந்த இடத்துக்கு ஏதோ ஓர் அற்புத சக்தி இருக்கிறது. இங்கே இருந்து கொண்டு நீங்கள் என்னை நினைத்ததாகக் கூறுகிறீர்களல்லவா? அந்த நினைவுதான் என்னுடைய பழைய நினைவையும் மாற்றி யிருக்கிறது. என்னையும் இங்கு கொண்டுவந்து சேர்த்திருக்கிறது.''

நேரம் போனதே தெரியவில்லை அவர்களுக்கு. லட்சுமி மீண்டும் அவனுடைய வலது கரத்தைப் பற்றி அதன் ரேகைகளை உற்றுப் பார்த்தாள்.

''என்ன பார்க்கிறாய்?''

''நீங்கள் மிகப் பெரிய சக்கரவர்த்திகளாக உயர்ந்து கோட்டைகள் கட்டுவீர்கள்; குடி மக்களைக் காப்பாற்றுவீர்கள்; குளங்கள் வெட்டுவீர்கள்; கோயில்களை எழுப்புவீர்கள்.. ஆனால் என்னை எப்படி வைத்துக் கொள்வீர்கள் என்று அந்தப் பெரியவர் சொல்லவில்லையே? உங்கள் சாம்ராஜ்யத்தில் எனக்கென்ன இடம் என்று நான் பார்க்கிறேன்!''

''நீயே என்னுடைய சாம்ராஜ்யப் பணிகளிலெல்லாம் பெரும் பங்கு கொள்ளப் போகிறாய். என்னுடைய முதல் அமைச்சர் நீயேதான்!'' என்று பெருமையோடு கூறினான் விசுவநாதன். ''உன்னுடைய அந்தத் தனிப் பண்புதான் என்னை உன்னிடம் இவ்வளவு நாட்களாக ஈர்த்து வந்தது. என் செயல்களுக்குப் பின்னே நீயும் இரண்டறக் கலந்திருப்பாய்!''

லட்சுமி அந்தப் பாறையில் மெய்மறந்து சாய்ந்தாள். விசுவநாதனுக்கு அப்போது ரோஜா மாலை அங்கே நெளிந்து துவளுவது போல் தோன்றியது.

## அத்தியாயம் முப்பது

# மாலைச் சிறுபொழுது

**க**ண்ணிமைக்கவும் மறந்து இரு செம்பொற் சிலைகளென விசுவநாதனும் லட்சுமியும் ஒருவரையொருவர் விழித்து நோக்கியவாறே மெய்மறந்திருந்தனர். லட்சுமி விசுவநாதனின் உள்ளத்து ஆழத்தை ஊடுருவிச் சென்று அங்கு எதையோ தேடிப் பார்க்க முயன்றாள். அவனைக் காண்பதற்காக அவள் அங்கு வந்த போது அவன் அமர்ந்திருந்த தோற்றம் அவள் நினைவுக்கு வந்தது.

''பற்றற்ற யோகிபோல் நடந்து கொள்வீர்கள் என்று அந்தச் சோதிடர் கூறினாரல்லவா?'' என்று தன் மௌனத்தைக்

கலைத்தான் லட்சுமி; "உங்களை இங்கு தனிமையில் கண்டபோது எனக்கு அந்த நினைவுதான் வந்தது."

"பற்றற்ற யோகிகள் பரம்பொருளைப் பற்றிக் கொள்ளத் துடிக்கிறார்கள். எனக்கு அந்த அளவுக்கு மனப் பக்குவம் ஏற்படவில்லை. நான் இந்த மண்ணின் மீதும் இதன் மக்கள் மீதும் இதை ஆளும் சக்கரவர்த்திகள் மீதும் பற்றுதல் வைத்திருக்கிறேன்."

"வேறு யார்மீதுமே பற்றுதல் இல்லை போல் இருக்கிறது!"

"உன் கருத்து எனக்குப் புரிகிறது" என்று கூறிப் புன்னகை செய்தான் விசுவநாதன். " 'நான்' என்றால் 'நாம்' என்று பொருள்; இதற்கு நீயும் உடன்படுவாய் என்று நம்புகிறேன்."

லட்சுமிக்கு இப்போது அவன் மனம் பளிச்சென்று புலப்பட்டது. தாங்க முடியாத பெருமையோடு, "அப்படியானால் நீங்கள் ஆட்சி செய்யப் போகும் தெற்கத்தி சாம்ராஜ்யத்தைப் பற்றி இப்போதே சிந்தனை செய்யத் தொடங்கி விட்டீர்கள் போலும்!"

"விஜயநகர சாம்ராஜ்யம் முழுவதுமே என்னுடைய சாம்ராஜ்யம் தான். இதில் தெற்கு வடக்கு, கிழக்கு, மேற்கு என்ற பாகுபாடே எனக்கில்லை. இதைச் சிதைந்து போகாமல் காப்பாற்றுவதில் என் சிறு பணியைச் செய்ய முடிந்தால் அதுவே போதும் எனக்கு."

"நீங்கள் கூறுவதைப் பார்த்தால் சாம்ராஜ்யத்தின் நிலை கவலைப்படுவதற்குரியதாகத் தோன்றுகிறதே?" என்றாள் லட்சுமி.

"இதை இந்த உன்னதமான நிலைக்குக் கொண்டு வந்து இதில் வாழும் கோடானு கோடி மக்களைப் பகைவர்களின் பயமின்றியும், பசியின் பயம் இன்றியும் வாழச் செய்த சக்கரவர்த்திகள் இப்போது செயலிழந்து கிடக்கிறார்கள். பரத கண்டத்தின் வடக்கே வாழ்பவர்கள் வழக்கம் போல் தங்களுக்குள் உட்பகையை வளர்த்துக் கொண்டு டில்லியை பாபரிடம் பறி கொடுத்து விட்டார்கள். இந்த நிலையில் விஜயநகரத்தின் வருங்காலத்தைப் பற்றி எப்படி நம்மால் கவலைப்படாமல் வாழ முடியும்?"

"சக்கரவர்த்திகளோடு நெருங்கிப் பழகி அவர்களுடைய ஸ்வீகாரப் புத்திரராகவே மாறிவிட்டீர்கள்! அவர்களுக்குப் பிறகு உங்களிடமே இந்த சாம்ராஜ்யத்தின் ஆட்சிப் பொறுப்பு வருமானால் சிறப்பாக இருக்கும்" என்றாள் லட்சுமி.

"அந்த ஆசை எனக்கு இல்லை" என்றான் விசுவநாதன்.

"பிறகு எதற்காக இவ்வளவு மனக்கவலை உங்களுக்கு?"

"சக்கரவர்த்திகளுக்கு முன்பிருந்த தலைமுறை வரையிலும் விஜயநகரம் பகைவர்களின் படையெடுப்பால் படாத பாடு பட்டிருக்கிறது. சக்கரவர்த்திகள் ஆட்சிக்கு வந்த பிறகுதான் இங்கே குடிமக்கள் பகைவர்களின் பயமில்லாமலும், பசிக் கொடுமையின் பயமில்லாமலும் மனிதர்களாகத் தலை நிமிர்ந்து வாழ முடிகிறது. சக்கரவர்த்திகளின் காலத்துக்குப் பிறகு இளம் தலைமுறையினரான நீயும் நானும்தான் இந்த




*கார் ஓட்டுபவர் :*
தவறி உங்களை இடித்துத் தள்ளி விட்டேன்! அதற்கு உங்களுக்கு நான் என்ன கொடுக்க வேண்டுமோ, சொல்லுங்கள்! கொடுத்து விடுகிறேன்!

*விழுந்தவர் :*
போன தடவை என்ன கொடுத்தீர்களோ, அதையே கொடுங்க!

நாட்டின் பொறுப்பை ஏற்றுக் கொள்ளவேண்டும். நாடு நன்றாக இருந்தாலே வீடு நன்றாக இருக்கும். சக்கரவர்த்திகளுக்காக இதுவரை அஞ்சிப் பயந்திருந்த பகைவர்கள், அவர்கள் மறைந்தவுடன் மீண்டும் இதன்மேல் படையெடுத்து இதை அழிக்க முற்படுவார்கள்."

"என்ன!" திடுக்கிட்டாள் லட்சுமி.

"ஆமாம்; பாபர்கூட நம்முடன் நட்புறவு கொள்ள இசைந்திருக்கிறார் என்றால், அதற்குக் காரணம் சக்கரவர்த்திகளின் வலிமையான ஆட்சிதான். தெலுங்கர், கன்னடியர், தமிழர் முதலிய பல்வேறு மொழிகள் பேசுவோரும், இந்து, இஸ்லாம், கிறிஸ்துவம் ஆகிய பல்வேறு சமயத்தவரும் இங்கு வாழ்கிறார்கள். இவ்வளவு வேற்றுமைகளுக்கிடையிலும் மக்களிடையே ஓர் ஒற்றுமை காணச் செய்திருக்கிறார்கள் நம் சக்கரவர்த்திகள். இந்த ஒற்றுமையும், வலிமையும் நிலைக்கும் வரையிலும்தான் நம் சாம்ராஜ்யமும் நிலைக்கும். ஒற்றுமைதான் வலிமை. அந்த வலிமைதான் நமக்கு நட்பைத் தேடித்தரும்."

வியப்போடு விசுவநாதனின் முகத்தை உற்றுப் பார்த்தாள் லட்சுமி. 'இந்த இளம் வயதில் இவ்வளவு பெரிய ராஜதந்திரியாகி விட்டாரே இவர்!' என்பது போலிருந்தது அவள் பார்வை. நீறுபூத்த நெருப்பு அவன் என்ற நினைவு அவளுக்கு மீண்டும் வந்தது.

"லட்சுமி! நீகூட என் வலிமையைத் தெரிந்து கொண்ட பிறகுதான் என்னோடு நட்புடன் பழகுகிறாய். வலிமைக்கு நட்பைத் தேடிக்கொள்ளும் ஒரு சக்தி இருக்கிறது. என்னைக் கோழை என்றும் வலிமையற்றவன் என்றும் நினைத்திருந்தவரையிலும் நீயே என்னைப் பகைத்துப் புறக்கணித்தாயல்லவா?"

கோபம் வந்து விட்டது லட்சுமிக்கு. "நான் ஒன்றும் உங்களைப் பகைத்துக்கொள்ளவில்லை!" என்று சிணுங்கினாள்.

"பகைத்திருந்தால்கூட நான் பொறுத்திருப்பேன். நீ என்னை அலட்சியப்படுத்தினாய்; பரிகசித்தாய்; ஏளனப்படுத்தினாய்."

திடீரெனத் தேம்பி அழத் தொடங்கி விட்டாள் லட்சுமி. மாலை மாலையாகக்

கண்ணீர் வடித்தவாறே, ''அது ஒன்றும் என் தவறில்லை'' என்று சீறினள். ''நீங்கள் தான் அப்படிக் கோழைபோல் நடித்தீர்கள்; இன்னும் நடித்துக் கொண்டு வருகிறீர்கள்.''

'' வலிமை இருந்தால் செருக்கும் இருக்க வேண்டு மென்பதில்லை. வலிமைச் செருக்கே எதிர்ப்பும் பகையும் தரும். வலிமையும் அடக்கமும் நம் இரு கண்களுக்கு ஒப்பாக இருக்க வேண்டும். அடக்கமில்லாதவர்களிடம் யாரும் நட்புக் கொள்ள மாட்டார்கள்.''

''இந்த சாம்ராஜ்யத்தில் வீரத்துக்கும் தியாகத்துக்குமே மாலையிட வேண்டு மென்ற ஓர் எண்ணம் நிலவுவதால், நானும் அவற்றைத் தான் உங்களிடம் எதிர் பார்த்தேன். அதே எண்ணத்தில் வளர்ந்தவள் தானே நான்?''

''அந்த எண்ணம்தான் நமது சாம்ராஜ்யம்!'' என்று உற்சாகமாய்க் கூவினன் விசுவநாதன். ''நாடு என்பது எங்கோ தனியாக இல்லை. நாடு என்றுல் அதற்கொரு பரந்த லட்சியம் இருக்க வேண்டும். அந்த லட்சியம் குடிமக்கள் ஒவ்வொருவரின் உள்ளத்திலும் குடிகொண்டிருக்க வேண்டும். விஜயநகரத்தை அப்படி ஒரு லட்சிய சாம்ராஜ்யமாகச் செய்து விட்டார்கள் நமது சக்கரவர்த்திகள். அவர் மறைந்தாலும் அவர் லட்சியம் மறையாதபடி நாம் பார்த்துக் கொண்டால் நமக்குப் பின் வரும் பல தலைமுறைகளும் சிறப்பாக வாழ முடியும்.''

லட்சுமிக்கு அவன் பேச்சில் சுவை இருந்தது. அவள் சாளுவ நரசிம்மரின் குமாரத்தி. அவளைச் சிறு பிராயம் முதலே தமது கடமைகளில் ஆர்வம் கொள்ளச் செய்திருந்தார் அவர். பெரும்பாலான விஜய நகரத்துப் பெண்கள் தங்களை அழகுப் பதுமையர் என நினைத்துக் கொண்டிருப்பது போல் அவள் நினைத்துப் பழகவில்லை.

''உங்களுடைய லட்சியம்தான் என்ன? அதை நான் தெரிந்து கொள்ளலாமா?''என்று ஆவலோடு அவள் கேட்டாள்.

அவள் அப்படிக் கேட்டது அவனுக்கு மிகுந்த ஆனந்தத்தைக் கொடுத்தது. ''சக்கரவர்த்திகள்தாம் எனக்கு சாம்ராஜ்யம். அவர் கட்டளைகளை நிறைவேற்றுவதே என் லட்சியப் பணி'' என்றுன்.

''தெற்கே உங்களைப் பாண்டிய நாட்டுக்கு அனுப்பினுல்?'' என்று சோதிடர் கூறியதை நினைவில் வைத்துக் கொண்டு அவள் கேட்டாள்.

''அங்கே என்னை அனுப்பமாட்டார்கள். அப்பாவே பாண்டியனிடம் நாட்டைக் கொடுத்து விட்டு இங்கே திரும்பப் போவதால், நான் இங்குதான் தங்கும்படியாக இருக்கும்.''

அந்தச் செய்தியும் அவளுக்கு மகிழ்ச்சியைத்தந்தது. ''அப்படியானுல் உங்களுக்கு ஒய்வு கிடைக்கும்போதெல்லாம் நாம் இங்கு சந்திப்போம்!'' என்றுள் நாணித் தலை கவிழ்ந்து கொண்டே.

''விஜயநகரம்எத்தனையோ வகைகளில் பாக்கியம் செய்திருக்கிறது. அவை எல்லாவற்றிலும் சிறந்தது அது பிறந்திருக்கும் இந்த அற்புதமான சூழ்நிலைதான். சுற்றிலும்மலைகள், வளைந்தோடும் துங்கபத்திரா, பசுமை நிறைந்த மண் வளம்....... உலகத்திலேயே இப்படி ஓர் அற்புதமான நகரம் இல்லை யென்று சொல்கிறார்கள்!''

''அதிலும் இந்த இடத்தைப் போல் வேறுஓர் இடம் இருக்கவே இருக்காது!''

மாலை மயங்கி அந்திப் பொழுதாக மாறியது. லட்சுமியின் பணிப்பெண்கள் அவளைக் கூவி அழைக்கும் குரல்கள் ஒலித்தன.

''வாருங்கள்; நீங்களும் என்னேடு ஒன்றுகப் படகில் புறப்படலாம். பாலத்தின் வழியே செல்வதென்றுல் இருட்டி விடும்'' என்று அவனையும் உடன் அழைத்துக் கொண்டு கிளம்பினுள் லட்சுமி.

பணிப் பெண்கள் அவர்கள் இருவரையும் ஒன்றுகக் கண்டவுடன் தங்களுக்குள் இரகசியம் பேசி நகைத்துக் கொண்டார்கள். லட்சுமியின் பணிப் பெண்கள் படகில் ஏறிக்கொண்டு துடுப்பு வலிக்கத் தொடங்கியபோது, அதை அவர்களிடமிருந்து வாங்கித் தானே படகைச் செலுத்தினுன் விசுவநாதன். அவனருகில் சென்று படகின் விளிம்பில் அமர்ந்து கொண்டு வேடிக்கை பார்த்தாள் லட்சுமி.

நடு ஆற்றில் படகு சென்றது. சீறிப் பொங்கும் வெள்ளத்தின் போக்கைச் சிறிது கூட லட்சியம் செய்யாதவன் போல் அவன் படகைச் செலுத்திக் கொண்டிருந்தான்.

தொலைவில் தெரிந்த நீர்க் குமிழியைச் சிறிது அச்சத்தோடு உற்றுப் பார்த்தாள் லட்சுமி. அதைக் கண்ணுற்ற அவளுடைய பணிப் பெண்கள், ''அதோ, முதலை வருகிறது, முதலை!'' என்று கூவினர்கள்.

அவ்வளவுதான் ! லட்சுமி தன்னையும் மறந்து அச்சத்தோடு விசுவநாதனின் தோளைப் பற்றிக் கொண்டாள். விசுவநாதன் சிறிதும் எதிர்பாராத புத்துணர்வோடு அவளைத் திரும்பிப் பார்த்து, ''அது முதலையல்ல; பாறை!'' என்றுன். பெண்கள் சிரிப்பொலி படகின் பின்புறம் குதூகலத்துடன் எழுந்தது. பொய்க் கோபத்தோடு அவர்களை விழித்துப் பார்த்தாள் லட்சுமி. **(தொடரும்)**



ஒருசமயம் நேருஜி தம் வீட்டிலிருந்து இரண்டு உயர்ந்த ஜாதி நாய்களை டில்லி போலீஸ் இலாகாவுக்குப் பரிசாகக் கொடுத்தார். அவர் அளித்த பரிசுக்கு வந்தனம் செலுத்திய போலீஸார், நாய்களைச் சுமார் இரண்டு மாதங்கள் கழித்துத் தீன்மூர்த்தி இல்லத்திலிருந்து அழைத்துப் போனர்கள். சில நாட்கள் கழித்துப் போலீசுக்கு ஒரு தாக்கீது நேருஜியின் இல்லத்திலிருந்து வந்தது. கருத்து ''இரண்டு மாதங்கள் நாய்களைப் பராமரித்ததற்கான செலவை அனுப்புங்கள்.''

காரணம் அரசாங்க ஆடிட்டர்கள் இந்தச் செலவை ஆட்சேபிக்கக் கூடுமாம்.




## 66. மங்களம், சுப மங்களம்!

வேடர்கள் வந்து பெருமானைச் சூழ்ந்தனர். ''நம் குலக் கொடியைக் கவர்ந்தவன் நம்மைக் கண்டு ஓடவுமில்லை; அஞ்சவுமில்லை. அடியுங்கள்; பிடியுங்கள்'' என்று கூறி வேடருடன் பாண மழை பொழிந்தான் நம்பிராசன். அந்தக் கணைகள் யாவும் கருணையங் கடலாகிய கந்தவேள் மீது மலர்களைப் போல் வந்து வீழ்ந்தன. முருகப் பெருமான் திருவுளஞ் செய்ய, சேவல் எழுந்து நின்று கொக்கரித்துக் கூவியது. அந்த ஒலியிலேயே நம்பிராசனும் அவன் குமாரர்களும் சுற்றத்தாரும் மாய்ந்தனர்.

பிரணவ நாதம் பிறந்ததும் புலன்கள் ஒயத்தானே வேண்டும்?

தந்தையும் உடன் பிறந்தாரும் தமரும் மாண்டதைக் கண்ட வள்ளிப் பிராட்டியார் மனம் பதைத்து வருந்தினார். அம்மையாரின் அன்பைக்காணும் பொருட்டு ஐயன் சோலையை விட்டு நீங்கிச் சென்றார். அம்மையாரும் அவரைத் தொடர்ந்து சென்றார். அப்போது வழியில் நம்பிராசன் செய்த தவப் பயனைப் போல் நாரதர் எதிர்ப்பட்டார். ''சுவாமி! பெற்ற பிதாவையும் பிற சுற்றத்தாரையும் வதைத்து எம் பிராட்டியைக் கொண்டேகுதல் தகுதியாமோ? அது அம்மைக்கு வருத்தத்தைத் தருமே'' என்றார் நாரதர். எம் பெருமான் மீண்டும் சோலைக்குச் சென்று, ''நம்மோடு போரிட்டு இறந்த உன் சுற்றத்தாரை எழுப்புவாயாக'' என்று பணித்தருளினார். பற்று அற்ற ஆன்மா புலன்களோடு கூடியிருப்பினும் ஒழுக்கம் தவறாது. இதைக் காட்டவே சுவாமி வள்ளியினது சுற்றத்தை அவளே எழுப்ப அருள் புரிந்தார். வள்ளி அருள் பாலித்தார். துயில்நீங்கி எழுவது போன்று நம்பிராசன் தன் சுற்றத்தோடு எழுந்தான். வள்ளிக்கு யாவரையும் வாழ வைக்கும் வல்லமை உண்டு; எனினும், கணவரின் கட்டளைக்காகவே காத்திருந்தார் என்பது இதனால் தெரிகிறதல்லவா?

லீலைகளெல்லாம் நிறைவு செய்து விட்ட எம்பெருமான் உயிர்த்தெழுந்த நம்பிராசனுக்கு ஆறுதிருமுகமும் பன்னிரு இருக்கரமும் கொண்டு காட்சியளித்தார். நம்பிராசன் வேட்டுவர்களுடன் ஆறுமுகப் பெருமானின் திருவடிகளில் வீழ்ந்து பணிந்து எழுந்தான். உச்சி கூப்பிய கையனாய் ஆனந்தக் கண்ணீர் சொரிந்தான். ''தேவ தேவா! எங்கள் சேரியைக் காக்கும் நீரே இவ்வாறு எமது குலக் கொடியைக் களவு செய்து எங்கள் குலத்துக்குத் தீராத பெரும் பழியை நல்கின் யாம் என் செய்வோம்? அன்னையே மகவுக்கு விடமூட்டின் கதியாது? தேவரீர் இனியேனும் எம் சிற்றூர்க்கு வந்து அக்கினி சாட்சியாக முறைப்படி எம் புதல்வியை மணந்து கொண்டு தங்களுடைய பதிக்கு அழைத்துச் செல்வீராக'' என்று வேண்டி நின்றான்.

அவனது வேண்டுகோளுக்கு இரங்கிய கந்தக் கடவுள் வள்ளிநாயகியுடனும்

நாரதருடனும் சிற்றூருக்கு வந்தருளினர். நம்பி தனது சிறு குடிலில் புலித்தோல் மீது எம்பிரானைப் பிராட்டியாருடன் எழுந்தருளச் செய்தான். எளியவர் தெய்வமான முருகன் குறவர்க்கு இன்னருள் புரிந்தான். வேடர், குறவர், மறவர் முதலியோர் "எமது குல தெய்வமே எம் இளவரசியை மணக்க வந்து விட்டதே" என்று உள்ளம் உவந்து பேரானந்த பரவசமுற்றுப் போற்றி நின்றார்கள்.

கந்தவேள் தமது மருங்கில் வீற்றிருந்த வள்ளிநாயகியாரைத் திருவருள் நோக்கம் புரிந்தருள, அம்மையார் மானுட வடிவம் நீங்கிப் பண்டைய தேவ வடிவு பெற்று விளங்கினர். அதனைக் கண்ட நம்பி முதலியோர், "இப்பிராட்டியார் எம்மிடம் தோன்றி வளர்ந்தது எமது மாதவமே" என்று இறும்பூதெய்தினர். சுப முகூர்த்தத்தில் வேட்டுவ மன்னன் நம்பி, வள்ளிப் பிராட்டியாரின் திருக்கரத்தை மயிலேறும் வள்ளல் திருக்கரத்தில் வைத்து "எமது தவப் புதல்வியை உங்களுக்குத் திருமணம் செய்து தந்தேன். ஏற்றுக் கொண்டு அருள் புரிவீர்" என்று தண்ணீர்த் தாரை வார்த்தான். நம் பெருமானின் திருவருட் குறிப்பால் நாரதர் வேள்வித் தீ வளர்த்து ஏனைய விதிமுறைகளைச் செய்தனர்.

ஆலமுண்ட நீலகண்டப் பெருமான், பிரம்மன், திருமால், தேவர்கோமான் முதலிய கணங்கள் சூழ உமாதேவியாருடன் வந்தருளி விண்ணில் நின்று வள்ளிப் பிராட்டியாரைக் கந்தவேள் மணந்து கொண்ட வைபவத்தைக் கண்டருளினர். திருமாலாதிதேவர்கள் பூமழை பொழிந்து முருகவேளைப் போற்றித் துதி செய்தனர். ஆறுமுகக் கடவுள் அம்மையப்பரை வணங்கி ஏனைய தேவர்களுக்குத் திருவருள் புரிந்தார். சிவபெருமான் தேவர்குழாத்துடன் மறைந்தருளினர்.

தனிப் பெருந் தலைவராகிய கந்தப் பெருமான் தனக்கு மருகராகும் பேறு பெற்ற நம்பிராசன் பெரிதும் மகிழ்ந்தான். தேனும் தினைமாவும் பழங்களும் படைத்து, "தாங்களும் தேவியும் உண்டருள வேண்டும்" என்று கந்தப் பெருமானை வேண்டிக் கொண்டான். பெருமான் அவற்றை உட்கொண்டு அருள்புரிந்தார். பின்னர், நம்பிராசனை நோக்கி, "நாம் வள்ளியுடன் திருத்தணியில் சென்று இருப்போம்" என்று கூறினர். மகளை என்றேனும் ஒரு நாள் பிரிந்துதானாக வேண்டும் என்பதால் நம்பி உடன்பட்டான். தாயும் பாங்கியும் செவிலியும் வள்ளிப் பிராட்டியாரைத் தழுவி நல்லாசிகள் கூறிப் பிரியாவிடை தந்தனர். முருகவேள் நம்பிராசனை நோக்கி, "நீ தேவருந் தொழச் சிற்றூரை அரசு புரிந்து பின் நம் பக்கல் வரக்கடவாய்" என்று அருள் புரிந்தார்.

ஐயன் அம்மையுடன் தணிகை மாமலைக்கு விண் வழியாக வந்து சேர்ந்தார். தேவதச்சனால் முன்னரே அங்கு அமைக்கப்பட்ட திருக் கோயிலில் உலகமெல்லாம் உய்யுமாறு வள்ளியம்மையாருடன் எழுந்தருளியிருந்தார்.

எளிய வள்ளி அன்பு ஒன்றைக் கொண்டே இறைவனை நேசித்தார். பெருமான் தாமே வள்ளலாக இருந்தும் அன்புக்குக் கட்டுப்பட்டுக் குறத்தியை வேடரிடம் யாசித்துப் பெற்றுக் கொண்டார்.

வனசரர் கொடிச்சிதனை யாசிக்கும்
யாசகனும்

என்ற நயம் மிகுந்த தொடர் இதையே குறிக்கும். அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையாகிய இறைவன் எளிய ஆன்மாக்கள்பால் வைத்துள்ள பெருங்கருணைத் திறத்தை விளக்குவது வள்ளித் திருமணம். ஜீவனும் சிவனும் ஐக்கியப் படுதலே வள்ளித் திருமணம்.

வடிவேலண்ணல் வள்ளியம்மையாருடன் திருத்தணிகை மலைமீது உலகெலாம் உய்ய வீற்றிருக்கும்போது, வள்ளிப் பிராட்டியார் முருகக் கடவுள் திருவடிகளை வணங்கி, "அருட்பெருங் குன்றே! இம்மலையின் சிறப்புக்களை எனக்குக் கூறியருள வேண்டும்" என்று வேண்டிக் கொண்டார். ஆறுமுக வள்ளல் அம்மையாரைப் பார்த்துத் திருவருள் சுரந்து திருவாய் மலர்ந்தருளினர்.

"வள்ளி நாயகியே! சூராதியசுரர்களுடனும் வேட்டுவரோடும் செய்த போரின் கோபம் தணிந்து நாம் இங்கு வந்தமையால் இம்மலைக்கு 'செருத்தணி' என்னும் பெயர் உண்டாயிற்று. (செரு — கோபம், தணி — தணிதல்). இது காஞ்சி நகருக்கு அருகில் இருப்பதால் மிகவும் சிறப்புடையது. உமையம்மையார் மாமரத்தின் கீழ் முக்கட் பெருமானை வழிபட்ட தலம் அன்றோ காஞ்சி?

செங்கண் வெய்யசூர்ச் செருந்தொழி
லினுஞ்சிலை வேடர்
தங்க ளிற்செயுஞ் செருத்தொழி
லினுந்தணிந் திட்டே

இங்கு வந்தியாம் இருத்தலால்
செருத்தணி என்றோர்
மங்க லந்தரு பெயரினைப் பெற்றதிவ்
வரையே

"மலர்களில் சிறந்தது தாமரை; ஆறுகளில் சிறந்தது கங்கை; பதிகளில் சிறந்தது காஞ்சி. அது போன்று மலைகளில் சிறந்தது செருத்தணி.

விரையி டங்கொளும் போதினுள்
மிக்கபங் கயம்போல்
திரையி டங்கொளும் நதிகளிற்
சிறந்தகங் கையைப்போல்
தரையி டங்கொளும் பதிகளிற்
காஞ்சியந் தலம்போல்
வரையி டங்களிற் சிறந்ததித்
தணிகைமால் வரையே

"புல்லாங்குழல் ஊதி, யாழ் மீட்டி, ஏழிசை பாடி இம்மலையின்கண் நாம் திருவிளையாடல் புரிவோம். எம் தந்தையராகிய அந்திவண்ணர் திருக்கயிலாய மலையை விரும்பி யிருப்பது போல, உலகில் பலமலைகள் இருந்தும் எமக்கு இம் மலையிடமே தனித்த அன்பு உண்டு. இந்திரன் எம்மைப் பூசிக்கும் பொருட்டு இம்மலையிலுள்ள சுனையில் மூன்று நீலோற்பலச் செடிகளை வைத்து வளர்த்தார். அம் மூன்று செடிகளிலிருந்து முறையே காலையில் ஒன்றும், உச்சி வேளையில் ஒன்றும், மாலையில் ஒன்றுமாக மூன்று வேளைகளிலும் மூன்று மலர்கள் மலரும். அதனால் இம்மலைக்கு நீலகிரி என்று மற்றொரு பேரும் உண்டு. அந்த நீலோற்பலச் சுனையில் அன்புடன் நீராடி எம்மை வழிபட்டோர்க்கு இம்மை, மறுமை நலன்கள் எளிதிற் கிடைக்கும். இம்மலையில் ஐந்து நாட்கள் தங்கியிருந்து எம்மைத் தரிசித்து நோன்பிருந்தவர்கள் எல்லா போகங்களையும் அநுபவித்து முடிவில் முத்தி வீடு பெறுவர். பாவங்கள் பல செய்தோரும் நம்பால் அன்பு கொண்டு இம்மலையை அடைந்து வழிபட்டால் நற் கதி அடைவார்கள்.

பாத கம்பல செய்தவராயினும்
பவங்கள்
ஏதும் ஐவகலும் புரிபவ ராயினும்
எம்பால்
ஆத ரங்கொடு தணிகைவெற்
படைவரேல் அவரே
வேதன் மாலினும் விழுமியர்
எவற்றினும் மிக்கார்

"கல்யாணி! இத்திருமலையில் வந்து ஒரு சிறு தர்மம் செய்தால் ஒன்றுக்கு ஆயிரம் மடங்கு அதிகமான புண்ணியம் உண்டாகும். இம்மலையை வலம் செய்தோர் கோடி அசுவமேதஞ் செய்த பலனை யடைவார்கள். இம்மலையில் ஏற எண்ணி ஒரு படியின் மீது கால் வைத்தவுடனே அவர்கள் வினைகள் தணிவதாலும் திருத்தணிமலை என இது பெயர் பெறும். இம்மலையின் பெருமை அளவிடற்கரியது" என்று எம்பிரான் கூறியருளினர். வள்ளியம்மையார் அதனைக் கேட்டு உள்ளம் உவந்தார்.

வள்ளிநாயகியாரும் மயிலேறும் வள்ளலும் செருத்தணி மலையின் ஒரு புறத்தில் சிவாகம விதிப்படி சிவபெருமானின் திவ்வியத் திருவுருவமாகிய சிவலிங்கப் பெருமானை ஸ்தாபித்து வழிபட்டுச் சில நாட்கள் அங்கே வீற்றிருந்தார்கள்.

பின்னர் எம்பிரான் எம்பிராட்டியாருடன் அங்கிருந்து புறப்பட்டுக் கயிலையங் கிரியின் பாங்குருள்ள கந்தகிரி அடைந்து, ஆங்குள்ள பொற்கோயிலிற் புகுந்தார். தெய்வயானையம்மையார் எதிர்கொண்டு வந்து அவரது திருவடிகளிலே வீழ்ந்து வணங்கினர். ஆறுமுகக் கடவுள் அவரை எடுத்துத் தழுவித் தமது பிரிவினால் வந்த துன்பத்தை மாற்றியருளினர். வள்ளிப் பிராட்டியார் தெய்வயானையம்மையாரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். "எனக்குத் துணைவி வந்தாள்" என்று தெய்வயானையம்மை வள்ளிப்பிராட்டியை உள்ளம் உவந்து எடுத்து அணைத்தார். பாற்கடலில் சேஷ சயனத்தில் பரந்தாமன், ஸ்ரீதேவியும் பூதேவியும் உடனிருக்க வீற்றிருத்தல் போல எந்தை கந்தவேள் இருமருங்கும் இருதேவியருடன் அரியணை மேல் இனிது வீற்றிருந்தருளினர்.*

சூர்க்கடல் பருகும் வேலோன்
துணைவியர் இருவ ரோடும்
போர்க்கடல் கொண்ட சேயப்
பொலன்மணி அணைமேற்
சேர்ந்தான்
பாற்கடல் அமளி தன்னில்
பாவையர் புறத்து வைகக்
கார்க்கடல் பவள வண்ணன்
கருணையோடு அமரு மாபோல்

அப்போது, தெய்வகுஞ்சரி யம்மையார் முருகக் கடவுளை நோக்கி, "என் இளையாளாகிய வள்ளியம்மையின் வரலாற்றினைக் கூறியருள வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார். "நீவிர் இருவரும் முற்பிறப்பில் திருமாலின் புதல்வியர். நம்மை மணம் செய்து கொள்ள விரும்பிப் பன்னிரண்டு ஆண்டுகள் தவம் புரிந்தீர்கள். அப்

* கந்தவேள் வள்ளி, தெய்வயானையுடன் வீற்றிருக்கும் திவ்வியக் காட்சியை இவ்விதழ் அட்டைப்படமாக வழங்குகிறார் ஓவியர் வினு.

போது யாம் வந்து ஒருத்தி விண்ணிலும் மற்றவள் மண்ணிலும் பிறக்குமாறு அருள் புரிந்தோம். அதன்படி மூத்தவளாகிய நீ இந்திரன் மகளாகி எம்மை மணந்து கொண்டாய். நின் இளையாளாகிய இவள் சிவமுனிவருக்கு மான்வயிற்றில் தோன்றி வள்ளி மலையில் நம்பிராசனால் எடுத்து வளர்க்கப்பட்டு, வள்ளி என்ற பெயருடன் புனங் காத்திருந்தாள். வேடர் குலத்தில் வளர்ந்த இவளிடம் நாம் சென்று பல மாயங்கள் புரிந்து மணந்தனம்'' என்று அருளிச் செய்தார்.

தெய்வயானையம்மையார் மனம் மிக மகிழ்ந்து, ''வெகு நாட்களாகப் பிரிந்திருந்த என் இளையாளை என்னுடன் ஒன்று சேர்த்து வைத்த தேவரீர்க்கு என்ன கைம்மாறு செய்வேன்?'' என்று பணிந்தார். வள்ளியம்மை தெய்வயானையை நோக்கி, ''தேவி! முற்பிறப்பிலும் தங்கட்கு யான் தங்கையானேன்; இப் பிறப்பிலும் தங்கையானேன். இனி யான் உய்வு பெற்றேன்; என்னைக் காத்தருளும்'' என்று பாத பங்கயத்தில் பணிந்தனர். தெய்வயானை அவரை அன்புடன் எடுத்துத் தழுவி இன்னுரை கூறினார்.

தேவியர் இருவருடன் தேவதேவன் வீற்றிருந்தருளினார். சேவலும் மயிலும் ஆடும் வேலும் வேறுள படைக்கலங்களும் பெருமானுக்குரிய பணிகளைச் செய்து கொண்டு திருக்கோயில் முன்னும் அருகும் இலங்கின. வீரவாகு தேவர் முதலியோர் எம்பிரானுக்கு ஏவல் செய்து பெருமான் புகழைப் பரப்பினர். உலகமெல்லாம் எம்பிரானின் அருள் பொலிந்தது.

## முடிவுரை

கருணைத் திறத்தையே சிறப்பாகக் கொண்டது கந்தபுராணம். தேவர்கள் துயர் தீர்க்க வேண்டும் என்ற கருணையின் மீதே தோன்றியவர் கந்தபெருமான். தேவர்கள் துயர் தீர்த்ததோடு, தேவசத்துருவான சூரனிடமும் கருணை பொழிந்து அவனைத் தமது வாகனமும் துவசமுமாக்கி அருள் புரிந்தார். அதன் பின்னர் தமக்காகவே தவமிருந்த இரு நங்கையரைக் கருணை கூர்ந்து திருமணம் புரிந்து கொண்டருளினார். உலகெங்கும் அன்பும், பக்தியும் பெருகப் பல பதிகளிற் குடிகொண்டு இன்றும் தனிப்பெரும் கருணை நாயகனாக விளங்குகிறார். இறைவனின் கருணையை உன்னி மகிழ்வதே 'கந்தன் கருணை'யின் மையத் தத்துவம்.

கந்தபுராணம் மேலும் பல உயர்ந்த உண்மைப் பொருள்களுக்கும் கருவூலமாகும்.

இதன் உட்கிடைகளை இங்கு சுருக்கி உரைக்கின்றோம்.

ஃ ஃ ஃ

சிவனே முருகன் என்பது இந்தப் புராணத்தால் காணக் கிடக்கிறது.

ஃ ஃ ஃ

நன்றி மறந்ததனால் சூரபன்மன் வாழ்வு குன்றியது என்ற பாடத்தை இப்புராணம் புகட்டுகிறது. நன்றி பிழைக்கலாகாது என்பதை வன்மையாய் உணர்த்துகின்றது.

ஃ ஃ ஃ

ஆணவமலம்—சூரபன்மன்
கன்மமலம்—சிங்கமுகன்
மாயாமலம்—தாரகன்

இம்மலங்களின் வலிமையை முருகவேள் அடக்கியருளினார்.

ஃ ஃ ஃ

ஞானசக்தி — வேல்
கிரியாசக்தி — தெய்வயானை
இச்சாசக்தி—வள்ளிநாயகி

மூன்றுடனும் கூடியவர் பரம்பொருள்.

ஃ ஃ ஃ

கற்புமணம் — தெய்வயானை
களவு மணம் — வள்ளிநாயகி

இரு மணத்தின் ஒழுக்கங்களை இதன் மூலம் எம்பெருமான் விளக்கியருளினார்.

ஃ ஃ ஃ

ஐம்புல வேடரிடை வளர்ந்த ஜீவான்மாவாகிய வள்ளிக்குப் பரமான்

---

''கண்ணெல்லாம் ஒரே எரிச்சலாக எரிகிறது டாக்டர்!''

''ஈர விறகை உபயோகிக்காதீர்கள். அடுப்புப் புகை கண்ணைக் கெடுத்துவிடும். நல்லதா 'ஸ்டௌ' வாங்கி உபயோகியுங்கள். தானே சரியாகிவிடும்!''

---



மாவாகிய எம்பிரான் குருமூர்த்தமாகச் சென்று அருள்புரிந்தருளியதே வள்ளித் திருமணத்தின் தத்துவம்.

ஃ ஃ ஃ

விந்து — மயில்
நாதம் — சேவல்
கலை — வேல்
இந்த மூன்றுக்குந் தலைவர் முருகர்.

**நாதவிந்து கலாதீ நமோ நம!**

ஃ ஃ ஃ

ஐயனின் வலப்புறம் வள்ளி. வள்ளியம்மையின் திருக்கரத்தில் தாமரை மலர்.

அவரது இடப்புறத்தில் தெய்வயானை. அம்மையின் திருக்கரத்தில் நீலோற்பலம்.

கதிரவனைக் கண்டு தாமரை மலரும்: சந்திரனைக் கண்டு நீலோற்பவம் மலரும். முருகவேளின் வலக் கண் சூரியன்; இடக் கண் சந்திரன். முருகவேளின் திருக் கண்கள் எப்போதும் இமையாதவை. எப்போதும் திறந்த விழிகள்.

வலக் கண்ணாகிய சூரியவொளியில் வள்ளியின் கரத்துள்ள தாமரை எப் போதும் மலர்ந்தவண்ணம் திகழும்.

அப்படியே இடக் கண்ணாகிய சந்திர வொளிபட்டுத் தெய்வயானையின் திருக் கரத்தில் உள்ள நீலோற்பலம் எப் போதும் மலர்ந்தவண்ணம் திகழும்.

முருகனை அணுகி அன்புடன் வழி படுவோரின் வாழ்வு என்றுங்குவியாது மலர்ந்து விளங்கும் என்பது உட்கிடை.

ஃ ஃ ஃ

இரு அணங்கு சூழ நின்றாலும் முருகன் பிரம்மசரிய தெய்வம். சிவனுருக்கும், திருமாலுக்கும், ராமருக்கும், கிருஷ்ணருக்கும் மக்கட்பேறுண்டு. முருகனுக்கு மகவு இல்லை என்பதே அவனது ஞானப் பிரம்மசரியத்தைக் காட்டும்.

ஃ ஃ ஃ

உயிர்கள் பெறும் பேறு மூன்று.
இகம் பரம் வீடு என்பன.

முருகப் பெருமான் இந்த மூன்று பேறுகளில் வள்ளிநாயகியின் மூலம் இகத்தையும், தெய்வயானையின் மூலம் பரத்தையும், தம் திருக்கரத்தில் விளங்கும் வேலாயுதத்தின் மூலம் வீடு பேற்றையும் அருள்புரிகின்றார்.

செம்மை புரியடியார்க்கு மும்மை நலன்களும் வழங்கும் முழு முதற் பொருள் முருகவேள்.

எல்லோரும் கலியுக வரதராம் கந்தவேளை எந்த வேளையும் மறவாது வந்தித்துச் சிந்தித்து வாழ்ந்து எல்லா நலன்களையும் பெறுவார்களாக.

**வற்றா அருள்சேர் குமரேசன்வண்**
**காதை தன்னைச்**
**சொற்றாரு மாராய்ந் திடுவாருந்**
**துகளாறுமே**
**கற்றாருங் கற்பான் முயல்வாருங்**
**கசிந்து கேட்கல்**
**உற்றாரும் வீடு நெறிப்பாலின்**
**உறுவர் அன்றே**

ஃ ஃ ஃ

மெய்ஞ்ஞான பண்டிதனும் கந்தனுடைய கருணையை உலக மக்கள் உணர்ந்து உய்யும் பொருட்டு கல்கி மூலம் சுமார் ஒன்றேகாலாண்டு வழங்கி வந்தேன். கந்தவேள் கருணை எல்லோருக்கும் கிடைக்குமாறு இத்தொடர் தொடங்கியபோது ஆசி வழங்கிய நடமாடும் கோயிலாகிய காஞ்சி காமகோடி பெரியவர்களின் திருவடிகட்கு வணக்கம்.

அருள் தெய்வத் திருப்பணிகள் புரியும் கல்கி குன்றா நலத்துடன் ஓங்குக. வையமெல்லாம் வாழ்க.

**ஆறிரு தடந்தோள் வாழ்க ;**
**அறுமுகம் வாழ்க ; வெற்பைக்**
**கூறுசெய் தனிவேல் வாழ்க ;**
**குக்குடம் வாழ்க ; செவ்வேள்**
**ஏறிய மஞ்ஞை வாழ்க ;**
**யானைதன் அணங்கு வாழ்க ;**
**மாறிலா வள்ளி வாழ்க ;**
**வாழ்கசீர் அடியார் எல்லாம் !**





## பேதாக்

அவள் கன்னித் தாய். ஆனால் குற்றமற்றவள். கதாநாயகி கன்னித்தாயாக வேண்டிய நிர்ப்பந்த நிலை ஏற்பட்டதற்குக் காரணம் சந்தர்ப்பச் சூழ்நிலைதான். காலன் வாயில் போகக் கொண்டிருந்த தந்தையைக் காப்பாற்ற வேண்டுமென்ற துடிப்பில் பணத்தை நாடிப் போனவள், கன்னித் தாய் என்னும் அவதூறைச் சுமக்கும்படியாகி விட்டது. அதோடு கதை முடியும்வரை அந்தக் கறையைக் கட்டிக் காக்கும்படியும் ஆகிவிட்டது. கடைசிக் கட்டத்தில் அசோகவனத்துச் சீதையைத் தீக்குளித்துப் புடமிட்ட பொன்னாக மிளிருகிறாள். அதனால் அவளை எப்படிக் குற்றம் கூற முடியும்?

அவளைக் காதலித்தவனோ உண்மையான காதலன். அவள்மீது அபார நம்பிக்கையும் ஆழ்ந்த அன்பும் வைத்துவிட்டவன். என்னதான் முயன்றும் அவளை மறக்க முடியாமல், 'நான் உன்மீது வைத்த அன்புக்காக; கொண்டிருந்த நம்பிக்கைக்காக ஒரே ஒரு பொய் சொல்லு. இந்தக் குழந்தை உன்னுடையதல்ல என்று சொல்லிவிடு. உன் பேச்சை நம்பி நான் உன்னை மணம் புரிந்து கொள்ளுகிறேன்' என்று சொல்லுமளவுக்குத் துணிந்து விட்டவன். அவன்மீதும்தான் எப்படிக் குற்றம் சுமத்த முடியும்?

இருவர் வாழ்க்கையிலும் குறுக்கிடுபவளோ ஒரு பொறாமைப் பிண்டம். உண்மை இன்பம் எதில் இருக்கிறது என்று தெரியாமல் தடுமாறுபவள். தன் எண்ணம் ஈடேற வேண்டும் என்பதற்காக இருவர் வாழ்க்கையிலும் நிழலாகத் தொடர்ந்து, தன் பொறாமைத் தீயிலேயே வெந்து சாம்பலாகிறாள். அவளையும் எப்படிக் குற்றம் கூற முடியும்?

உணர்ச்சிக்குழம்பாக இருக்கும் கதையை நகைச்சுவை தூக்கிக் காட்டுகிறது. உத்தி யோகம் புருஷ லட்சணம் என்பதை ஸ்திரீலட்சணமாக மாற்றிக் குடும்பக் காரியங்களைக் கவனித்துக் கொள்ளும் மஹமூது வயிறு குலுங்கச் சிரிக்க வைக்கிறார்! அவருக்கு ஈடு கொடுத்து நடிக்கும் சோபா கோட்டே ஆண்களுக்குச் சிறிதும் பெண்கள் சோடையில்லை என்பதை நிரூபிக்கிறார். எனவே, நகைச்சுவையையும் குற்றம் கூற வாய்ப்பில்லை. 'குற்றமற்ற' என்னும் பொருள் தரும் 'பேதாக்' என்னும் ஹிந்திப் படத்தில் குற்றமிழைத்திருக்கும் பொருள் ஏதாவது உண்டு என்றால் அது கத்திரிக்கோல்தான். திரையுலகத்தில் தொற்றுநோயெனப் பிடித்துக்கொண்டுவிட்ட இடுப்பு நெளிக்கும் மேனாட்டு நடனங்களையும், வீடு தீப்பற்றி எரியும் காட்சியையும், வெட்டித் தள்ளுவதில் கத்திரிக்கோல் தன் முழுத் திறமையையும் காட்டியிருந்தால்... எடுப்பான வசனங்களும், கதையம்சமும், நந்தா, மனோஜ்குமார், சசிகலா, சோபா கோட்டே, மஹமூது போன்றவர்களின் சிறந்த நடிப்பும், ரோஷனின் இசையும் 'பேதாக்' படம் பேதாக் (குற்றமில்லாதது)தான் என்பதை நிரூபித்திருக்கும்.

'ஏன் ஐயா வீணில் என்மீது அபாண்டம் சுமத்துகிறீர்கள்? படத் தயாரிப்பாளர்களின் இஷ்டம்போல் அல்லவா நான் ஆடவேண்டியிருக்கிறது! என்னைச் சொல்லிப் பயனில்லை, ஐயா! என் இஷ்டத்துக்கு விட்டிருந்தால் இன்னும் எத்தனையோ வெட்டியிருப்பேன்' என்று கத்திரிக்கோல் கூறிவிட்டால், குற்றத்தை யார்மேல் சுமத்துவது? ரசிகர்களான நீங்களே பதில் கூறுங்கள்!

எந்தக் காரியத்தையும் பெரிய அளவிலே சிந்திக்கக்கூடிய அவன் மூர்க்க குணம் படைத்தவன். அது மட்டுமல்ல, இட்டமிட்ட எதிலும் அவன் தோல்வி கண்டதில்லை. தகப்பனாரால் உதவாக்கரையாகக் கருதப்பட்ட அவன் தொழில் உலகில் பெரும் புள்ளியாகி விடுகிறான் வெகு விரைவில். தான் காதலித்த கன்னி தகப்பனாரின் மனைவியான போது அவன் சினந்தான். தந்தையின் மறைவுக்குப் பின் அவளையே தன் காதல் கிழத்தியாக்கியும் கொண்டான். அவளுக்காக அநுபவமில்லாத படத் தொழிலிலும் பிரவேசித்தான். திரைப்பட உலகின் புகழ் உச்சிக்குப் போனான்; நஷ்டமும் கண்டான். ஆனால் எதற்கும் கலங்காத நெஞ்சம் கொண்டவன் அவன். அவன் ஸ்திரீ லோலனாகவும் இருந்தான். —னினும் உணர்ச்சி மிகுந்த ஒரு கட்டத்தில் நிலையான இன்பம் எது என்பதைப் புரிந்து கொண்டு மனம் திருந்துகிறான். இப்படிப் பலதரப்பட்ட குணாதிசயங்களை உடைய செருக்கும், மிடுக்கும், கம்பீரமும் கொண்ட ஓர் இளைஞனைத் தம் சிறப்பான நடிப்பால் இந்தப் படத்துக்கு வெற்றி தேடிக் கொடுத்திருக்கிறார் ஜார்ஜ்பெப்பர்டு.

பழம் பெரும் நடிகரான ஆலன் லாட், கவர்ச்சி நடிகை கரால் பேக்கர் ஆகியோரும் சிறப்பாகத் தங்கள் பணியைச் செய்திருக்கிறார்கள். 'கார்ப்பெட் பேகர்ஸ்' என்ற தலைப்பிலேயே இந்த நாவல் வெளியாகிய போது பல லட்சம் பிரதிகள் விற்பனையாகிப் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியது. இதனைத் திரைப்படமாக்குவது ரொம்ப சிரமம் என்று அபிப்பிராயப்பட்ட பலரது கூற்றைப் பொய்யாக்கி படத்தை நயம்படத் தயாரித்துள்ளார்கள்.



## கார்ப்பெட் பேகர்ஸ்

சென்ஸார் தாராளமாகக் கத்திரிக் கோலைப் பயன்படுத்தியிருப்பதால் படத்தில் பல பகுதிகள் தொடர்பற்றுத் தாவிக் குதித்து எரிச்சலை உண்டாக்குகின்றன. குளுமையான கலரில் இனிமையான காட்சிகளோடும் சிறப்பான நடிப்போடும் படம் விறுவிறுப்பாக ஓடுகிறது.

---

## சித்தி

ஆயிரம் குற்றங்கள் இருந்தாலும் ஒரு நல்ல அம்சம் இருந்து விட்டால் பாராட்டவே தோன்றும். பல நல்ல அம்சங்களும் ஒருசில குற்றங்களுமே இருந்துவிட்டால் அது எவ்வளவு பாராட்டைப் பெறும் என்று சொல்லவே தேவையில்லை.

இந்த இரண்டாவது வகையைச் சேர்ந்தது சித்ரா புரொடக்ஷன்ஸாரின் சித்தி.

நல்ல கதை அம்சமும் உணர்ச்சிகரமான நடிப்பும் இருக்கிறது. சினிமா ரசிகர்களுக்கு இவற்றைவிட வேறு என்ன வேண்டும்?

எட்டுக் குழந்தைகளைப்பெற்ற (எம்.ஆர். ராதா) வர்க்கு எட்டு சகோதர சகோதரிகளுடன் பிறந்தவள் (பத்மினி) வாழ்க்கைப் படுகிறாள். அவர் மணப்பது அவளது இளமையைக் கண்டு, மிருக உணர்ச்சிக்காக. அவள் மணப்பது அவரது செல்வத்துக்காக; தன் தம்பியின் படிப்பைக் கருதி; தாய், தங்கைகளின் நல்வாழ்வுக்காக.



இளையாளாகப் புகுகிறவள் மூத்தாள் குழந்தைகளைக் கொடுமைப்படுத்துவாள் என்று ஒரு கருத்து. இது முற்றிலும் தவறு என்பதை நிரூபித்து, பெற்ற தாயினும் சாலப் பரிந்து குழந்தைகளைப் பேணும் காட்சி நெஞ்சைத் தொடுகிறது.

ஹாஸ்ய நடிகர் நாகேஷ், கம்பீரமும் நகைச்சுவையும் கலந்த ஒரு பாத்திரமாகத் தோன்றி நடிப்புக் கலையில் புதுமையையும், திரைக் கதைக்குப் புது வேகத்தையும் ஊட்டி விடுகிறார்.

சுந்தரிபாய், மாமியாராகத் தோன்றி, நல்லபடியாக நடித்து, ரசிகர்களின் உள்ளத்தில் இடம்பெற்று விடுகிறார்.

ஜெமினி கணேசன் வருகிறார். அவ்வளவுதான். அவருக்கு அதிக வாய்ப்பில்லை.

எம். ஆர். ராதாவின் நடிப்பில் புதுமையில்லை. பார்த்துப் பார்த்து அலுத்துப் போன முறையில்தான் நடித்திருக்கிறார்.

மற்றவர்கள் நடிப்பு சோபிக்கவில்லை. பாடல்களும், 'போர்' அடிக்கின்றன. கதை பல தடவைகள் தொய்ந்து விழுந்து, பிறகு முறுக்கேறி 'விண்' என்று நிற்கிறது.

## அத்தியாயம் ஐம்பத்தெட்டு

# அவளா இவள்?

அந்த நள்ளிரவு நேரத்தில் அவளுக்கு இன்னுமொரு விசித்திரமான ஆசையும் தோன்றியது. சபேசன் கொடுத்த புடவையை எடுத்து உடுத்திக் கொண்டு அழகு பார்க்க வேண்டும் என்ற ஆசைதான் அது. பெங்களூரிலிருந்து சென்னை வந்து சேர்ந்த அன்றிரவே அதை அவிழ்த்து மடித்துப் பத்திரப்படுத்தி விட்டாள் — கீழே எங்கேயும் இல்லை; பரண் மேல் வெகு காலமாகத் தூசு படிந்து கிடக்கும் அந்தப் பழைய பிரம்புப் பெட்டியில்! அது தான் இவ்வீட்டில் மிகப் பாதுகாப்பான இடம்.

தானம் பிசகாமல் முழங்கிய குறட்டைச் சத்தத்திலிருந்து கன்னியம்மாளின் தூக்கத்தை ஒருவாறு அளவெடுத்துக் கொண்ட வேதா, தனக்கேற்பட்ட அவ்விசித்திர ஆசையைநிறைவேற்றிக் கொள்வது என்ற தீர்மானத்துடன், தைரியமாக எழுந்து ஓசைப்படாமல் கட்டைச் சுவர் மீது ஏறி நின்று பரணிலிருந்த பிரம்புப் பெட்டியைத் திறந்து உள்ளே கையை விட்டுத் துழாவினாள். அதிலே அவள் வைத்திருந்தது அந்தப் புதுப் புடவையும் சில கந்தல் துணிகளும்தான். ஆனால் இப்போது வேறு ஏதோ ஒன்று கையில் தட்டுப்பட்டது. சற்றே துணுக்குற்றவளாய் அதனை வெடுக்கென்று வெளியே எடுத்தாள். என்ன ஆச்சரியம்! அது கண்ணாடிச் சட்டம் போட்ட ஒருபழைய புகைப்படம். அந்தப் படத்துடன் 'தொப்'பென்று கீழே குதித்தாள்.

கட்டைச் சுவர் மேலிருந்து வேதா குதித்த சத்தத்தினால் தூக்கம் கலைந்த கன்னியம்மாள் சட்டென்று தலையைத் தூக்கிப் பார்த்து விட்டு, "இன்னாடி பொண்ணே! நடு ராவுலே எய்ந்திருச்சு உருட்டிக்கினு கெடக்கிறே? இத்தினி நாளா டீச்சர் வேலைக்குப் படிச்சப் படிச்சக் கிய்ச்சது போறுதாங் காட்டியும்! இப்ப வேறே படிக்கப் போஸ்தகம் தேடறியா? சீ, கஸ்மாலம் பேசாம, படுத்துத் தூங்கு!" என்று எரிச்சலுடன் இரைந்து கூவிவிட்டுப் புரண்டு படுத்தாள். அடுத்த சில நிமிடங்களில் 'கண்ட ஜாதி இரிபுடை



# ஒரு இங்கிதம்



## ஜெகசிற்பியன்

தானத்திலே' அவளுடைய குரட்டை முழங்க ஆரம்பித்தது.

இதையெல்லாம் காதில் போட்டுக் கொள்ளாத வேதா அவசரப் பரபரப்புடன் அந்தப் புகைப்படத்தை விளக்கு வெளிச்சத்தில் கூர்ந்து பார்த்தாள். அவளுக்கு ஒரே வியப்பு, திகைப்பு!

'என்ன இது?' என்ற திணறலுடன் தன் கண்களைத் தானே நம்பாதவள் போல் மீண்டும் அந்தப் படத்தை அப்படியும் இப்படியுமாகத் திருப்பி உற்று நோக்கினாள். 'இது அந்தப் பெண்மணியின் படம் அல்லவா ? ஆமாம்; பெங்களூர் வசந்தநகரில் அன்றிரவு மழைக்காக ஒதுங்கி நின்ற அவ் வீட்டிலே பார்த்த அதே பெண்தான் இவள்! சந்தேகமில்லை. ஆனால், ஒரு சிறு வித்தியாசம்: அந்த அம்மையார் இப்போது வயது முதிர்ந்தவளாய் இருக்கிறாள். இந்தப் படத்திலே இளம் பருவப் பெண்ணாகக் காட்சியளிக்கிறாள். ஆயினும் அவளேதான் இவள்! இந்தப் படம் இங்கே என் பெட்டியில் எப்படி வந்தது? ஐந்தாறு நாட்களுக்குமுன், அப்புதுப் புடவையை வைப்பதற்காகத் திறந்தபோதுகூட அதில் இது இல்லையே?

நள்ளிரவின் ஆழ்ந்த அமைதியைச் சிதறடித்துக்கொண்டு எழுந்தது, தெரு நாய்களின் ஒருமித்த இமைக் குலைப்பு ஓலம். சற்றைக்கெல்லாம் வீட்டின் கதவு தட்டும் ஒலி கேட்டது.

வேதா தன் கையிலிருந்த புகைப்படத்தைத் தலையணைக்கு அடியில் மறைத்து வைத்துவிட்டு எழுந்து ஓடிப் போய்க் கதவைத் திறந்தாள்.

''இன்னு, தங்கச்சி! இன்னும் நீ தூங்கலியா?'' என்று அன்பும் பரிவுமாகக் கேட்டவாறு உள்ளே வந்தான் நச்சி.

அவன் கதவைத் தட்டும் போதே தூக்கத்திலிருந்து விழித்துக்கொண்ட கன்னியம்மாள் தூங்குவது மாதிரி கொஞ்ச நேரம் படுத்துக் கொண்டிருந்துவிட்டு மெல்லத் தலையைத் தூக்கித் தன் மைந்தனின் முகத்தை ஆவலுடன் ஒரு கணம் பார்த்தாள். பிறகு, ''ஊட்டுக்கு வர்ற நேரத்தைப் பாரு, ஊர்சுத்தி ராஸ்கோல் பையன்!'' என்று எரிச்சலுடன் முணுமுணுத்துக் கொண்டே எழுந்து மாடுகளுக்கு வைக்கோல் பிடுங்கிப் போட வெளியே சென்றாள்.

தனக்குச் சாப்பாடு வேண்டாம் என்று சொல்லி விட்டுப் பாயைப் பிரித்துப் போட்டுக்கொண்டு உட்கார்ந்த நச்சி, ''ஏன், தங்கச்சி! இன்னைக்குச் சாயந்திரம் சபேசன் இங்கே வந்தானா?'' என்று கேட்டான்.

இதுவரை வாயை திறக்காமல் மௌனமாயிருந்த வேதா, ''ஊம்'' என்றபடி புறக்கடை வாசல் பக்கம் போய் எட்டிப் பார்த்துவிட்டுத் திரும்பி வந்து கட்டைச் சுவர்மீது சாய்ந்து நின்று கொண்டு, ''அண்ணா! உன்னிடம் ஒரு விஷயம் கேட்கப்

போகிறேன்; ஒளிவு மறைவு இல்லாமல் உண்மையைச் சொல்வாயா?'' என்றாள் அழுத்தம் கலந்த மெல்லிய குரலில்.

நச்சியின் காதில் இது விழுந்ததோ என்னவோ ! அவளை அவன் நிமிர்ந்துகூடப் பார்க்காமல் பாயின் கிழிந்த பாகத்தைச் சரிப்படுத்துவதில் கவனமா யிருந்தான்.

வேதா சட்டென்று குனிந்து தன் தலையணைக்கு அடியில் மறைத்து வைத்திருந்த புகைப்படத்தை எடுத்துக் காட்டி, ''இதோ பார், அண்ணா! இந்தப் படம் ஏது? இங்கே அந்தப் பிரம்புப் பெட்டியில் இது எப்படி வந்தது? இதிலே இருப்பது யார்?'' என்று படபடப்புடன் வினவினாள்.

வெகு சாவதானமாக அவளை நிமிர்ந்து பார்த்துத் தன் வழக்கமான கோணல் புன்னகை பூத்த நச்சி, ''அடங்க இஸ்கி! இதுக்குத்தான் இவ்வளவு நேரம் அப்படி உம்முன்னு இருந்தியா?'' என்றான். ''இதைப் பத்தி நானே உன்கிட்ட சொல்லணும்னு இருந்தேன்; அதுக்குள்ளாற நீ முந்திக்கிட்டே.''

அவள் அவனை வெறித்து நோக்கினாள்.

''ஆமா; நீ சேர்ந்தாப்பலே ஒரே சமயத்தில் மூணு கேள்வி கேட்கிறியே, நான் முதலில் எதுக்குப் பதில் சொல்றது?'' என்று சிரித்த நச்சி, ''இந்தப் படம் ஏதுன்னுதானே கேட்கிறே? இது அந்த ஃப்ராடு பயல் மருதமுத்துவோட வீட்டிலிருந்து கிளப்பிக்கிட்டு வந்தது!'' என்றான் அலட்சியமாக. அடுத்த கணம் அவன் முகம் பயங்கரமாகக் கறுத்துக் கண்கள் தீத்துண்டங்கள் போல் சிவந்து ஜ்வலித்தன. ''அவனுக்கு நல்ல காலம், இந்தப் படத்தாலே தப்பிச்சுக்கிட்டான்! இது மட்டும் அன்னைக்கு அவன் படுத்திருந்த ரூம்லே இல்லேன்னா, இந்நேரம் அவனோட கதி?.... ஆங், பட்டா....ஹூம்!'' —பற்களை நறநறவென்று கடித்த நச்சி தன் முஷ்டியை மடக்கித் தரையில் முரட்டுத்தனமாக ஓங்கிக் குத்தினான்.

இதைக் கண்டு பயந்து நடுங்கிப் போன வேதா, அந்தப் படம் மருதமுத்துவின் வீட்டிலிருந்து கொண்டு வரப்பட்டது என்று அவன் சொன்னதை அறிந்து மேலும் பீதியடைந்தவளாய், ''இது அவர் வீட்டிலா இருந்தது?'' என்று கேட்டு விட்டு உடனே, ''இதை ஏன் நீ எடுத்து வந்தாய்?'' என்றாள் வியப்பேறிய குரலில்.

நச்சி இதற்குப் பதில் சொல்லாமல் தலை குனிந்து கொண்டு மௌனமாயிருந்தான்.

''சொல், அண்ணா! இந்தப் படத்தை ஏன் எடுத்து வந்தாய்?''

இப்போதும் நச்சி மௌனமே சாதித்தான்.

''இந்தப் படத்திலிருக்கும் பெண், மருதமுத்துவின் உறவுக்காரியா, அண்ணா?''

'ஆம்' என்பது போலவும், 'இல்லை' என்பது போலவும் பொதுவாகத் தலையாட்டிய நச்சி, ''அப்படித்தான் இருக்கணும்; இல்லேன்னா இது ஏன் அவன் வீட்டில் இருக்கப் போவுது?'' என்றான் கரகரத்த குரலில்.

வேதாவுக்கு ஒரே குழப்பமாகி விட்டது. ''உனக்கு அது நிச்சயமாகத் தெரியாதா?'' என்று உள்ளார்ந்த படபடப்புடன் கேட்டாள்.

''ஊஹூம்!''

''தெரியாதென்றால் இதை ஏன் எடுத்து வந்தாய்?''

''இந்த அம்மாளை மட்டும் எனக்குத் தெரியும்.''

''தெரியுமா ?''

''ஒரே ஒரு நாள், ஒரே ஒரு முறை அதிலும் ஒரு சில நிமிஷங்கள் — பார்த்திருக்கிறதாக ஞாபகம்.......''

''யார் அண்ணா, இந்தப் பெண்?''

''அதுதானே எனக்கும் தெரியலே!''

''தெரியும் என்று இப்போது சொன்னாயே ?''

''இந்த அம்மாளைத் தெரியும்; ஆனால் இவங்க யாருன்னு தெரியாது.''

''விளையாட வேண்டாம், அண்ணா!''

''நிசம்தான், தங்கச்சி.''

''அப்படியானால் இவளைத் தெரியும் என்ற அளவிலாவது இவள் யார் என்று சொல்லேன்.....?''

நச்சி மீண்டும் மௌனியானான்.

''சொல்ல மாட்டாயா? உன் அருமைத் தங்கையான என்னிடம்கூடச் சொல்ல மாட்டாயா?''

அமைதியாகத் தலை நிமிர்ந்த நச்சி அவளை ஏறிட்டு நோக்கினான்.

''நீ இதைச் சொல்லவில்லையானால் என் மீது உனக்கு நம்பிக்கை இல்லை என்றாகிறது; நம்பிக்கை இல்லை என்பது உண்மையானால் என்னை நீ இந்நாள்வரையில் வளர்த்தது, படிக்க வைத்தது, பாசம் காட்டியது, அன்பு செலுத்தியது எல்லாம் போலிக் கருணை, பொய்யான வேஷம்....''

''தங்கச்சி !''

சட்டென்று நிமிர்ந்தாள் வேதா. மறு கணம் அவள் நெஞ்சு பதறித் துடித்தது. காரணம், என்றுமே, எதற்குமே கலங்கியறியாத நச்சியின் கண்கள் இப்போது கலங்கி நீரை வழிய விட்டுக்கொண்டிருந்தன.

''அண்ணா! என்ன இது?'' என்று கேட்டுக்கொண்டே பாய்வது போல் அவனருகில் சென்று உட்கார்ந்தாள் வேதா.

''அடங்க, இஸ்கி! என்னமோ ஒட்டடைத் தான் கண்ணிலே விழுந்துடிச்சாக்கும்; இன்னா எரிச்சலெடுக்குது!'' என்று அவசரமாகத் தன் கண்களைத் துடைத்துக் கொண்ட நச்சி, ஓர் அசட்டுச் சிரிப்புடன் வெகு அமைதியாகச் சொன்னான் : ''ஒண்ணுமில்லே, தங்கச்சி!.... வந்து..... இந்தப் படத்தில் இருக்கிறது யாருங்கிறதை நான் சொன்னால், அப்புறம் நீ என்னையும் என் அம்மாவையும் எங்கே அந்நியம்போல நினைச்சுடுவியோன்னுதான்.......''

வேதாவுக்கு ஒன்றும் புரியவில்லை. அளவு கடந்த வியப்பால் மூளை மரத்துப் போன நிலையில் அவனை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

சற்று நேர ஆழ்ந்த சிந்தனைக்குப்பின் தனது வழக்கமான அலட்சியக் கோணல் சிரிப்புடன் சொன்னான் நச்சி: ''அதை உன்கிட்ட சொல்லணும்னுதான் இந்தப் படத்

"ஒரு
அழகு வாய்ந்த
வஸ்து
எக்காலத்திலும்
ஆனந்தம் தரும்."

ஒரு புதிய இடத்திற்கு விஜயம் செய்வது என்பது எப்பொழுதுமே வசீகரமளிக்கும். மற்றும் ஹகோபா எம்ப்ராய்டரி வேலைப்பாடு அமைந்த துணி பொருள் மூலம் அலங்கரித்துக் கொண்டிருக்கும் குழந்தைகளுடைய கண்ணிய தோற்றத்திற்கு ஒரு அலாதி அழகும் வருகிறது— ஒரு அபாரமான அமைப்புக்கு இசைந்திருக்கிற வெகுமதி.

# ஹகோபா

எம்ப்ராய்டரி வேலைப்பாடு
அமைந்த துணிகள்



பான்ஸி கார்ப்பரேஷன் லிமிடெட்,

(ஹகோபா பிக்கள் மற்றும் எம்ப்ராய்டரி வேலைப்பாடு அமைந்த துணிமணிகள் உற்பத்தியாளர்கள்) 16, அபோல்லோ தெரு, பம்பாய்-1

தையே இங்கு எடுத்தாந்தேன். அப்புறம் அதுக்குத் தைரியம் வரலே. பேசாமல் பொட்டியிலே போட்டு விட்டுப் போயிட்டேன். சரி; இப்ப சொல்றேன், கேளு : இதுதான் உன் அம்மா! உன்னைப் பெத்த அம்மா இவங்கதான். பதினறு, பதினேழு வருஷங்களுக்கு முன்னலே ஒரு நாள் ராத்திரி, நான் சின்னப் பையனு சென்ட்ரல் ஸ்டேஷனிலே கத்திக்கிட்டு இருந்தப்ப, மூணு மாசத்துக் குழந்தையாயிருந்த உன்னை அந்தப் பிரம்புப் பொட்டியிலே போட்டு மூடிக் கொண்டாந்து என் தலையிலே சுமத்திப்பிட்டு ஓடி விட்டாங்களே, அந்த மகராசி இவங்கதான்!''

கொட்டகையில் கட்டிக் கிடந்த எருமை மாடு, எந்தக் காலத்திலோ விட்டுப் பிரிந்து வந்த தன் தாய் எருமையை நினைத்துக் கொண்டோ என்னவோ, 'ம்மா!' என்று கதறிக் கூப்பிடுவதுபோல் முக்காரமிட்டது.

உறைந்து இறுகிய பனிப் பதுமையென ஒருவிதச் சலனமுமின்றி உட்கார்ந்திருந்தான் வேதா. அவனேயே விழியசைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தான் நச்சி.

சற்று நேரம் கழித்துத் தன் மடிமீது கிடந்த அந்தப் புகைப்படத்தை வெடுக்கென்று எடுத்து வெகு அலட்சியமாக ஒரு விநாடி உற்று நோக்கிவிட்டு வெறுப்புடன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு, ''ஹூம்! இவளா என் தாய்?..... இவளை என் தாய் என்று நீ சொல்லலாம், அண்ணு! அது உண்மையாகவும் இருக்கலாம். ஆனல் எனக்கு என் தாய்?... என் அருமை அன்னை?'' என்று கூறியவாறு சுற்றுமுற்றும் பரபரப்பாகப் பார்த்த வேதா, ''அம்மா!'' எனக் கூவியழைத்த அதே சமயம், இவர்கள் சம்பாஷணைகளை யெல்லாம் இவ்வளவுநேரம் வெளியில் நின்று கேட்டுக்கொண்டிருந்தவள் போல், ''இன்னடா, பையா ! அந்தக் கொயந்தைப் பொண்ணுகிட்டே இன்னுனத்தையோ சொல்லி அயுவ வைக்கறியே?'' என்று கடிந்தபடி உள்ளே வந்து உட்கார்ந்த கன்னியம்மாளின் மடியில் கொடியெனச் சாய்ந்து முகம் புதைத்துக்கொண்டு விம்மி அழலானன்.

''நீ அயாதே, ராசாத்தி! நான்தாம்மா உனக்கு ஆத்தாக்காரி!'' என்று தாய்மையின் பேரன்போடு வேதாவின் தலையைக் கோதி வருடினள் கன்னியம்மாள்.

சிறிது நேரம் கழித்துச் சட்டென்று நிமிர்ந்து உட்கார்ந்த வேதா, கீழே கிடந்த புகைப்படத்தையும் நச்சியையும் பார்த்து விட்டுக் கலகலவெனச் சிரித்தான். இத்நேரம் அழுது கொண்டிருந்தவள் இப்போது பைத்தியக்காரிபோல் சிரிப்பதைக் கண்டு நச்சியும், கன்னியம்மாளும் பயந்துவிட்டனர்.

''அண்ணு! இந்தப் படத்திலிருக்கும் பெண்மணியை உனக்கு மட்டுமல்ல, எனக்குங்கூடத் தெரியும்! நானும் இவளைப் பார்த்தேன் நேர்முகமாகவே !''

நச்சி அவளைக் கூர்ந்து நோக்கினன்.

''உண்மைதான், அண்ணு! சந்தேகமிருந்தால் உன் நண்பர் சபேசனைக் கேட்டுப் பார்!'' என்று அமைதியாகக் கூறிய வேதா, பெங்களூர் வசந்தநகரில் அன்றிரவு மழைக்காக ஒரு வீட்டிலே போய் ஒதுங்கியபோது அங்கு இந்தப் புகைப்படத்தில் இருக்கும் பெண்மணியைத் தான் நேரில் சந்தித்த விவரங்களை விளக்கிச் சொல்லிவிட்டு, ''ஆனல் அப்போது அவள் யார் என்பது எனக்கோ, நான் யார் என்பது அவளுக்கோ தெரியாது!'' என்றான்.

வியப்பும் திகைப்புமாக அவளைப் பார்த்துக்கொண்டிருந்த நச்சியையும், கன்னியம்மாளையும் நோக்கி, ''என்ன, இதற்கே இப்படி ஆச்சரியப்படுகிறீர்கள்? இனி நான் சொல்லப் போவதுதான் உங்களுக்கு இதைவிடப் பேராச்சரியமாக இருக்கும். ஏனென்றல், எனக்கே அந்த ஆச்சரியத்தினல் அப்போது ஏற்பட்ட அதிர்ச்சி இன்னமும் நீங்காமலே இருக்கிறது'' என்றாள் புன்னகையுடன். ''ஆமாம், அண்ணு! பெங்களூரில் பார்த்த அந்தப் பெண்மணியின் வீட்டில் நமது பயில்வான் தம்பையா நாயுடுவின் போட்டோப் படம் ஒன்று மாட்டப்பட்டிருந்ததை என் இரு கண்களாலும் கண்டேன்.''

''இன்னது?..... இன்னது?'' என்று தாயும் மகனும் ஏக காலத்தில் கூவிக் கேட்டனர்.

''மெய்தான், அண்ணு! நான் சொல்வதை நம்பு!''

சடாரென்று துள்ளியெழுந்த நச்சி, சற்றுத் தொலையில் கிடந்த அந்தப் புகைப்படத்தை வெடுக்கென்று எடுத்துக் கட்கத்தில் இடுக்கி வைத்துக்கொண்டு எங்கோ அவசரமாக ஓடப் போகிறவன்போல் வாசல் வரையில் போய் விட்டவன் சட்டென்று நின்று, ''ஏம்மா, இப்ப மணி இன்ன இருக்கும்?'' என்று கேட்டான்.

''கோயிகூட இன்னும் கூவலேடா ! மணி ரெண்டரை, இல்லாட்டி மூணு இருக்கும்.''

''அப்பமன்ன இப்பப் போகக் கூடாது; பொழுது விடியட்டும்!'' என்று முனகிக் கொண்டே திரும்பி வந்த நச்சி ஆழ்ந்த சிந்தனையுடன் சுவரோரம் போய் உட்கார்ந்து விட்டான்.

அன்றிரவு முழுதும் அவர்கள் மூவருமே தூங்கவில்லை. (தொடரும்)



''என் வீட்டு முன் பக்கத்துரும் காலியா இருக்கு. வர தட்சணை; சீர் வரிசை என்று கேட்காத நல்ல வாட்ட சாட்டமான காலேஜ் பையன் யாராவது இருந்தால் சொல்லுங்கோ சார்! வாடகைக்கு விடறேன்.''



# சேவைக்கு ஒரு சகோதரி

மோனிகா ஃபெல்டன்

-அநுத்தமா

சகோதரி சுப்புலட்சுமி தமது அநுபவத்தை எடுத்துச் சொன்னார்:

''எனக்கு எப்பொழுதுமே புத்தகத்திலிருந்து மட்டுமே சொல்லித் தரப் பிடிப்பதில்லை'' என்று ஆரம்பித்து அந்தப் பழைய சம்பவத்தை விவரித்தார் சகோதரி. ''நேர்முகமாகப் பார்த்தும் செய்தும் தெரிந்துகொள்வதுதான் கல்வி பயிலச் சிறந்த முறை என்று நான் நினைப்பேன். நான் பி.டி. ஸ்கூலில் பாடம் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்த தருணம் அது. பட்டுப் புழுக்களின் பழக்க வழக்கங்களைப் பற்றிப் படித்திருந்தேன். அது மிகவும் சுவாரசியமாக இருக்கவே, யாரிடமிருந்தோ சில புழுக்களைப் பெற்றுப் பள்ளிக்கூடத்தில் வகுப்பில் வைத்திருந்தேன். கண்ணாடிப் பெட்டிகளில் அவற்றைப் போட்டுச் சிறு ஓட்டைகளுடன் கூடிய அட்டைகளால் மூடியிருந்தேன். பெண்கள் அவற்றின் ஆகாரத்துக்காக இலைகளைக் கொண்டு வந்து தருவார்கள். ஒரு நாள் எங்களைப் பெரும் ஏமாற்றத்தில் ஆழ்த்திவிட்டுத் தனக்குக் கூடு அமைத்துக் கொள்ளும் தருணத்தில் ஒரு புழு இறந்து விட்டது.''

''ஒருவேளை அதற்கு உணவாக அளிக்கப்பட்ட இலைகள் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லையோ என்னவோ?'' என்று நான் கேட்டேன்.

''காரணம் அதுவாகத் தோன்றவில்லை. நான் பட்டுப் புழுக்கள் வளர்ப்பது பற்றி ஒரு புத்தகம் எடுத்துப் படித்தேன். அப்புழுக்கள் கூடு கட்டுவதற்குப் பூமிக்குள் குடைவதாக அறிந்தேன். அதன் பிறகு அந்தக் கண்ணாடிப் பெட்டிகளுக்குள் கொஞ்சம் மணலைப் போட்டு வைத்தேன்.'' கண்களில் உற்சாகம் பளபளக்கச் சகோதரி தொடர்ந்து பேசினார்: ''அது மிகவும் சுவாரசியமாக இருந்தது. தங்கள் உடலில் உள்ள வளைய மடிப்புக்கள் ஒவ்வொன்றாக மறைய அவை மண்ணுக்குள் குடைந்து செல்லும். அவற்றின் உடல் முழுவதும் — உங்களுக்குத் தெரியுமோ தெரியாதோ என்பதால் சொல்கிறேன் — குட்டிக் குட்டி உரோமங்கள் இருக்கின்றன. கூடு கட்டும்போது அக்கூட்டை அந்த உரோமங்கள் இணைத்துப் பிடிக்கின்றன. — என்ஜினியர்கள் சிமிண்டில் இரும்புக் கம்பிகள் கொடுத்து வலுப்படுத்துவது போல! இறகு முளைத்துப் பட்டுப் பூச்சிகள் வெளியே வந்ததும் மண்ணைச் சுரண்டி விட்டுக் கூடுகளைப் பார்ப்பேன். மணல் உள்ளே இறங்காதபடி மேலே ஒரு கூரையோடு அமைக்கப்பட்ட கூடு அழகாக இருக்கும்.''

இப்படிக் கூறிக் கொண்டே வந்த சகோதரி பேசுவதை நிறுத்தி விட்டார்.

"தொடர்ந்து சொல்லுங்கள்" என்றேன் நான். அவர் குரல் ஆத்ம சோதனையில் ஆழ்ந்தது போல் கடுமையாகத் தொனித்தது. "உங்களுக்கு என்னவோ பாடம் சொல்வது போல நான் பேசிக் கொண்டிருக்கிறேனே, இதையெல்லாம் நீங்கள் கேட்க விரும்ப மாட்டீர்கள்."

"இல்லை, நான் அவசியம் கேட்க விரும்புகிறேன்" என்றேன். ஸிஸ்டர் எத்தகைய சிறந்த ஆசிரியை என்பதைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருந்தேன். இப்போது அதை நானே நேரில் கண்டு உணர்ந்து கொண்டிருந்தேன். "தயவுசெய்து தொடர்ந்து சொல்லுங்கள்."

"ஆரம்பத்தில் இருந்த அந்தப் புழுக்கள் எங்களுக்குப் போதவில்லை. ஆகவே டில்லிக்கு அருகே இருக்கும் அரசினர் ஆராய்ச்சி நிலையத்துக்கு எழுதிக் கொஞ்சம் அனுப்பும்படி கேட்டேன். அவர்கள் மிகவும் நல்லவர்கள். உடனே இருபத்தைந்து அனுப்பினார்கள், பிறகு நூறு அனுப்பினார்கள். அவை அனைத்துக்கும் ஆகாரம் தேடுவது ரொம்பச் சிரமமாகி விட்டது. சென்னை முழுவதும் ஆட்களை அனுப்பித் தேடி ஆமணக்கு இலைகளையும் முசுக்கட்டை இலைகளையும் கொண்டு வரச் செய்தேன். பிறகு இந்தப் புழுக்கள் வைத்திருப்பதற்கு ஒரு புது வழியைக் கண்டுபிடித்தேன். மழை நாட்களில் ஏழை எளியவர் உபயோகப்படுத்தும் பனை ஓலைக் குடைகளைப் பார்த்திருக்கிறீர்களல்லவா? புழுக்களை அக்குடைகளில் குடியேற்றினேன். அவை நழுவி ஓடிவிடாமல் இருக்க விளிம்பை மூடி வைத்திருந்தேன். அவை ஆச்சரியகரமான விதத்தில் நன்கு செழித்தன. லார்ட் பென்ட்லாண்ட் பி. டி. ஸ்கூலைப் பார்க்க வந்தபோது இவை அவர் மனத்தைக் கவர்ந்திருக்க வேண்டும். இதற்குப் பிறகு சீக்கிரமே கவர்னர் மாளிகை விருந்து ஒன்றுக்கு எனக்கு அழைப்புக் கிடைத்தது. பெரிய மனிதர்களுக்கிடையே செல்வதற்கு எனக்குத் தயக்கமாகவும் படபடப்பாகவும் இருந்தது. ஆனாலும் அழைப்பை ஏற்காதிருக்க முடியுமா? நான் அங்கு சென்ற கொஞ்ச நேரத்துக்கெல்லாம் லேடி பென்ட்லாண்ட் என்னிடம் வந்து, 'பட்டுப் புழுக்களை வளர்ப்பது நீங்களாகத்தான் இருக்க வேண்டும். அவைகளை நான் பார்க்க வேண்டுமே?' என்றாள். அந்த அம்மாள் வரவும் செய்தாள். அதற்குப் பிறகு அடிக்கடி அவள் தனது வெளி நாட்டு விருந்தினர்களையெல்லாம் விதவைகள் இல்லத்துக்கு அழைத்து வருவாள். தவிரவும் தன்னால் இயன்ற உதவிகளைச் செய்தும் வந்தாள்."

கவர்னரும் அவர் மனைவியும் காட்டிய இந்தச் சிரத்தை மிகவும் உதவியாக இருந்தது. எதிர்பார்த்த அளவு இல்லாவிட்டாலும் இல்லத்துக்குப் பொது ஜனங்களுடைய அங்கீகாரம் கிடைப்பதற்கு ஓரளவு இது பயன்பட்டது. இதேபோல் அல்லது இதற்கு அதிகமாகக்கூட, சுப்பிரமணிய ஐயரும் அவருடைய மனைவியும் அரசமரத்து வீட்டை விட்டுத் திருவல்லிக்கேணிக்குக் குடி வருவது என்பதாக முடிவு செய்ததும் உதவியது. விசாலாட்சிக்கும் அவளுடைய கடைசி இரண்டு பெண்களுக்கும் சுப்புலக்ஷ்மியையும் சித்தியையும் விட்டுப் பிரிந்து இருக்க முடியவில்லை. 1914ம் வருஷம் ஜூன் மாதம் விதவை இல்லத்துக்கு அடுத்த வீடு காலியான போது கிடைத்தற்கரிய வாய்ப்பென அதனைக் கருதி அவர்கள் உடனே அங்கு குடிபுகுந்தனர்.

குடும்பம் புது வீட்டுக்கு வந்தவுடன் விசாலாட்சியினால் சித்திக்கு ஒத்தாசையாக இருக்க முடிந்தது. சொர்ணமும் நித்யாவும் மீண்டும் அருகில் இருப்பதைக் கண்டு விடுதியில் உள்ள பெண்கள் மிக்க மகிழ்ச்சி கொண்டார்கள். திருவல்லிக்கேணி வாழ் மக்களும் சுப்பிரமணிய ஐயரும் விசாலாட்சியும் எவ்வளவு வைதிகமாக இருக்கிறார்கள் என்பதைக் கண்கூடாகப் பார்த்த பிறகு அவர்களிடம் மிகுந்த மதிப்புக் கொண்டார்கள். பின்னர் சித்தி ஒரு யோசனையை வெளியிட்டாள். அதன்படி விதவைகள் இல்லத்தைப் பார்வையிட யாரேனும் விரும்பினால் அவர்கள் தாராளமாக வரலாம் என்று அழைத்தார்கள். ஒரு முறை வந்து பூஜை அறை, சமையல் அறை முதலிய இடங்களைப் பார்த்து, அங்கிருக்கும் பெண்களுடன் பேசி எல்லாம் எவ்வளவு சரியாக நிர்வகிக்கப்பட்டு வருகிறது என்பதை அறிந்து கொண்டால், பிறகு அவர்கள் தத்தம் நண்பர்களிடம் தாங்கள் பார்த்ததையெல்லாம் பற்றிக் கூறாமல் இருக்க மாட்டார்கள் அல்லவா? இவையெல்லாம் விடுதியில் சேர்ந்துள்ள பெண்களின் எண்ணிக்கை வேகமாக இல்லாவிட்டாலும் படிப்படியாக உயர உதவின. ஆறு மாத ரஜாவில் இங்கிலாந்து செல்லவிருந்த மிஸ் லின்ச், போகு முன் அரசினர் அளித்த உபகாரச் சம்பளங்கள் அனைத்தும் ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டனவென்றும், இன்னும் அதிக உபகாரச் சம்பளங்கள்

கிடைக்கப் போகின்றன என்றும் அறிந்து திருப்தியுற்ருள்.

அந்த அம்மாள் சென்று சில நாட்கள் ஆவதற்குள்ளாகவே விதவைகள் இல்லம் அமைந்திருந்த வீட்டின் சொந்தக்காரர் சுப்புலக்ஷ்மியையும் மிஸ் பிரேகரையும் காண வந்தார். அவர் வீட்டை விற்றுவிட்டாராம். வீட்டை வாங்கியவர் வடக்கே சர்க்கார் உத்தியோகஸ்தராக இருப்பவர். இன்னும் மூன்று மாத காலத்தில் சென்னைக்கு மாற்றலாகி அவர் வரப் போகிருர். வந்தவுடன் அவர், தாமே தங்கியிருக்க அந்த வீடு தேவைப்படும். தர்மசங்கடமான நிலைமை இது.

திருவல்லிக்கேணியில் பெரிய வீடுகள் கிடைப்பது அரிது. அத்துடன் இரண்டாவது 'டர்ம்' ஆரம்பிக்கும்போது முப்பது பெண்களுக்காவது இடவசதி வேண்டும். விதவைகள் இல்லத்துக்குத் தேவைப்படுவது போன்ற பெரிய வீடு கிடைப்பது மிகவும் கஷ்டம்.

அந்த இளம் மங்கையர் இருவரும் வீடு தேடத் தொடங்கினுர்கள்.

அவர்கள் அந்த வேலையில் ஈடுபட்ட அதே சமயத்தில்தான் உலக மகா யுத்தம் ஐரோப்பாவில் மூண்டது. முதலில், எங்கோ, உலகின் மறுபக்கத்தில் தொலைவில் நடந்த அந்தப் பயங்கரமான நிகழ்ச்சிகள் சாந்தமும் அமைதியும் நிறைந்த சென்னையைச் சிறிதும் பாதிக்காது என்று தோன்றியது. ஆயின், திடீரென்று ஒரு நாள் செப்டம்பர் மாதம் மூன்ருவது வாரத்தில் எம்டன் என்ற ஜெர்மானியச் சண்டைக் கப்பல் சென்னைத் துறைமுகத்தைத் தாக்கி விட்டது. மேலே என்ன நேருமோ என்று பயந்த பலர் உடனே சென்னையை விட்டு ஓடி விட்டனர்.

ஓடிச் சென்றவர் சீக்கிரமே திரும்பி வந்தும் விட்டார்கள். ஜெர்மானியக் கப்பலின் தாக்குதல் மறுபடியும் நிகழவில்லை. தாக்குதலின் விளைவாக, விதவைகள் இல்லத்துக்கு வீடு கிடைப்பது சுலபமாகி விடவுமில்லை. ஆனல் நல்ல வேளையாக விதவைகள் இல்லம் அமைந்திருந்த வீட்டின் புதுச் சொந்தக்காரர் தம் உத்தியோக மாற்றம் தள்ளிப் போடப்பட்டுள்ளதாகவும் ஆகவே மேலும் மூன்று மாதகாலம் அவர்கள் அந்த வீட்டிலேயே தங்கியிருக்கலாம் என்றும் தெரிவித்தார்.

ஆசிரியைகளாக விளங்குவதற்குப் பயிற்சி பெறுவதோடு மட்டுமின்றிப் பெண்களுக்கு இதர துறைகளிலும் லட்சிய ஆசைகள் உண்டாக மிஸ் லின்ச்

தான் லீவில் போகுமுன்னர் 'அடிக்கடி தூண்டுவாள். சென்னை முழுவதற்குமான ஒரே இந்தியப் பெண் டாக்டர் முத்துலக்ஷ்மி ரெட்டிதான். இந்தநிலையே இன்னமும் நீடித்தது. விதவைகள் இல்லத்தின் டாக்டராக நியமிக்கப்பட்டார் அவர். மருத்துவப் பணி புரிவது அவரது பல அலுவல்களில் ஒன்றே. டாக்டர் முத்துலக்ஷ்மி உருவத்தில் மிகவும் மெலிந்திருந்தாலும் சக்தியுள்ளவர், சுறுசுறுப்பானவர். அவருடைய கணவரும் டாக்டர்தான். தங்களிடம் வரும் நோயாளிகளின் பூஞ்சையான உடலுக்கும் அவர்கள் நோயுற்றுப் படும் வேதனைக்கும், உளுத்துப் போனதும் அர்த்தமற்றதுமான பழங்கால பழக்க வழக்கங்களே



மனைவி: நல்ல புடவை வாங்கி வந்திருக்கிறீர்கள்! நான் கட்டிண்டா கண்ராவிக் காட்சியா இருக்கு!

கணவன்: அது தாண்டி இப்ப பாஷன்.

காரணம் என்று அவ்விருவரும் நம்பி, சலியாத எதிர்ப் பிரசாரம் செய்து வந்தார்கள். விதவை இல்லத்தில் அனுமதிக்கப்படுமுன் எல்லாப் பெண்களும் டாக்டர் முத்துலக்ஷ்மியால் பரிசோதிக்கப்பட்டனர். முதலில் அங்கு வரும்போது அவர்களில் அநேகர் பல ஹீனமானவர்களாகவும், போஷாக்குக் குறைந்தவர்களாகவும் இருந்தனர். சித்தியினுடைய பராமரிப்பின் கீழ் சீக்கிரமே அப்பெண்கள் புதுச் சக்தி பெற்றுர்கள். மொத்தத்தில் பெண்களின் ஆரோக்கியம் நன்ருகவே இருந்தது. வைத்திய உதவி தேவைப்படாதபோதுகூட டி. பி. கோயில்

டீ பருக....

இலங்கையில் சிலர் வீட்டுக்கு டீ சாப்பிடப் போனால் கோப்பைகளுடன் மரக் கிளிப்புகளும் வைக்கப்பட்டிருக்கும். டீயின் மணத்தை ரசித்துப் பருக வேண்டுமானால் ஒரு 'கிளிப்'பை மூக்கின் மேல் பாகத்தில் போட்டுக் கொண்டு கீழ் நாசி வழியாகச் சுவாசிக்க வேண்டுமாம். அப்போது சுகந்த மணத்துடன் டீ பருக முடியுமாம்.

இத்தகவலை ஆஷாராணி என்பவர் லண்டன் அப்சர்வர் பத்திரிகையில் எழுதியிருக்கிறார். —சக்தி

---

தெருவுக்கு டாக்டர் வருவதை அவர்கள் ஆவலோடு எதிர்பார்க்க ஆரம்பித்தனர்.

இதுபோல் ஒரு முறை டாக்டர் வந்த போதுதான் அச்சமயத்தில் அங்கிருந்த மிஸ் லின்ச் தன் சுபாவப்படி திடுதிப்பென்று மாணவிகளை உலுக்கி எழுப்பிய அந்தக் கேள்வியைப் போட்டாள். ''யார் யாருக்கு எதிர்காலத்தில் டாக்டராக விளங்க ஆசையோ, அவர்கள் கையைத் தூக்குங்கள்'' என்று கூறினாள்.

அனைவரையும் வியப்பில் ஆழ்த்திய ஒரு கேள்வி அது. தென்னிந்தியப் பிராமணக் குடும்பங்களில் வெகு சிலரே தம் பிள்ளைகளை வைத்தியப் படிப்புப் படிக்க அனுமதித்தார்கள். தான் மேற்கொண்டுள்ள தொழிலின் விசேஷத் தன்மை காரணமாக ஒரு டாக்டர் ஆசாரக் குறைவான மனிதர்களுடனும், பொருள்களுடனும் தொட்டுத் தொடர்புகொள்ள நேர்வதைத் தவிர்க்க முடியாது. ஆனால் பிராமணரான டாக்டர் ரெட்டியின் தகப்பனார் இதையெல்லாம் பொருட்படுத்தியதாகத் தெரியவில்லை. அந்த இளம் விதவைகள் இதையெல்லாம் புரிந்து கொண்டிருந்தனர். சித்தி கூறுவது போல் பழைய பழக்க வழக்கங்கள் ஒவ்வொன்றுமே புனிதமானவையாகக் கருதப்பட வேண்டியவை அல்ல. சில மூடத்தனமானவை. கால மாறுபாட்டுக்கு ஒத்து வராதவை. நல்லொழுக்கத்துக்கான நியமங்களை வகுத்த பண்டைய ரிஷிகள் அனாவசியமான வேதனையை அளிக்க வேண்டுமென்று அவற்றை ஏற்படுத்தியிருப்பார்கள்? தாங்கள் பார்த்ததிலிருந்தும், டாக்டர் ரெட்டி கூறியதிலிருந்தும், அழுக்குப் படிந்த கைகளால் பிரசவம் பார்க்க நாவிதரின் மனைவியை அனுப்பி வைப்பது மிகவும் மூடத்தனமானது, கெடுதலானது என்பதைப் பெரிய பெண்கள் தெரிந்து கொண்டிருந்தனர். இந்த மாதிரியான அசுத்தச் செய்கைகளின் விளைவாகத்தான் பல குழந்தைகள் பிறந்தவுடன் இறந்து விடுகின்றன பல தாய்மார்கள் பல மாதங்கள்வரை நலிவுற்று இருக்கின்றனர். ஆகவே மிஸ் லின்ச் கேள்வி கேட்டதும் ஆறு ஏழு பெண்கள் தங்கள் கரங்களை உயர்த்தினார்கள். சில வாரங்களுக்கு முன்னர்தான் இல்லத்தில் சேர்ந்திருந்தவளும் பதினொரு வயதே நிரம்பியவளுமான சிறுமி பாலாம்பாளும் தன் கையைத் தூக்கினாள்.

''உங்களை அவ்வாறு செய்யும்படி தூண்டியது எது?'' என்று நான் 1962ம் ஆண்டில் திருச்சிராப்பள்ளியில் டாக்டர் பாலாம்பாளைக் கண்டபோது கேட்டேன். அவர் அப்போதுதான் லண்டனிலும், மாஸ்கோவிலும் இன்னும் பல ஐரோப்பியத் தலைநகரங்களிலும் உள்ள ஆஸ்பத்திரிகளைப் பார்த்துப் பயன் பெற்றுத் திரும்பியிருந்தார்.

''சொல்லக் கூடிய காரணம் ஒன்றுமில்லை. என்றேனும் ஒரு நாள் டாக்டராக விளங்கலாம் என்ற எண்ணம் அந்த வினாடி வரை எனக்கு உதித்ததில்லை. ஆனால் மிஸ் லின்ச் அந்தக் கேள்வியைக் கேட்டவுடனே, டாக்டருக்குப் படிப்பதென்பது உற்சாகம் ஊட்டும் விஷயமாகத் தோன்றியது. வாழ்நாளில் எனக்கு ஏற்பட்ட ஒரே லட்சிய ஆசை இதுதான்!''

அந்தக் காரியம் சுலபமாக நடந்தேறக் கூடியதல்ல என்பதை மிஸ் லின்ச் உணர்ந்தாள். அந்தப் பெண்களின் பெற்றோர்கள் சம்மதித்தாலும்கூட, வைத்தியப் படிப்புக்கு வேண்டிய பணம் கிடைக்குமா என்பது சந்தேகமே. இருந்தாலும் முயன்று பார்ப்பது என்று அவள் தீர்மானித்துவிட்டாள். தானும் சுப்புலக்ஷ்மியும் இதுவரை செய்துள்ள எந்தக் காரியம் தான் பெரும் முயற்சியின்றி நிறைவேறிவிட்டது? இவ்வாறே தொடர்ந்து போராட்டம் நிகழ்த்த இருவரும் தயாராக இருந்தார்கள்.

சுப்புலக்ஷ்மியும் மிஸ் பிரேகரும் ஒழிந்த போதெல்லாம் வீடு வேட்டையில் மூழ்ந்தனர். வீட்டை வாடகைக்கு விட ஆவலாக இருந்த அநேக சொந்தக்காரர்கள், இவர்கள் விதவை இல்லத்துக்காக வீடு கேட்கிறார்கள் என்று அறிந்ததும் கதவுகளைப் 'படீர்' என்று முகத்தில் அறைந்தாற்போல் சாத்தித் தாளிட்டுக் கொண்டு விடுவார்கள். மிகச் சிலரே — ஓரளவு தங்கள் வெறுப்புக்களைத் துடைத்தவர்கள் — இவர்களை உள்ளே வரும்படி அழைப்பார்கள்.

**(தொடரும்)**

சருமப் பாதுகாப்புக்கு

# மைசூர் சந்தண சோப்

## இதற்கு இணையாக வேறு ஒன்றுமே இல்லை

இந்த உற்சாக மூட்டும் வாசனை சோப்பில் உள்ள சந்தண எண்ணெய் உங்கள் சருமத்துக்கு பொலிவும் போஷாக்கும் தருவதோடு, இளமை தோற்றத்தை அளிக்கிறது.

தரம் அறிந்தோர்க்கு ஏற்ற உயர்தர சோப்பு

**மைசூர் கவர்ன்மெண்ட் சோப் பாக்டரி**
**பெங்களூர்-12**

# உங்கள் சருமத்தை சுத்தமாக வையுங்கள்

நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகித்தால் முகப் பருக்கள் எல்லாம் மறைந்து விடுகின்றன. இன்றிரவு நிக்ஸோடெர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். உங்கள் சருமம் மிருதுவாகவும் வழவழப்பாகவும் மாக மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப் பருக்கள், கட்டிகள் செந்நிறத் தழும்புகள் மேலாகப் பரவும் படை, படர்தாமரை, வெடிப்புகள் முதலிய உபாதைகளுக்குக் காரணமான கிருமிகளையும் பூச்சிகளையும் அழிக்க 'விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது. உங்கள் சருமத்தின் மெல்லிய துவாரங்களில் - இருக்கும் பூச்சிகளையும், கிருமிகளையும் அழித்தாலன்றி உங்கள் சரும உபாதைகள் விலகா. இன்றே உங்கள் கெமிஸ்டிடம் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப் பருக்களை மறையச் செய்து சருமத்தை மிருதுவாகவும் வழவழப்பாகவும் அது இருக்கச் செய்யும் என்ற பூர்ண நம்பிக்கையுடன் நிக்ஸோடெர்ம் (Nixoderm) வாங்குங்கள்.



# இலேசான மற்றும் சிரமமின்றி உபயோகிக்கத்தக்க பிரைட் பிளாஸ்டிக் சாமான்கள்

பிரைட் பிளாஸ்டிக் சாமான்கள் நேர்த்தியான மற்றும் நவநாகரீக முறையில் வாழ்க்கையை அனுபவிப்பதற்கு என்றே உருவாக்கப்பட்டிருக்கின்றன. அவை எவ்வளவு பயனுடையவையோ அவ்வளவு பிரகாசமானவை...எவ்வளவு உபயோகமானவையோ அவ்வளவு கவர்ச்சிகரமானவை. உங்களுடைய ரசனைக்கு வேண்டிய உல்லாசமான மற்றும் வண்ண சூழ்நிலையில் முடிக்க அவை மிகவும் சாத்தியமாக்குகின்றன...இது மட்டுமல்ல, உங்கள் வீட்டுக்குத் தேவையான உபகரணங்களைத் தேர்ந்தெடுப்பதில் உங்களுக்குள்ள ருசிக்காக மிக்க பாராட்டுதல்களும் பெறுவீர்கள். நாள் முழுவதும் மற்றும் பிரதிதினமும் உங்களுடைய வாழ்க்கையை சிரமமின்றியதாக்கவும், மகிழ்ச்சிகரமாக்கவும் பிரைட் பிளாஸ்டிக் சாமான்கள் உங்கள் நம்பிக்கைக்கு பாத்திரமாகின்றன. பல நகரங்களில் உங்களுக்கென தேர்ந்தெடுத்த விருப்பமான நிறங்களில் சேர்க்கும் தயாரிப்புகள் கிடைக்கின்றன! எல்லா முதல் தரமான ஸ்டோர்களிலும் கிடைக்கின்றன!

பிரைட் பிரதர்ஸ் பிரைவேட் லிட்.
[illegible]



பிரைட்தான் உங்கள் சிறந்த தேர்ந்தெடுப்பு!





பாரதத்தின் மண்ணிலே பல தொழில்களும் பல்கிப் பெருகி வளர வேண்டும் என்று கனவு கண்டார் மகாகவி பாரதியார். அவரது கனவு நனவாகி வருவதைக் கண்கூடாகக் காண்கிறோம். அதற்கு இதோ ஒரு சான்று.

# வடலூர் வளருகிறது

ரா. வி.





வண்டிப் பாதையில் சென்றுகொண்டிருந்தார் ஒருவர். ஒரு பொட்டணம் கிடைத்தது. பிரித்துப் பார்த்தால் நாலு குதிரை லாடங்கள் புதுக் கருக்கு அழியாது காட்சி தந்தன.

இந்த லாடங்களை என்ன செய்யலாம்? — யோசனை அவரைப் பற்றிக் கொண்டது. குதிரை வாங்கி விடுவது என்று முடிவுக்கு வந்தார். அதற்குள்ள பசை கையில் இல்லையே! அதற்காகத் தளர்ந்துவிட வில்லை அவர். தெரிந்தவர்களைக் கடன் கேட்டார். காரணத்தைக் கேட்டறிந்த போது அவர்களுக்குச் சிரிப்பாய் வந்தது.

இருந்தாலும், நண்பரைப் பகைத்துக் கொள்ள விரும்பாமல், வேண்டாவெறுப்பாகப் பணம் கொடுத்து உதவினார்கள். தாங்கள் கொடுத்த பணம் என்னுதான் என்றும் தீர்மானித்து விட்டார்கள்.

பணம் கிடைத்ததும் முதல் காரியமாகக் குதிரை ஒன்று வாங்கி லாடம் கட்டினார் அந்த மனிதர். ஒருவரிடமிருந்த வண்டியை நாள்கணக்கில் வாடகைக்குப் பேசிக் கொண்டார். குதிரை வண்டி, சவாரி வண்டியாயிற்று. கிடைத்த வருமானத்தைக்

○ இறந்தும் இறவாத தொழிலதிபர் வி. சேஷசாயி.

○ மின்சாரக் கம்பங்களில் இன்ஸுலேட்டர் பொருத்தும் தொழில் வல்லுநர்கள்.

○ சேஷசாயி இண்டஸ்ட்ரீஸில் தயாரான இன்சுலேட்டர்களை அமைச்சர் ஸ்ரீ வெங்கடராமன் பார்வையிடுகிறார்.

○ இன்சுலேட்டருக்கான கலவை, உருண்டையாக நிலுகிறது.

○ 'ஸ்லாவட்'கள் வழவழப்பு ரசாயனம் பூசிக் கொள்ளக் காத்திருக்கின்றன. பின்னால் தெரிவது சூளை

கொண்டு, முதலில் வட்டியோடு கடனைத் தீர்த்தார். வாடம் கிடைத்த வேளை நல்ல வேளை போலும்! குதிரை குதிரைகளாயின. வண்டி வண்டிகளாயின. குதிரைகளுக்கென்று மேய்ச்சல் தரையும் சொந்தமாக வாங்கி விட்டார். அப்புறம் என்ன, ஆள்—மாகாணம் என்று சேர்ந்து அவர் செல்வச் சீமானாக விளங்கியதோடு மட்டுமல்ல; எத்தனையோ குடும்பங்களுக்குச் சிறந்த ஜீவனோபாயத்துக்கும் அடிகோலினார்.

இது, கோவண சந்நியாசி எலிக்குப் பயந்து பூனை, பூனைக்காகப் பசு, பசுவைப் பாதுகாக்க பார்வை என்று வளர்த்துக் கொண்டு குடும்பஸ்தனான கதையை நினைவூட்டுகிறதா? அல்லது மண் கலயம் கிடைத்த பிரும்மசாரி, கலயத்தைக் காலடியில் வைத்துக் கொண்டு, கல்யாணமாகி விட்டதாகக் கனவு கண்டு, மனைவியைக் காலால் உதைப்பதாக நினைத்துக் கொண்டு கலயத்தையே உதைத்து உடைத்த கதை நினைவுக்கு வருகிறதா?

இவற்றில் எது நினைவுக்கு வந்தாலும் ஒன்று மட்டும் நினைவிருக்க வேண்டும். மனிதன் கனவு கண்டால் மட்டும் போதாது, கற்பனை புரிந்தால் மட்டும் போதாது. கண்ட கனவை, புரிந்த கற்பனையைச் செயலாற்றும் ஆற்றலும் படைத்தவனாக இருக்க வேண்டும். தைரியலட்சுமி கைகொடுத்து உதவினால் விஜயலட்சுமி அவனை வலிய வந்து ஏற்பாள்.



வடலூருக்கருகில் உருவாகியிருக்கும் நெய்வேலி செராமிக்ஸ் தொழிற்சாலையையும் சேஷசாயி தொழிலகத்தையும் பார்த்த பொழுது வாடம் கிடைத்ததற்காகக் குதிரை வாங்கியவரின் கதைதான் *நினைவு வந்தது.

'ஹவுஸ் ஆஃப் சேஷசாயி' என்னும் பெயரில் இயங்கி வரும் சேஷசாயி ஸ்தாபனம் 'சிறுகக் கட்டிப் பெருக வாழ்' என்னும் பழமொழியைப் பின்பற்றித் தழைத்து ஓங்கியுள்ள ஒரு ஸ்தாபனம். தெற்கு தேயவில்லை என்பதைப் பறைசாற்றிக் கொண்டு, பல கிளைகளாகப் பிரிந்து பணியாற்றி வரும் தென்னாட்டு ஸ்தாபனங்களின் வரிசையிலே சிறப்பான இடம் பற்றிக் கொண்ட ஸ்தாபனம். தென் சென்னை மின்சார விநியோகக் கார்ப்பொரேஷனாக உருவாகித் திருச்சி, தஞ்சை, ராமநாதபுரம் மாவட்டங்களிலே சிறு சிறு கிராமங்களுக்கும் கூட ஒளியூட்டி வரும் ஸ்தாபனமாகத் தொடங்கி, இன்று நாட்டின் முன்னேற்றத்துக்கான பல பணிகளையும் இழுத்துப் போட்டுக் கொண்டு வெற்றி கண்டு வரும் ஸ்தாபனம்.

**ம**க்களின் நாட்டமெல்லாம் நகர்ப்புறத்திலிருக்கிறது என்பதைக் கண்ணுற்ற காந்தியடிகள் கிராமங்களுக்குப் போகுமாறு மக்களை வேண்டினார். ஆனால் மக்கள் செவிடன் காதில் ஊதிய சங்காக நகரப்

பகுதிகளையே நாடி வந்தனர். என்னதான் இந்தியா விவசாய நாடு என்றாலும், கிராமப் புறங்களில் வேலைக் குறைவு காரணமாக மக்கள் நகரங்களையே நாடி வரும்படியாகி விட்டது. காரணம், நகர்ப்புறங்களிலே பெரிய பெரிய தொழிற்பேட்டைகள் உருவாகி மக்களுக்கு வாழ வழி வகை செய்து கொடுத்ததுதான். எல்லாவற்றுக்கும் மேலாகச் சர்க்காரின் சட்டதிட்டங்கள் 'நிலத்தில் பாடுபடுவதனால் பயனில்லை' என்ற எண்ணத்தை நிலத்தை நம்பி வாழ்ந்தவர்களிடையே ஏற்படுத்தி விட்டதையும் கூற வேண்டும்.

இந்த நிலை நீடித்துக் கொண்டு போகுமானால், நாட்டுப்புறம் காட்டுப்புறம் ஆக வேண்டியதுதான். இதனை உணர்ந்த அரசாங்கம் பழைய தவற்றைத் திருத்திக் கொள்ள முன்வரா விட்டாலும், தொழிற்பேட்டைகளாவது பல இடங்களில் நிரவியிருந்தால் நல்லதென்று நினைத்தது.

சேஷசாயி ஸ்தாபனத்தார் அரசாங்கத்தின் இந்த நோக்கத்துக்கு ஆக்கம் தரும் எண்ணத்தோடு, வடலூரில் அருகருகாக இரு தொழிற்சாலைகளை நிறுவியுள்ளார்கள். ஒன்று சுகாதாரத்துக்கான பீங்கான் பண்டங்களைத் தயாரிக்கிறது. மற்றொன்று மின்சாரத்துக்குத் தேவையான 'இன்ஸுலேட்டர்' என்னும் பீங்கான் மின்தாங்கிப் பொருள்களைத் தயாரிக்கிறது.

இப்பொருள்களைத் தயாரிக்க ஏற்ற இடம் இந்த வடலூர்ப் பகுதி எனக்கருதப்பட்டதற்கு முக்கியக் காரணம், சீனக் களி என்னும் மூலப் பொருள் நெய்வேலியில் பழுப்பு நிலக்கரிக்காகப் பூமியை அகழ்ந்தபோது ஏராளமாக அகப்பட்டதுதான். வெள்ளைக் கல், ஸிலாசத்து போன்ற மற்றத் தேவைப் பொருள்கள் திருச்சி, சேலம் மாவட்டங்களில் வேண்டிய அளவு கிடைக்கின்றன.

ஆனால் இன்று, இந்தப் பீங்கான் இன்ஸுலேட்டர்களைத் தயாரிக்க நெய்வேலியில் கிடைக்கும் சீனக் களிமண் அத்துணை சிறந்ததல்ல என்று கண்டு நாட்டின் வேறு ராஜ்யங்களிலிருந்தும் தருவிக்க வேண்டிய நிலையிலிருக்கிறார்கள்.

இங்கே இந்தத் தொழிற்பேட்டையை நிறுவியதற்கு இன்னுமொரு காரணமும் உண்டு. அது இந்தப் பீங்கான் பொருள்களைத் தயாரிப்பவர்கள் மண் பாண்டக் கலையில் தேர்ந்தவர்களாகவும், வார்ப்படத் தொழிலில் வல்லுநர்களாகவும் இருக்க வேண்டும் என்பதாகும்.

பக்கத்தில் இருக்கும் பண்ணுருட்டிப் பகுதித் தொழிலாளர்கள் இந்தக் கலையில் வல்லுநர்கள். நவராத்திரிக் கொலுப்பொம்மைகளில்தான் இவர்களுடைய கைவண்ணம் தெரிகிறதே! இந்தச் சாதகச் சூழ்நிலைக்காக மற்ற சில பாதக நிலைகளை மறந்து சிறந்த தொழிற்சாலைகளையும் குடியிருப்புகளையும் சமைத்து வள்ளலாரின் அமைதிச் சூழலிலே அருமையாகப் பணியாற்றி வருகிறார்கள் சேஷசாயி ஸ்தாபனத்தார்.

தென் சென்னை மின்சார விநியோக ஸ்தாபனம் பல சிறிய பெரிய கிராமங்களுக்கும் அந்தக் காலத்திலேயே மின்சார வசதி செய்து கொடுத்துப் புகழ் பெற்றது. கம்பங்கள் நட்டு அவற்றின் மீது கம்பிகள் போட்டு மின்சார விநியோகம் செய்யும் பொறுப்பு இவர்களுடையதல்லவா? அந்த அநுபவ அறிவு இவர்களுக்குத் திறமையான செயலாற்றலை அளித்திருக்கிறது. அதோடு இத்துறையில் புகழ்வாய்ந்த டாக்டர் டிரேகர் என்ற ஜெர்மானிய நிபுணரது உதவியும் கூட்டுறவும் கூட இவர்களுக்குக் கிடைத்துள்ளன. எனவே கேட்பானேன் வெற்றிக்கு?

மின்சாரத்தைப் பயன்படுத்துபவர்கள், அதற்குள்ள பல்வேறு ஆற்றல்களையும் ஓரளவு அறிவார்கள். அறியாக் குழந்தைகள்கூட, 'தொடாதே, ஷாக் அடிக்கும்!' என்று சொல்லக் கற்றிருக்கிற காலம் இது. எத்தனையோ நலன் பயப்பதானாலும் இந்த மின்சாரம் ஆபத்தும் விளைப்பதல்லவா? இதைக் கையாள்வதில் மிகுந்த ஜாக்கிரதையும் எச்சரிக்கையும் வேண்டுமே!



○ ஹௌஸ் ஆஃப் சேஷசாயியின் சேர்மன் ஸ்ரீ சித்ரா நாராயணசாமியுடன் முன்னாள் சென்னை கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி இன்ஸுலேட்டர்களைப் பார்வையிடுகிறார்.

மின்சாரம் சில பொருள்கள் வழியே பாயும். சில பொருள்களைப் பாதிக்காது. தரையிலிருந்து மின்சாரம் செல்லும் இடத்தைத் தொட்டால் 'ஷாக்' அடிக்கிறது. அதையே ஒரு பலகையின் மீது நின்று தொட்டால் ஒன்றும் செய்வதில்லை. இரும்பு, பூமி போன்றவை மின்சாரக் கடத்திகள் என்றால் மரம், பீங்கான் போன்றவை மின்காப்புகள்.

பெரிய இரும்புக் கம்பங்களை நட்டும், அவற்றின் ஊடே மின்சாரம் பாயாததற்குக் காரணம், கம்பங்களின் தலையிலே இருக்கும் பீங்கான் இன்சுலேட்டர்கள்தான். மேலே செல்லும் மின்சாரக் கம்பிகளுக்கும், இரே



இன்ஸுலேட்டர்கள் அடுக்குகளாக வண்டியேறிச் சூளைக்குள் தீக்குளிக்கச் செல்லும் காட்சி





○ தொழிலாளர்களின் உதவியுடன் மின்சார இயந்திரம் ஒன்று இன்சுலேட்டர்களை உருவாக்குகிறது.
○ சரவிளக்கெனக் காட்சி தரும் மின் காப்புகள்.

நடப்பட்டிருக்கும் கம்பங்களுக்கும் தொடர்பு இல்லாமல் செய்பவை இந்த இன்சுலேட்டர்கள். இவற்றைக் காப்புகள் என்று தமிழில் கூறலாம். இவற்றிலும் பல ரகங்கள் உண்டு. சாதாரணமாகச் சாலையில் நாம் பார்ப்பது 220 வோல்ட் மின்சாரத்துக்குக் காப்பு அளிப்பவை. ஆனால் மின்சாரம் தயாராகும் நிலையத்திலிருந்து வெகு தூரத்துக்கு மிக மிகச் சக்தி வாய்ந்த அளவுக்கு மின்சாரத்தைக் கொண்டுபோகும் கம்பிகள் உண்டு. இவை இருபது அடி தூரத்தில் நடக்கும் மனிதனைத் தம் பால் இழுத்துக் கருக்கிச் சாம்பராக்கிவிடுமென்றால் அத்துணை சக்தி வாய்ந்த மின்சாரம் உயிர்களைத் தாக்காமல் காப்பு அளிக்கும் இன்சுலேட்டர்கள் எத்துணை உறுதியாகவும், நேர்த்தியாகவும் தயாரிக்கப்பட்டிருக்க வேண்டும்?

மின்சாரத்தின் நுட்பங்கள் தெரிந்த சேஷசாயி ஸ்தாபனத்தார் இன்சுலேட்டர் செய்யும் இந்தப் பணியையும் மேற்கொண்டிருப்பதை வரவேற்க வேண்டும்; பாராட்ட வேண்டும். கிராமங்களுக்கெல்லாம் மின்சார வசதி என்னும் திட்டம் செயல்படுமானால், பாரதத்தின் பல தொழில்களும் பல்கிப் பெருகி வளர வேண்டுமானால், இன்சுலேட்டர் என்னும் இந்தப் பீங்கான் காப்புகள் எத்தனையோ தேவைப்படும். மின்சாரக் கம்பிகளோடு இணைக்கப் பெறும் இவற்றைக்

# வசீகரத்தையும், பெருமிதத்தையும் கொடுக்கும் நறுமணம் உங்களுக்கு பாமாலிவ் லவண்டர் டால்க் உபயோகிப்பதால்.

**உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஸெண்டுகள்—உங்களுக்காகவே மீண்டும் உருவாக்கப்பட்டிருக்கின்றன!**

ஒரு காலத்தில் உலக அழகுக் கேந்திரங்களிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவையும், உங்களுக்கு மிகவும் பிடித்தமானவையுமான ஸெண்டுகளின்றி இனி நீங்கள் தவிக்கவேண்டாம்...இன்று பாமாலிவ் லவண்டர் டால்க் மட்டுமே அளிக்கும் வசீகர நறுமணத்தினாலும், பெருமிதத்தினாலும் உங்கள் உடலைச் சொகுசாகப் பராமரிக்க முடியும். பாமாலிவ் லவண்டரை உங்கள் உடம்பு முழுவதும் தூவிக்கொண்டு, சூழ்ந்து நிற்கும் அதன் இனிய வசீகர நறுமணத்தினால் களிப்படையுங்கள்.

**எப்பொழுதும் புத்துணர்ச்சியுடனும் நறுமணம் சூழ்ந்த அழகுடனுமிருக்க பாமாலிவ் லவண்டர் டால்க்.**




புதிய, நவீன காஸ்மெடிக் டின்!




எடுப்பான புதிய டின்!

மற்றும் பாமாலிவ் டால்க் டீலக்ஸ் — மயக்கும் 17 ஸெண்டுகளின் அற்புதமான கலவை

PT.G.8 TAM.

- அன்பும் வெறுப்பும் அருகருகே வாழ்பவை.
- போர்முனை வீரராகப் பணியாற்றி அநுபவத்திலும் முதிர்ந்த திரு மைக்கேல் ஷோலோகாவ் கூறும் உண்மை இது.
- நோபல் பரிசு பெற்று அதன் பெருமைக்குப் பெருமை சேர்க்கும் ஷோலோகாவின் இந்தப் போர்முனைக் கதை எப்படி நேர்முக அநுபவமாக அமைந்திருக்கிறது. பாருங்கள்.
- அடுத்த ஆண்டு 'டான் நதி அமைதியாக ஓடுகிறது' என்னும் அவரது நோபல் பரிசு பெற்ற நவீனம் புத்தக உருவத்தில் தமிழ் வடிவம் பெற இருப்பதாகச் செய்தியும் வந்துள்ளது.



நெஞ்சைப் பிழிந்தது. "கடைசி மூச்சு இருக்கும்வரை நம் நாட்டையும் நம் நாட்டு மக்களையும் காக்கப் பாடுபடுங்கள். இப்பணியில் தேவைப்பட்டால் உயிரையே கொடுக்கத் தயங்காதீர்கள். எப்படியும் நாம் வெற்றி பெற்றாக வேண்டும்!" என்று கூறினாள். எனக்கு நினைவிருக்கிறது. அப்பொழுது நான் சிரித்தேன். "உன்னை நீ என்னவென்று எண்ணிக் கொண்டிருக்கிறாய்? மனைவியாக இலட்சணமாக இல்லாமல் எனக்கு உபதேசம் செய்ய வந்து விட்டாயே! போர்முனையில் என்ன செய்ய வேண்டும் என்பதை அறிந்து கொள்ளும் ஆற்றல் எனக்கு இல்லை என்ற எண்ணமா? வெற்றியைப் பற்றி நீ கவலைப்படாதே. 'பாஸிஸ்ட்'களின் கழுத்தைத் திருகி நாங்கள் வெற்றி காண்போம். வேண்டுமானால் நீ பாரேன்!" என்று சிரிப்புக்கிடையே பதிலும் அளித்தேன்.

என் தந்தை யாருக்கும் இல்லாத நெஞ்சுரம் வாய்த்தவர். நான் புறப்படும்பொழுது அவரும் சில நல்லுபதேசங்கள் நல்கத் தவறவில்லை. "விக்டர்! கோராசிமோவ்களின் குடும்பம் சாதாரணக் குடும்பம் இல்லை என்பதை நினைவு வைத்துக் கொள். உடலுழைப்பையே மூலதனமாகக் கொண்டு உயர்ந்த நீண்ட வம்ச பரம்பரையிலே வந்தவன் நீ. உன் முப்பாட்டனார் ஸ்ட்ரோகனோவுக்காகப் பணியாற்றியவர். நமது குடும்பம்தான் பல நூற்றாண்டுகளாக நாட்டுக்கென்று உருக்கு உற்பத்தியில் முனைந்து நின்றது. இந்தப் போரில் நீ உருக்கைக் காட்டிலும் உறுதியோடு நின்று பணியாற்ற வேண்டும். இந்த ஆட்சி நாம் உருவாக்கியது. இது உன்னைப் போர் தொடங்குவதற்கு முன்பாகவே விசேஷப் படைக்குக் கமாண்டராக்கியுள்ளது. நீ உறுதி குலையாது நின்று எதிரியை முறியடிக்க வேண்டும்!" என்றார்.

"அப்பா! அப்படியே செய்வோம், நாங்கள்!" என்றேன்.

ஸ்டேஷனுக்குப் போகும்பொழுது நான் மாவட்டக் குழு அலுவலகத்துக்குச் சென்றேன். எங்கள் செயலாளர் கண்டிப்பானவர், காரியம் ஒன்றே குறியானவர்; தர்க்கத்தில் சிறந்தவர். விடைபெறும் பொழுது, 'மனைவியும் முதியபிராயத்தினரான தந்தையுமே எனக்கு உபதேசம் புரியும் ஆசையை அடக்க முடியாமல் தவித்தார்களே! இந்த மனிதர் அரை மணி நேரமாவது லெக்சர் அடித்து என் உயிரை வாங்காமல் எங்கே விடப் போகிறார்?' என்றுதான் எண்ணினேன். ஆனால் அதற்கு நேர்மாறாக நடந்தது. போனதும் அவர், "உட்காரு, கோராசிமோவ்!" என்று ஆசனமளித்தார். பழைய காலத்தில் பயணம் புறப்படுவதென்றால், ஒருசில கணங்களுக்காவது உட்காரச் சொல்லுவது வழக்கம். அதையேதான் அவர் கடைப்பிடித்தார்.

"சிறிது நேரம் அவர் மௌனமாயிருந்தார். எழுந்து நின்றபொழுது அவருடைய மூக்குக் கண்ணாடி பனித்திருப்பதை நான் கண்டேன். 'இன்றென்ன, எல்லாம் அதிசயத்திலும் அதிசயமாக நிகழ்கிறதே!' என்று நான் எண்ணமிட்டேன். "காமரேட் கோராசிமோவ்! சொல்வதற்கு ஒன்றும் அதிகமாக இல்லை. நீ இத்தனை பொடியனாக இருந்த காலத்திலிருந்து உன்னை நான் அறிவேன். காற்றில் பறக்கும் கழுத்துப் பட்டையோடு கூடிய 'பயோனியர்' சிவப்புச் சட்டை அணிந்திருப்பாயே, நினைவிருக்கிறதா உனக்கு? எனக்கு இன்னும் நன்றாக நினைவிருக்கிறது. அப்புறம் கம்யூனிஸ்ட் கட்சியின் இளைய அங்கத்தினன் என்ற முறையிலே கடந்த பத்தாண்டுகளாக உன்னிப்பாக உன்னைக் கவனித்து வந்திருக்கிறேன். அந்த ஜெர்மானியப் பன்றிகளுக்குச் சிறிதும் இரக்கம் காட்டாதே. உன்னை நம் கட்சி பூரணமாக நம்புகிறது!" என்றார். அப்புறம் முதன் முறையாக நாங்கள் ஒருவரையொருவர் அன்புறத் தழுவி விடைபெற்றோம். அப்பொழுது எனக்கு எங்கள் செயலாளர் முன் போல வறண்ட உள்ளம் படைத்தவராகத் தோன்றவில்லை. அவரிடமும் நைப்பு குடி கொண்டிருப்பதைக் கண்டு மகிழ்ந்தேன்.

அவருடைய அன்பிலே தோய்ந்து மகிழ்ச்சியுடன் பிரியாவிடை பெற்று நான் அலுவலகத்திலிருந்து வெளியேறினேன்.

என் மனைவி என்னை மேலும் மகிழ்விக்க முயன்றாள். ஒரு மனைவி போர்முனைக்குச் செல்லும் தன் கணவனுக்கு விடை கொடுத்து அனுப்புகிறாள் என்றால் அது மகிழ்ச்சி தரும் நிகழ்ச்சியாக இருக்க முடியாது என்பதை நீங்கள் அனைவரும் அனுபவித்து உணர

லாம். என் மனைவியும் முதலில் சிறிது தடுமாறவேதான் செய்தாள். அவள் என்னிடம் ஏதோ மிகவும் முக்கியமான விஷயம் ஒன்று சொல்ல விரும்பினாள். ஆனால் அந்த வேளையில் அவள் மூளையில் எதுவுமே நிற்கவில்லை. அடியோடு மறந்து விட்டாள். வண்டி புறப்பட்ட பொழுது என் கைகளைப் பற்றிக் கொண்டு வண்டியோடு கூடவே ஓடிவந்தாள். ''வித்யா! உடம்பைக் கவனித்துக் கொள்ளுங்கள். போர்முனையில் சளி—இனி பிடித்துக் கொண்டு விட்டால் சிரமம்! உடம்பைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டேயிருந்தாள். ''அட கடவுளே! உனக்கு என்ன பதில் சொல்லுவது நத்மா? நீ என்னை என்னவென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? சளி—குளிரைப் பற்றி நான் நினைத்துப் பார்க்க முடியுமா அங்கே? போர்க்களத்துச் சூழ்நிலை நல்ல ஆரோக்கியமானதாக இருக்கும். சீதோஷ்ண ஸ்திதி பிரமாதமாயிருக்கும். நீ கவலைப்படாமல் போய்ச் சேரு!'' என்றேன். அவளைப் பிரிந்த பின் என் மனத்தை என்னவோ செய்தது. துன்பம் பிடித்துக் கொண்டது. ஆனால் அதே நேரத்தில் அவளுடைய இனிமையும் அசட்டுத்தனமும் நிறைந்த பேச்சை நினைத்தபோது இன்பமாகவும் இருந்தது. இன்பமும் துன்பமும் கலந்த என் உள்ளத்தில், ஜெர்மானியர்களின் செயல் சொல்லவொண்ணாத கோபத்தைப் பொங்கி எழச் செய்தது. 'அட, அண்டை நாட்டு நம்பிக்கைத் துரோகிகளே! போரைத் தொடங்கியது நீங்கள் தான். எனவே உஷாராயிருங்கள்!' என்றவன் 'என்றென்றும் நினைவுவைத்துக் கொள்ளும்படியாக நாங்கள் உங்களைப் புடைப்போம்!' என்று மனத்தில் கறுவிக் கொண்டேன்.

சிறிது நேரத்துக்கு அவர் மௌனமானார். போர்முனையில் இருபுறத்து இயந்திரத் துப்பாக்கிகளும் இயங்கிச் சுடும் ஒலி அந்த வேளையில் காதைத் துளைத்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் தொடங்கியது போலவே அந்த ஒலி நின்றும்விட்டது.

''போருக்கு முன்னால் நாங்கள் இயந்திரங்கள் முதலான தளவாடச் சாமான்களை ஜெர்மனியிலிருந்துதான் பெற்று வந்தோம். அவற்றை இணைக்கும் பொழுது, எனக்கு நன்றாக நினைவிருக்கிறது, ஒவ்வோர் உறுப்பையும் குறைந்தபட்சம் நான்கைந்து முறைகளாவது நாற்புறமும் புரட்டிக் கிரட்டிப் பார்ப்பேன். அந்த இயந்திரங்கள் அநுபவமும் ஆற்றலும் மிகுந்த கைகளினால் நிர்மாணிக்கப்பட்டவை என்பதில் ஐயமில்லை. நான் ஜெர்மானிய எழுத்தாளர்களின் நூல்களைக்கூடப் படிப்பதுண்டு. அதன் பயனாக, ஜெர்மானியர்களிடம் நான் விசேஷ சிரத்தை காட்டலானேன். உண்மையைக் கேட்கப் போனால், 'என்ன வெட்கக்கேடு! உழைப்பும் ஆற்றலும் மிக்க அந்த நாட்டு மக்கள் எப்படித்தான் இந்த ஹிட்லரின் அருவருக்கத்தக்க ஆட்சியைப் பொறுத்துக் கொள்கிறார்களோ?' என்றும் நான் எண்ணியதுண்டு...ஆனால், நமக்கென்ன? அது அவர்களுடைய சொந்த விஷயம் என்ற எண்ணமும் தொடர்ந்து எழும். அப்பொழுது மேற்கு ஐரோப்பாவில் போர் மூண்டுவிட்டது.

''ஆம், அப்பொழுது நான் போர்முனைக்குப் போய்க் கொண்டிருந்தேன். அவர்கள் படை வலுக் குறைந்ததல்ல. விஞ்ஞான ரீதியிலே அவர்கள் மிகவும் வளர்ந்தவர்கள் என்பதையும் என்னால் எண்ணிப் பாராமல் இருக்க முடியவில்லை. அத்தகைய எதிரிகளோடு போரிட்டு அவர்களுடைய எலும்பை முறித்துப் போடுவது என்பது மிகவும் ரசமான காரியம். 1941ல் நாங்களும் சளைத்திருக்கவில்லை. எதிரிகள் நாணயமாக நடந்து கொள்வார்கள் என்ற நம்பிக்கை எனக்கு இல்லை என்பதையும் ஒப்புக் கொள்கிறேன். பாசிசத்தை முறியடிக்க வேண்டுமென்றால் இப்படி ஒன்றை எதிர்பார்க்க முடியாது; எதிர்பார்க்கவும் கூடாது. ஆனால் ஒரு கொள்கையுமற்ற கொடியவர்களிடம் இப்படிச் சிக்கிக் கொள்ள நேரக்கூடும் என்று நான் கனவிலும் நினைக்கவில்லை. அப்பப்பா! அத்தகைய கொடிய குணமும் உண்டா? அதைப் பற்றிப் பின்னால் கூறுகிறேன்......

''எங்கள் படை போர்முனைக்கு ஜூலை முடிவில் போய்ச் சேர்ந்தது. 27ந் தேதி காலை நாங்கள் போருக்குப் புறப்படவேண்டியிருந்தது. ஆரம்பத்தில் இத்தகைய அநுபவம் இல்லாததனால், போர்நிலை சிறிது பயங்கரமாகத் தோன்றியது. குழிகளில் பொருத்தப்பட்டுத் தீயைக் கக்கிய அவர்களுடைய பீரங்கிகள் எங்களைக் காலூன்ற விடவில்லை. ஆனால் பொழுதேறப் பொழுதேற நாங்கள் நிலைமையைச் சமாளித்தோம். அவர்களுடைய தாக்குதல்களுக்கு எதிர்த் தாக்குதல்கள் புரிந்து அவர்களை ஒரு கிராமத்திலிருந்து விரட்டியடித்தோம். அந்தப் போரில் நாங்கள் கிட்டத்தட்ட பதினைந்து வீரர்களைச் சிறைப்பிடித்தோம். எனக்கு அந்த நிகழ்ச்சிகள் அனைத்தும் நேற்று நடந்தது போலவே பசுமையாக நினைவிலிருக்கிறது. சிறைப்பிடிக்கப்பட்ட வீரர்கள் பயந்து செத்துக் கொண்டிருந்தார்கள். அதற்குள் எங்கள் தோழர்களின் ஆத்திரம் சற்று மட்டுப்பட்டிருந்தது. எல்லோரும் கைதிகளுக்குத் தங்களால் இயன்றதைக் கொடுத்தார்கள். ஒருவன் ஒரு பாத்திரத்தில் சூழம்பு கொடுத்தான் என்றால், இன்னொருவன் வாயில் அடக்கச் சிறிது புகையிலையைக் கொடுத்தான். சிலர் குடிக்கத் தேநீர்கூடத் தந்தார்கள். எங்கள் படையைச் சேர்ந்தவர்கள் அவர்களுடைய முதுகைத் தட்டித் தோழர்களே என்று கூப்பிட்டுத் தோழமைகூடக் கொண்டாடத் தொடங்கினார்கள். 'என் தோழனே! நீ எதற்காகப் போர் புரிகிறாய்?' — இதுபோன்ற கேள்விகளைக்கூடக் கேட்டார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

''எங்களில் ஒருவன் — பழங்காலத்துப் போர்வீரன் அவன் — இந்த உள்ளம் உருக்கும் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்தான். 'உனது இந்தத் தோழர்களின் அன்புக்கு ஒரு முற்றுப்புள்ளி வை. இங்கே இவர்கள்

எல்லோரையும் தோழர்களாகப் பாவிப்பதற்கு முன்னால் ஒன்று தெரிந்து கொள்வோம். இவர்கள் தங்கள் எல்லைக்குள்ளே காய முற்ற நமது வீரர்களையும் தம் நாட்டு மக்களை யும் எப்படி நடத்துகிறார்கள் என்பது தெரி யும் வரையிலாவது நாம் நமது இந்த உற வுக்கு அணைபோலி வைப்போம்' என்றான். அவனது இந்தச் சொற்கள் எங்கள் தலை யிலே ஒரு வாளி குளிர்ந்த நீரை ஊற்றியது போலிருந்தது. இப்படிக் கூறியவன் அப்புறம் அங்கே நிற்கவில்லை, போய்விட்டான்.

''அதற்குப் பிறகுதான் எங்கள் படை அவர்கள் மீது இரண்டாவது தாக்குதலை மேற் கொண்டது. அப்பொழுது ஜெர்மானியக் கொடுங்கோலர்கள் எத்தனை காட்டுமிராண் டித்தனமாக நடந்து கொள்கிறார்கள் என் பதைக் காணும் வாய்ப்பு எங்களுக்குக் கிட்டியது. கிராமம், கிராமமாக அவர்கள் அழித்து விட்டார்கள். நூற்றுக்கணக்கான பெண்கள், குழந்தைகள், கிழவர்கள் மீது கண்மூடித்தனமாகத் துப்பாக்கிப் பிரயோகம் செய்தார்கள். இறந்து கிடந்த செஞ்சேனை வீரர்களின் சடலங்களைக்கூட அங்கபங்கம் செய்தார்கள். பெண்களிடமும் சிறுமிகளிட மும் தகாத முறையில் நடந்து கொண்டு, ஈவு இரக்க மின்றி அவர்களைக் கொன்றும் போட்டார்கள்.

''அவர்களுடைய மாக்கட் தன்மைபற்றிய ஒரு நிகழ்ச்சி என் மனத்தில் அழியாமல் இடம் பற்றிவிட்டது. பள்ளி செல்லும் ஒரு சிறுமி. வயது ஏறக்குறைய பதினைந்து இருக்கலாம். ஜெர்மானியர்கள் அவளைப் பிடித்துக் கொண்டு விட்டார்கள். பக்கத் தில் இருந்த உருளைக் கிழங்குப் பாத்திகளுக்கு இழுத்துச் சென்றார்கள். அங்கே அவளோடு பலாத்காரம் புரிந்து கொன்றும் போட்டு விட்டார்கள். உருளைக் கிழங்குச் செடிகளைப் படுக்கையாகக் கொண்டு உயிரற்ற அந்தப் பூவுடல் அலங்கோலமாகக் கிடந்ததைக் கண்ட பொழுது மனத்தைப் பிழிந்தெடுத்தது. நாற் புறமும் புத்தகங்கள் சிதறிக் கிடந்தன. அவள் முகம் பயங்கரமாகக் காட்சி தந்தது. உடல் முழுவதும் வாள் கொண்டு ஆழக் காயப்படுத் தப்பட்டிருந்தது. அந்த நிலையிலும்கூட அவள் புத்தகக் கட்டை இறுகப் பற்றிக் கொண்டிருந் தாள். நாங்கள் அவள் உடலை எங்கள் கோட்டி னால் மூடிவிட்டு ஒருகணம் மௌனமாக நின் றோம். பிறகு எல்லோரும் அங்கிருந்து பேசாமல் நடந்தார்கள். நான் மட்டும் சற்றுத் தயங்கி நின்றேன். எனக்குப் பிரமை தட்டினாற் போலிருந்தது. 'பாரிசோவ், போலோவின்கள் ஜூலியர் செகண்டரி, மற்றும் செகண்டரி ஸ்கூல்களுக்கான இயற்கை பூகோளப் புத்தகம்!' அங்கே சிதறிக் கிடந்த புத்தகங்களில் ஒன்றுக்கு இந்தப் பெயர். எனக்கு அந்தப் புத்தகத் தைத் தெரியும். ஏனெனில், என் சிறிய பெண் அப்பொழுது ஐந்தாவது வகுப்பில் படித்துக் கொண்டிருந்தாள். அதுதான் அவளுக்கும் பாடப் புத்தகம்.

''இந்த நிகழ்ச்சி ரூஸிறுக்கு அருகில் நடந்தது. ஸ்லீவரி என்றுமிடத்தில் நாங்கள்



''இதென்ன? பால் ஒரே தண்ணி?''

''நானென்ன பண்ணுவேன்? மாடு கிணற்றுக் குள்ளே விழுந்திடுச்சி. அப்படியே கறந்துட்டேன்!''

---

ஒரு கால்வாயைக் கண்டோம். அங்கே ஜெர்மானிய அக்கிரமக்காரர்கள் செஞ் சேனை வீரர்களுக்குச் சொல்லொணாத துன் பங்களை அளித்துச் சாவுக்கு இரையாக்கியிருந் தார்கள். நீங்கள் கசாப்புக் கடைக்கு எப் பொழுதாவது சென்றிருந்தால், ஓரளவு அங்குள்ள நிலைமையை அநுமானத்திலும் உணர்ந்துகொள்ளலாம்.

கால்வாய்க் கரையில் வளர்ந்திருந்த மரக் கிளைகளில் அவர்களது விகாரமான சட லங்கள் தொங்கிக் கொண்டிருந்தன. அவர் களுடைய கைகால்கள் துண்டிக்கப்பட்டிருந் தன. உடல் தோல் பெரும்பாலும் உரிக்கப் பட்டிருந்தது. கால்வாயின் மடுவில் இன்னும் எண்மருடைய சடலங்கள் குவிக்கப்பட்டிருந் தன. என்ன, ஏது என்று இனம் கண்டு கொள்ள முடியாத நிலை. எல்லாம் வெட்டிக் குவிக்கப்பட்ட மாமிசக் குவியல் போலத் தோன்றியது. அவற்றின் மீது ஒன்றுக் கொன்று அடுக்கினாற்போல் எட்டுத் தொப்பிகள் உணவுத் தட்டுக்களெனத் தோற்றமளித்தன.

''கண்ணால் கண்டவற்றையெல்லாம் இம் மியும் பிசகாமல் அப்படியே வர்ணிக்கும் ஆற்றல் எனக்கு இல்லை. நீங்கள் உங்கள் கற்பனைத்திறனுக்கு வேலை கொடுத்தால், ஓரளவு உணரலாம். அந்தப் பயங்கர விவரங்களை அப்படியேகூறும் சொற்பெருக்கும் என்னிடத்தில் இல்லை. நீங்களே உங்கள் கண்களால் பார்த்திருந்தால்தான் புரிந்து கொள்ளமுடியும்.''

இதற்குப் பிறகு எங்கள் பேச்சு திசை மாறி விட்டது. லெப்டினென்ட் கோராஸிமோ விநால் வெகுநேரம் வரையில் எதுவுமே கூற முடியவில்லை.

''இங்கே புகை பிடிக்க அநுமதி உண்டா?'' என்று நான் அவரைக் கேட்டேன்.

''உண்டு, உண்டு. தாராளமாக உண்டு. ஆனால் வெளிச்சம் உண்டாகக் கூடாது!'' என்று உடைந்த குரலில் பதில் சொன்னார் அவர். அதற்குப் பிறகு அவரே நெருப்புக்குச்சியைப் பற்ற வைத்துக் கொண்டு கூறலானார்:

''ஜெர்மானியர்களின் கொடுமையையும் காட்டுமிராண்டித்தனத்தையும் கண்டு நாங்களே கொடியவர்களாகி விட்டோம் என்பதை நீங்கள் சுலபமாக உணர முடியும். கொடுமையின் விளைவு கொடுமையானதாகத்தானே இருக்கமுடியும்? நாம் மனிதர்களிடம் மாட்டிக் கொள்ளவில்லை. இரத்தம் குடிக்கும் கொடிய காட்டு விலங்குகளிடம் மாட்டிக் கொண்டு விட்டோம் என்பதாக நாங்கள் உணர்ந்தோம். ஜெர்மானியப் படையெடுப்பாளர்கள் இயந்திரங்கள் சமைப்பதில் எத்தகைய திறமையும் ஆற்றலும் காட்டினார்களோ, அதே திறமையையும் ஆற்றலையும் காட்டி எங்கள் நாட்டவர்களிடம் அடாது நடந்து கொண்டு உயிரையும் வாங்கி விட்டார்கள் என்பது தெளிவு. சில காலத்துக்குப் பின் நாங்கள் எதிர்த் தாக்குதலுக்கு இரையாகிப் பின் நகரும்படியாயிற்று. ஆயினும் நாங்கள் பேயாகப் போர் புரிந்து கொண்டிருந்தோம்.

''என் கம்பெனியில் பெரும்பாலானவர்கள் சைபீரியாவாசிகள். ஆனால் நாங்கள் யூக்ரேனியனின் ஒவ்வோர் அங்குல நிலத்தையும் பாதுகாக்கும் பொருட்டுப் பலத்த போரில் ஈடுபட்டிருந்தோம். என் பகுதியைச் சேர்ந்த எத்தனையோ வீரர்கள் யூக்ரேனில் கொன்று குவிக்கப்பட்டார்கள். அவர்களது இந்தத் தியாகச் செயலுக்கு ஜெர்மானியர்கள் கடுமையான பணயம் வைக்கும்படியாகிவிட்டது. நாங்கள் போரில் வெற்றிபெறவில்லை. என்றாலும் அவர்களைச் சரியானபடி இழுக்கடித்தோம்.''

அவர் ஒரு முறை சிகரெட்டை உறிஞ்சிவிட்டு மிருதுவான குரலில் கூறலானார்: ''யூக்ரேனின் மண்ணின் பெருமையை என்னவென்பது? அவ்விடத்து இயற்கை வளத்தை எண்ணி மாளாது. ஒவ்வொரு கிராமமும், கிராமங்களில் உள்ள ஒவ்வொரு குடிசையும் அற்புதமானவை; அன்பு செலுத்தத் தூண்டுபவை. அதனால்தானோ என்னவோ, நாங்கள் எங்கள் இரத்தத்தை அதன் மானத்தைக் காப்பதற்காகப் பெருக்கிக் கொண்டிருந்தோம். இரத்தம் நீரைக் காட்டிலும் கெட்டியானது. எனவேதான் இரத்த பாசத்துக்குத் தனி மகிமை. எங்கேயாவது அந்தக் கிராமங்களில் ஒன்றை விட்டுப் பின் வாங்க நேர்ந்தாலும், எங்கள் மனத்துக்குக் கிலேசமும் கஷ்டமும் உண்டாயின. ஓரிடத்திலிருந்து பின்வாங்க நேரும்பொழுது நாங்கள் ஒருவரையொருவர் கண்ணெடுத்துப் பார்க்கக் கூட அஞ்சினோம்.

''அப்பொழுது, என்றைக்காகிலும் ஒரு நாள் நானே ஜெர்மானியர்கள் மூலம் சிறைப்படுத்தப்படுவேன் என்று கனவிலும் கருதியதில்லை. ஆனால் அப்படி ஒரு காரியம் நடந்துவிட்டது. நான் செப்டம்பர் மாதத்தில் முதல் தடவையாகக் காயமுற்றேன். ஆனால் என் கம்பெனியோடு கூடவே இருந்தேன். இரண்டாம் தடவை நான் 21ந் தேதி போல்தாவா பகுதியில் டெனிசோவிகா என்னும் இடத்தில் போரிட்டுக் கொண்டிருக்கும் பொழுது காயமுற்றேன்; ஜெர்மானியப் படையினால் சிறைப்படுத்தவும் பட்டேன்.

''ஜெர்மன் டாங்கிகள் வலது புறமாக உள்ளே நுழைந்து வந்தன. அது சமைத்துச் சென்ற இடைவெளி வழியாக அவர்களது படை முன்னேறி வந்தது. நாங்கள் நாற்புறமும் சூழப்பட்டோம். ஆயினும் விடாமல் போரிட்டுக் கொண்டிருந்தோம். அன்று என் கம்பெனிக்குப் பலத்த நஷ்டம் ஏற்பட்டு விட்டது. எதிரிகளின் இரு டாங்கித்தாக்குதல்களைப் பயனற்றதாக்கி விட்டோம். அவர்களுடைய ஆறு டாங்கிகளையும் ஒரு கவச மோட்டாரையும் கலைக்குதவாதனவாகச் செய்துவிட்டோம். இவற்றைத் தவிர சோளக் கொல்லையில் கிட்டத்தட்ட நூற்றிருபது ஹிட்லரின் படை வீரர்களை வாளுக்கு இரையாக்கி எமனுலகுக்கு அனுப்பி வைத்தோம். அதற்குப் பின் அவர்கள் தங்களுடைய பெரிய பீரங்கிப் படையை எங்களெதிரே கொண்டு வந்து நிறுத்தினார்கள். நாங்கள் பொழுது புலர்ந்ததிலிருந்து நான்கு மணிவரை எந்த மேட்டில் நின்று போர் புரிந்துகொண்டிருந்தோமோ, அதை விட்டு வேறு வழியின்றி நிர்ப்பந்தமாக வெளியேறும்படியாகி விட்டது. சூரியன் உதித்ததிலிருந்தே நல்ல வெப்பம். வானத்திலே எங்கும் மேகங்கள் என்ற பேச்சையே காணோம். ஆதவன் நெருப்பைக் கக்கிக் கொண்டிருந்தான். வெய்யிலின் கொடுமை எங்களை மூச்சுக்கூட விட முடியாமல் திணற அடித்தது. போதாக் குறைக்குப் பீரங்கிகள் வேறு தீயைக் கக்கிக் கொண்டிருந்தன. எங்களுக்கு ஒரே தாகம். உதடுகள் உலர்ந்து கறுத்து விட்டன. எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. என்னால் நாக்கைக் கூடக் கூட்ட முடியவில்லை. அப்பொழுதும் நான் எப்படியோ குரல் எழுப்பி உத்தரவுகள் போட்ட வண்ணம் இருந்தேன். என் குரல்தானா அது என்று எனக்கே சந்தேகமாக இருந்தது. நாங்கள் ஒரு மடுவைத் தாண்டிக்கொண்டிருந்தபொழுது எதிரிகளின் ஒரு குண்டு என் எதிரே வந்து வெடித்தது. கரிய மண்ணும் புகை மண்டலமும் தூணாக எழும்பி உயர்வதை நான் கண்டேன். குண்டின் ஒரு பகுதி என் தொப்பியைப் பிய்த்துக் கொண்டு சென்றது. இன்னொரு பகுதி என் வலது தோள்பட்டையில் ஊடுருவிச் சென்றது.

''நான் அங்கே எத்தனை நேரம் மூர்ச்சை இழந்த நிலையில் கிடந்தேன் என்பது எனக்குத் தெரியாது; நினைவில்லை. ஆனால் காலடிச் சத்தம் கேட்டு நான் உணர்வு பெற்றேன். பார்த்தபொழுது, நான் விழுந்து கிடந்த இடத்தில் கிடக்கவில்லை என்பதையும் அறிந்தேன். எனது இராணுவக் கோட்டு அகற்றப்பட்டிருந்தது. தோள்பட்டைக் காயத்தில் இலேசாகக் கட்டுக் கட்டப்பட்டிருந்தது. என் தொப்பியை எங்கோ காணோம். என் தலையிலும் ஒரு கட்டுப் போட்டிருந்தது. ஆனால்



# முழுப் பூசணி

சங்கரஸுப்பு

**எ**ன் வீடு இருந்த தெருத் திருப்பம் வந்தவுடனே அது வரையில் தைரியமாக இருந்த என்னைத் திகில் பற்றிக் கொண்டது. கைக் கடிகாரத்தைப் பார்த்தேன். மணி பதினொன்று.

'வேண்டவே வேண்டாம். வீட்டுக்குப் போனால் பாட்டுக் கேட்க வேண்டும்' என்று என்னைச் சினிமாவுக்கு அழைத்த நண்பனிடம் கெஞ்சினேன். அவன் கேட்டானா? பாட்டுக் கேட்கப் போகிறவன் நான் அல்லவா! சினிமாவுக்கு அழைத்துச் சென்றுவிட்டு அவன் பாட்டுக்குப் போய் விட்டான்.

வீடு நெருங்க நெருங்க, அஸ்தியில் சுரம் கண்டது. எந்தக் கோலத்தில், கையில் எதை வைத்துக் கொண்டு வரவேற்புக் கொடுக்கக் காத்திருக்கிறாளோ என் தர்மபத்தினி! நெருங்கி விட்ட வீட்டை நோக்கி மெதுவாகப் பயத்துடன், கேட்ட கேள்விக்கு விடை தெரியாத மாணவன் ஆசிரியரைப் பார்ப்பது போல் பார்த்தேன். வீட்டில் வெளிச்சம் இல்லை. காத்திருந்து அலுத்துப் போய் விளக்கை அணைத்துவிட்டுப் படுத்து உறங்கியிருப்பாள், பாவம்! எப்படிக் கதவைத் தட்டி அவளை எழுப்புவது? ஏற்கனவே கோபம் கொண்டிருப்பவளுக்குத் தூக்கத்திலிருந்து எழுப்பினை இன்னொரு காரணமும் கிடைத்து விடும், எரிந்துவிழுவாள்.

மெதுவாகக் கைக் கணுவினால் தட்டவாமென்று கையை நீட்டினேன். நீட்டின கை அந்த நிலையிலேயே நின்றது. 'அட, வீடு பூட்டியிருக்கிறதே. என் நல்ல காலம்தான்' என்று அவசர அவசரமாகப் பூட்டைத் திறந்து உள்ளே நுழைந்தேன். கதவைத் தாளிட்டுவிட்டு விளக்கைப் போட்ட சில வினாடிகளில் வாசல் கதவு தட்டப்படும் சப்தம் கேட்டது.

'வரட்டும், வரட்டும். இன்று சரியாக மாட்டிக் கொண்டாள். வரை பாட வகையில்லாமல் செய்து விடுகிறேன்' என்று எண்ணமிட்டுக் கதவைத் திறந்தேன். என்னைப் பார்த்த என் மனைவி யோசனையாய் முகத்தை வைத்துக் கொண்டு உள்ளே வந்தாள்.

''இப்போது மணி எவ்வளவு ?'' என்று கேட்டேன்.

''ஏன், மணி பார்க்கத் தெரியாதா ?''

''கடிகாரம் செய்யவே தெரியும்!''

''அதனால் மணி பார்க்கத் தெரியும் என்ற நியதியில்லை !''

''குதர்க்கம் வேண்டாம். இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தாய்?''

''வெளியில்......''

''வெளியில் என்று உன் அலங்காரத்தைப் பார்த்தாலே தெரிகிறது.''

''பின் என்ன கேள்வி?''

''வீட்டை விட்டால் எல்லாமே வெளிதான். எங்கே என்று கேட்கிறேன் ?''

''கேளுங்கள்......''

''கேட்டாகி விட்டது, ஏற்கனவே!''

'' பதில் சொல்லியாகி விட்டது, முன்பே.''

''ஒரு பெண் தனியே வெளியே போய் இரவு பதினொரு மணி ஆகியும் திரும்பி வரவில்லை என்றால்......''

''...என்றால்....?''

''என்ன நினைப்பது? இந்தப் பட்டணத்தில், யாருக்கு, எப்போது, எது நேரும் என்று சொல்ல முடியாதே?''

''ஆஹா.... என்ன கரிசனம்!''

''ஆபீஸிலிருந்து ஒருவன் களைத்துப் போய் வருவானே, அவனை வரவேற்று உபசரிக்க வீட்டிலிருப்போம் என்றில்லை. வெளியில் போய்விட்டாளாம்!''

''அதனால்தான் 'கியால்' பாடிக் கொண்டு நீங்கள் இத்தனை நாழிகை கழித்து வீடு திரும்புகிறீர்களா?''

''நானா....? இப்போதுதானா....?'' என்று இழுத்துச் சமாளித்துக் கொண்டு ''சாயங்காலம் ஆறு மணிக்கே வந்து விட்டேனே!'' என்றேன்.



சென்னை
ஸ்டார் • பிராட்வே
நடராஜ் • ஸ்ரீநிவாசா
மற்றும் தென்னகமெங்கும்





சரவணா பிக்சர்ஸ்
G.N.வேலுமணி அளிக்கும்

# நாணல்



கதை, வசனம், டைரக்ஷன்
K.பாலசந்தர் B.Sc.

தயாரிப்பு
G.V.சரவணன்

ELEGANT

அது சரிவரப் போடப்படவில்லை. அதன் ஒரு முனை என் மார்பில் விழுந்து ஆடிக்கொண்டிருந்தது. நம் படையைச் சேர்ந்தவர்களில் யாராவதுதான் என்னை வயலிலிருந்து தூக்கி வந்திருப்பார்கள், வழியில் அவர்கள்தான் முதற் சிகிச்சை என்ற முறையில் கட்டுப் போட்டிருப்பார்கள் என்ற எண்ணம் என் மூளையில் பளிச்சிட்டது. நான் சிரமப்பட்டுத் தலையைத் தூக்கினேன், அவர்களைக் காணலாம் என்ற நம்பிக்கையுடன். ஆனால் என்னெதிரே ஓடிவந்தவர்கள் எங்களுடைய படையைச் சேர்ந்தவர்கள் இல்லை; ஜெர்மானியர்கள். அவர்களுடைய காலடி ஓசை கேட்டுத்தான் நான் உணர்வு பெற்றிருக்கிறேன் என்பதையும் உணர்ந்தேன். அப்பொழுது நான் வெள்ளித் திரையில் படம் பார்ப்பது போல அவர்களைத் தெளிவாகப் பார்க்கும் சக்தியைப் பெற்றிருந்தேன். நான் என் பக்கத்தில் நாற்புறமும் துழாவிப் பார்த்தேன். ரிவால்வர்; ரைஃபிள், வெடி குண்டு ஏதுவுமே என் கைப்பிடிக்கு அகப்படவில்லை. யாராவது — ஒருவேளை எங்கள் படையைச் சேர்ந்தவராகவே இருக்கலாம் — என் ஆயுதங்களையும், வரை படங்களையும் என் உடலிலிருந்து அகற்றி எடுத்துக்கொண்டிருப்பார்களோ...?

'' 'அப்படியானால் நமது முடிவு காலம் நெருங்கிவிட்டதோ?' — நான் மனத்துள் எண்ணினேன். அந்த நேரத்தில் எனக்கு ஏன் இந்த எண்ணம்...? என் கதையை நீங்கள் உங்கள் வருங்கால நாவலுக்குக் கருப்பொருளாக்கிக்கொள்ள ஆசைப்பட்டால், இனி இடைப் பகுதிகளை நீங்களே நிரப்பிக்கொள்ள வேண்டியதுதான். உண்மை என்னவென்றால், அந்த நேரத்தில் அதிகம் சிந்திக்க நேரமே இல்லை. என் அருகிலேயே ஜெர்மானியர்கள் நின்று கொண்டிருந்தார்கள். ஆனால் நானோ படுத்தபடியே உயிரை விட விரும்பவில்லை. அப்படிச் செய்வது என் கொள்கைகளுக்கு எதிரானது. உங்களுக்குப் புரிகிறதல்லவா? அதாவது, நான் படுத்தபடியே உயிரை விடச் சித்தமாயில்லை. உணர்ச்சி உந்தவே, நான் என் முழுச் சக்தியையும் உபயோகித்துக் கைகளைத் தரையில் ஊன்றி எப்படியோ எழுந்து நின்று விட்டேன்.

''அவர்கள் என்னை அணுகுவதற்கு முன்பாக நான் எழுந்து நின்று விட்டேன். ஆனால் நான் நின்ற நிலை சாராயமருந்திப் போதை ஏறியவனை ஒத்திருந்தது. எந்த நேரமும் என் முழங்கால்கள் தளர்ந்து மடிந்து விடலாம். நாம் கீழே விழுந்துவிட்டால் அவர்கள் தங்கள் துப்பாக்கி முனையைப் பாய்ச்சி என்னைக் கொன்று போட்டுவிடுவார்கள் என்று பயந்தேன். அவர்களில் யாருடைய முகமும் எனக்கு இப்பொழுது நினைவு இல்லை. அவர்கள் தங்களுக்குள் சிரித்துப் பேசிய வண்ணம் என்னைச் சுற்றி நின்றுகொண்டிருந்தார்கள். 'என்னைக் கொன்று போடுங்களேன், அண்டர்களே!' நான் கூவினேன்: 'என்னைக் கொல்லுங்கள். என் கதையை முடியுங்கள். நான் கால் தளர்ந்து கீழே விழுவதற்கு முன்பாக இந்தப் பணியைச் செய்யுங்கள்!' அவர்களில் ஒருவன் என்னைத் துப்பாக்கிக் கட்டையால் அடித்தான். நான் கீழே விழுந்து விட்டேன். ஆனால் எப்படியோ சமாளித்துக் கொண்டு மீண்டும் எழுந்து நின்றேன். அவர்கள் எல்லோரும் கடகடவென்று சிரித்தார்கள். அவர்களில் ஒருவன் சமிக்ஞை காட்டித் தங்களோடு நடந்து வருமாறு கூறினான். நான் நடந்தேன்...

''தலைக் காயத்திலிருந்து கசிந்த ரத்தம் கன்னத்தின் வழியே ஓடிக் கட்டி தட்டியிருந்தது. காயத்தில் அப்புறமும் இரத்தம் கசிந்து கொண்டுதான் இருந்தது. கச கச வென்று சூடாக. என் தோள்பட்டையில் நல்ல வலி. வலது கையைத் தூக்க முடியாமல் கஷ்டப்பட்டேன். அந்த நேரத்தில் அங்கேயே படுத்துக் கிடந்தால் தேவலை போலத் தோன்றியது. எங்கும் போக மனம் இல்லை. ஆயினும் நான் நடந்துகொண்டுதானிருந்தேன்.

''ஊஹூம், நான் சாக விரும்பவேயில்லை. அதற்காக அடிமையாக வாழவும் ஆசைப்படவில்லை. மிகவும் முயன்று என் மூளையை ஒருநிலையில் வைத்து நடக்கலானேன். அந்த வலியிலும் என்னிடம் உள்ள உயிர்ச் சத்துப் போகவில்லை. நடக்கும் ஆற்றல் எனக்கு இருக்கிறது என்ற உணர்வே மேலோங்கி நின்றது. அப்பப்பா! தாகம் தாளாமல் என் நிலை எப்படி மோசமாகிக் கொண்டிருந்தது, தெரியுமா? என் நா ஒரேயடியாக வறண்டு விட்டது. ஒன்று மாற்றி ஒன்றாக ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும்போதும் என் கண்களெதிரே கரிய இருள் அலைகள் எழும்பிய வண்ணம் இருந்தன. நான் நினைவற்ற நிலையை நெருங்கிக்கொண்டிருந்த போதிலும், குடிக்கச் சிறிது நீரும் கிடைத்து இலேசாக இளைப்பாற வசதியும் கிடைத்தால் மீண்டும் பழையபடியே சரியாகிவிட முடியும் என்ற நம்பிக்கையில் நான் முன்னேறிக் கொண்டிருந்தேன்.

''எங்களில் கைது செய்யப்பட்டவர்களை ஒரு சிறு காட்டின் முனையில் வரிசையாக நிறுத்தினார்கள். பெரும்பான்மையானவர்கள் எங்களுக்கு அடுத்த படைப் பகுதியைச் சேர்ந்தவர்கள். என்னுடைய ரெஜிமென்டைச்சேர்ந்த மூன்றாவது கம்பெனியில் நான் இரண்டே இரண்டு பேர்களை மட்டும் அடையாளம் கண்டுகொள்ள முடிந்தது. பெரும்பான்மையான கைதிகள் காயமுற்றிருந்தார்கள்.

''ஒரு ஜெர்மானிய லெஃப்டினெண்ட் தனக்குத் தெரிந்த அரைகுறை ருஷிய மொழியில் எங்களிடையே கமிசார்களும் கமாண்டர்களும் இருக்கிறோமா என்று கேட்டான். யாரும் விடையளிக்கவில்லை. அப்பொழுது அவன் கர்ஜனை புரிந்தான். 'கமிசார்களும் அதிகாரிகளும் இரண்டு அடி முன் எடுத்து வையுங்கள்!' என்று. ஆனால் யாருமே அசைந்து கொடுக்கவில்லை.

''லெஃப்டினெண்ட் மெதுவாக வரிசைக்கு முன்னால் வந்தான். யூதர்களைப் போலத் தோற்றமளித்த ஏறக்குறைய பதினைந்து நபர்களைத் தேர்ந்தெடுத்தான். அவர்கள் ஒவ்வொருவரிடமும் 'ஜூட்?' என்று கேட்

டான். பதிலே எதிர்பாராமலே குறிப்பிட்ட மனிதனைத் தனியாகப் போய் நிற்குமாறு உத்தரவிட்டான். அவன் தன் அநுமானத்தைக் கொண்டு பொறுக்கி எடுக்கப்பட்டவர்களில் யூதர்கள் மட்டுமென்ன, ஆர்மேனியர்களும், ருஷ்யர்களும் கூட இருந்தார்கள். மாநிறமான அவர்களுடைய தலைமயிர் கறுப்பாக இருந்தது. அவர்களை எங்கள் கூட்டத்திலிருந்து பிரித்துத் தனியாகச் சிறிது தொலைவுக்கு அழைத்துச் சென்றார்கள். நாங்கள் பார்த்துக் கொண்டிருக்கும்போதே 'டாமி கன்'களைக் கொண்டு அவர்களைச் சுட்டுத் தீர்த்தார்கள். அதற்குப் பின் அவசியமாக எங்களனைவருடைய நிஜார்ப் பைகளையும் சோதனையிட்டார்கள். எங்களுடைய பாக்கெட் நோட்டு, மற்றும் எங்களுக்கென்று நாங்கள் தனிப்பட வைத்துக்கொண்டிருந்த பொருள்கள் அனைத்தையும் பிடுங்கிக்கொண்டார்கள். எங்கள் கட்சியின் அடையாளச் சீட்டைப் பாக்கெட் நோட்டில் வைக்கும் பழக்கம் எனக்கு எப்பொழுதுமே கிடையாது. நான் என் பாண்டின் உள் பைக்குள்தான் வைத்துக்கொள்வேன். அதனால் அவர்கள் அதைப் பார்க்க மறந்துவிட்டார்கள். மானிட இயல்பைப் பற்றி நீங்கள் சிந்திக்கத் தொடங்கினால், இந்த மனிதன்தான் எத்தகைய விநோதமான பிராணி என்பதைக் காண்பீர்கள். என் வாழ்க்கை ஒரு மெல்லிய நூலில் ஊசலாடிக் கொண்டிருந்தது என்பதை நான் நன்கு அறிவேன். தப்பியோடினாலும், ஓடும்போது கொல்லப்படாவிட்டாலும், வழியில் இறந்துபடுவேன் என்பதை நன்கு உணர்ந்திருந்தேன். ஏனென்றால் என் உடலிலிருந்து இரத்தம் மிகவும் வெளியேறியிருந்தது. என்னால் மற்றவர்களோடு அவர்களுக்கு இணையாக ஓட முடியாது. ஆயினும் என் நிஜார்ப் பை சோதனை முடிந்த பின் என் கட்சியின் அடையாளச் சீட்டு அவர்கள் கையில் கிடைக்காதது குறித்து மிகவும் மகிழ்ச்சியுற்றேன். அந்த மகிழ்ச்சியில் எனக்கு என் தாகம் எல்லாம் தீர்ந்துவிட்டது போன்ற உணர்வு உண்டாயிற்று.

''நாங்கள் அணிவகுத்து நிறுத்தப்பட்டோம். பிறகு மேற்குநோக்கி அழைத்துச் செல்லப்பட்டோம். சாலையில் இருமருங்கிலும் எங்களுக்குக் காவலாகச் சில வீரர்கள் நடந்து வந்து கொண்டிருந்தார்கள். அவர்களைத் தவிர எங்களோடு மோட்டார் சைக்கிள்களில் பத்துப் பன்னிரண்டு இராணுவ அதிகாரிகளும் வந்து கொண்டிருந்தனர். எங்களைப் படுவேகமாக நடத்திச் சென்றார்கள். அதே வேகத்தில் என் உடலில் வலுக் குன்றிக் கொண்டிருந்தது. இரண்டு முறை நான் விழக்கூட விழுந்து விட்டேன். ஆனால் எப்படியோ சமாளித்து எழுந்து இரண்டு முறைகளும் அவர்களோடு நடந்தேன். ஏனெனில், ஒரு நிமிஷம் நான் பின்தங்கிவிட்டாலும், படை முன்னேறிவிடும். எதிரிகள் என்னை அங்கேயே துப்பாக்கி ரவைக்கு இரையாக்கி விடுவார்கள் என்பதை நான் அறிந்திருந்தேன். எனக்கு முன்னால் போன சார்ஜெண்டுக்கு இந்த நிலைதான் ஏற்பட்டது என் கண் முன்னே. காலில் குண்டடி பட்டுக் காயமுற்றிருந்தான். எப்படியோ சிரமப்பட்டுக் காலை இழுத்து இழுத்து நடந்து கொண்டிருந்தான். இடையிடையே அவன் பொருமுவான், வலி தாங்காமல், சில சமயம் கதறியே விடுவான். நாங்கள் ஏறக் குறைய ஒரு கிலோ மீட்டர் நடந்திருப்போம் இப்படியாக. அப்பொழுது அவன் கிறீச்சிட்டுக் கதறி, 'இனி என்னால் பொறுக்க முடியாது தோழர்களே, எனக்குக் கடைசி விடை கொடுங்கள்!' என்று கூறி அப்படியே நடுச் சாலையில் உட்கார்ந்து விட்டான்.

''எங்கள் நண்பர்கள் கை கொடுத்து அவனைத் தூக்கி நிறுத்த முயன்றார்கள். ஆனால் அவன் மீண்டும் கால் நிலை பாவாமல் தடுமாறி விழுந்து விட்டான். அவனது நினைவு இன்னும் என் கண் முன்னே ஒரு கனவெனத் தோன்றுகிறது — வெளுத்துத் தொய்ந்த இளம் முகம், வில்லென இழுத்த புருவங்கள், கண்ணீர்க் குளம் கட்டிய கண்கள். எங்கள் கும்பல் முன்னேறிவிட்டது. நான் பின்னால் திரும்பிப் பார்த்தேன். மோட்டார் சைக்கிள்களில் வந்த இராணுவ அதிகாரிகளில் ஒருவன் அவனருகில் சென்றான். தன் வாகனத்திலிருந்து இறங்காமலே தன் கைத் துப்பாக்கியை எடுத்தான். சார்ஜெண்டின் காதோரமாகக் குறிவைத்துச் சுட்டுவிட்டான். நாங்கள் ஆற்றங் கரையை அடைவதற்கு முன்பாகவே ஜெர்மானியர்கள் இப்படிப் பின்தங்கிவிடும் செஞ்சேனையைச் சேர்ந்த பல கைதிகளையும் சாவின் மடியில் தூங்க வைத்துவிட்டார்கள்.

''அத்தனை சாவுகளுக்கும் பின்னர்தான் எங்களுக்கு ஓர் ஆறு தென்பட்டது. அதைக் கடக்கவென்று கட்டப் பட்டிருந்த பாலம் இடிந்து நொறுங்கிக்கிடந்தது. ஒருடிரக், இருப்பத்துக்கருகில் சகதியில் சிக்கிக் கொண்டிருந்தது. அங்கே போன பிறகுதான் நான் குப்புறங் கரணமாக விழுந்தேன். நான் மூர்ச்சித்து விட்டேனா? இல்லை, மூர்ச்சித்து விடவில்லை. சாலையில் விழுந்து நீண்டு படுத்து விட்டேன். என் முகம் முழுவதும் புழுதி மண்டிவிட்டது. கோபத்தில் என் பற்கள் நறநறத்தன. என் கால்களுக்கிடையே சிக்கி மணல் நலுங்குவதையும் நான் உணர்ந்தேன். ஆனால் என்னால் எழுந்து நிற்க முடியவில்லை. என் தோழர்கள் என்னைத் தாண்டி முன்னேறி விட்டார்கள். 'சீக்கிரம் எழுந்து நில்!' — நண்பர்களில் ஒருவன் என் அருகாகப் போகும்போது மெதுவான குரலில் கூறிச் சென்றான்: 'இல்லாவிட்டால் இப்பொழுதே உன்னைக் கொன்று போட்டு விடுவார்கள்.' நான் என் விரல்களினால் வாயைக் கிழிக்க முயன்றேன். என் விழி இமைகளை இறுக மூடிக் கொண்டேன். படுத்து விடும் சண்டி மாடுகளை எழுப்பக் கண்ணிலும் மூக்கிலும் வெங்காயத்தையும் மூக்குப் பொடியையும் திணித்தால் அந்த வேதனை தாளாமல் எழுந்துவிடும் அல்லவா? அதே போல நம்மை நாமே வருத்திக் கொண்டு உணர்வு பெற்று எப்படியாவது அந்த வேதனையில் காலை ஊன்றி எழுந்துவிடலாம் என்றுதான் நான் பலவாறாக முயன்றேன்.

''எங்கள் குழு தகர்ந்து விட்டது. என்னை நோக்கி வரும் மோட்டார் சைக்கிள்களின் சக்கரம் எழுப்பும் ஒலி தெளிவாக என் காதுகளில் விழுந்தது. எங்கிருந்து எனக்கு அந்த வலு வந்ததோ தெரியவில்லை. எப்படியோ எழுந்து கால் ஊன்றி நின்றேன். மோட்டார் சைக்கிள்கள் வரும் திசையைத் திரும்பிப் பாராமலே குடிகாரனைப் போலத் தட்டித் தடுமாறி ஓடி என் அணியைப் பிடிக்க முயன்றேன். எப்படியோ முன்னேறிப் பின்னும் உள்ள ஏதோ ஒரு வரிசையையும் பிடித்து விட்டேன். ஆற்றைக் கடக்கும்போது டாங்கிகளும் டிரக்குகளும் சென்று சென்று சேறாகக் குழப்பி வைத்திருந்த தண்ணீரைத்தான் நாங்கள் காண முடிந்தது. அந்தச் சேற்றுக் குழம்பை உளமாறப் பருகினோம். அந்த நேரத்துக்குச் சுட்டுக் கொண்டிருந்த அந்தச் சேற்றுக் குழம்புதான் எங்களுக்கு அருவியிலிருந்து பெருகும் குளிர்ந்த தெள்ளிய நீருக்கு ஒப்பாகத் திகழ்ந்தது. நான் என் தோள்களிலும், தலையிலும் அந்த நீரை வாரித் தெளித்துக் கொண்டேன். அதனால் எனக்கு ஒரு புத்துணர்ச்சி ஏற்பட்டது. இறந்து போன தெம்பு மீண்டும் ஊறியது போலிருந்தது. இனி நாம் கீழே விழுந்து பாதையிலேயே பின் தங்கிவிட மாட்டோம் என்ற நம்பிக்கையும் பிறந்தது.

''அப்பொழுதுதான் நாங்கள் நதியைப் பின் நிறுத்தி முன்னேறியிருந்தோம். வழியிலே நடுத்தரமான ஜெர்மன் டாங்கிப் படை ஒன்று நின்றுகொண்டிருப்பதைக் கண்டோம். எல்லாவற்றுக்கும் முன்னால் நின்ற டாங்கியின் டிரைவர் எங்களைப் பார்த்தான். போர்க் கைதிகள் நாங்கள் என்பதைப் புரிந்து கொண்டான். டாங்கியிலிருந்து விஷ வாயுவை எங்கள் மீது பிரயோகித்தான். முன் வரிசையில் சென்றவர்கள் கண் கலங்கிக் குருடாகி ஒருவர் மீது ஒருவர் விழுந்து நசுங்கினார்கள். மோட்டார் சைக்கிள்களில் வந்த அதிகாரிகளும் காவற் படையினரும் இந்தக் காட்சியைக் கண்ணுற்றுக் கடகடவெனப் பேய்ச் சிரிப்புச் சிரித்து மகிழ்ந்தனர். பிறகு அவர்கள் ஜன்னல்களைத் திறந்து கைகளை ஆட்டிச் சமிக்ஞை செய்து கொண்டிருந்த டாங்கி டிரைவர்களிடம் உரத்த குரலில் ஏதோ கூறினார்கள். நச்சுப் புகையின் இருட்டு அடங்கியதும் நாங்கள் சிறிது சமாளித்துக் கொண்டோம். மீண்டும் அவர்கள் எங்களை அணிவகுத்து நிற்குமாறு உத்தரவிட்டார்கள். பிறகு சாலை ஓரமாக எங்களை இட்டுச் சென்றார்கள். ஜெர்மானியர்களின் விநோத உணர்வு வேடிக்கையானது, விசித்திரமானது என்பதில் ஐயமில்லை...

''அன்று மாலையோ இரவோ நான் ஓடி விட எந்த முயற்சியும் மேற்கொள்ளவில்லை. அப்படிச் செய்து நம்மால் தப்ப முடியாது என்பதை நான் அறிந்திருந்தேன். இரத்தப் பெருக்கின் காரணமாக நான் மிகவும் வலு இழந்து விட்டிருந்தேன். அதோடு எங்கள் போக்கையும், நடவடிக்கையையும் கடுமையாகக் கண்காணித்து வந்தார்கள். ஓடித் தப்ப எந்த முயற்சி எடுத்துக் கொண்டாலும் அது வீணே. அந்த நேரத்துக்கு இந்த முடிவுக்கு வந்தவன், அப்பொழுதே ஓடித் தப்ப முயலாமற் போனது எத்தனை அறிவீனமான செயல் என்று என்னை நானே பல முறைகள் நொந்துகொண்டதுண்டு. மறுநாள் எங்களை ஒரு கிராமத்துக்கு இட்டுச் சென்றார்கள். அங்கே ஒரு ஜெர்மானியப் படை முகாமிட்டிருந்தது. ஜெர்மானியத் தரைப் படை வீரர்கள் எங்களைப் பார்ப்பதற்காகச் சாலையிலே குழுமியிருந்தார்கள். எங்களுக்குக் காவலாக வந்த படையினர், இக்கிராமத்திலிருந்து நடப்பதை விட்டு நாங்கள் ஓட வேண்டும் என்று எங்களுக்கு ஆணையிட்டனர். போரிட வந்திருக்கும் அந்த ஜெர்மானிய வீரர்களுக்கு எதிராக எங்களை அவமானப்படுத்த வேண்டும் என்ற ஆசை அவர்களுக்கு. அவர்களுடைய அந்த ஆசையை நிறைவேற்ற நாங்கள் அவர்கள் ஆணையைச் சிரமேற்கொண்டு ஓடினோம். யாராவது பின் தங்கினாலும் அல்லது கீழே விழுந்து விட்டாலும் அங்கேயே குண்டுக்கு இரையாக்கப்பட்டோம். மாலை நேரத்தில் அந்தி மயங்குவதற்குள்ளாக நாங்கள் போர்க் கைதிகளின் முகாமை அடைந்து விட்டோம்.

''இந்த முகாம் ஆரம்பத்திலேயே ஒரு மெஷின் – டிராக்டர் நிலையத்தில் அமைக்கப்பட்டிருந்தது. நாற்புறமும் முள் வேலியினால் சூழ்ந்திருந்தது. உள்ளே கணக்கற்ற கைதிகள் தோளோடு தோள் பொருத்திப் புளியடைப்பதுபோல் திணிக்கப்பட்டிருந்தனர். எங்கள் அனைவரையும் முகாமைச் சேர்ந்த பாராக்



விக்கோ
உருவாக்கிய
மற்றெரு பிரபல
அழகு சாதனம்

.....ஒப்பற்ற அழகு வாய்ந்த விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீம் ஈடு இணை இல்லாதது. வசீகரத் தோற்றத்திற்கு மிகவும் உதவியாக இருப்பதிலுைல், அது உண்மை மதிப்புக்களைப் பெரிதும் பெற்றிருக்கிறது. மேலும் விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீமை யாவரும் பயன்படுத்திப் பயன் அடையலாம்.

ஆண்களும், க்ஷவரத்திற்குப் பின் உபயோகப் படுத்தலாம். அதில் சிறப்பு வாய்ந்த கிருமிநாசினி மருந்துகளின் குணங்கள் அடங்கியுள்ளதுடன் சருமத்தைப் போஷித்துப் பாதுகாக்கவல்லது. இது ஒரு அழகு சாதனம் மட்டுமல்ல ரோமம் வளர்வதைத் தடுக்கிறது. இது பண்டைக் கால முதற்கொண்டே அனுபவப்பட்ட விஷயம்.

## விக்கோ டர்மெரிக் வானிஷிங் க்ரீம்

என்றால் மஞ்சள் ஸ்நோ
சந்தன நறுமணம்
கொண்டது.




*STOCKISTS:*
MADRAS : R. L. GOWDER & Co., 59, Bunder Street
COIMBATORE : N. DESAI GOWNDER & Co., Avanashi Road
MANGALORE : K. S. GOWDER & Co., Subhedar Chatram Street

## அத்தியாயம் 22

# சதித் திட்டம்




புது தில்லி நகரத்தின் போக்கு வரத்து அதிகமில்லாத ஒரு நீண்ட வீதியில் மிருணாளினியும் தங்கப்பனும் நிதானமாகப் பேசிய படியே நடந்து சென்று கொண்டிருந்தார்கள். இருவருமே கனமான ஓவர் கோட்டும் காதுகளை மூடுவதுபோல் மப்ளரும் அணிந்திருந்தார்கள் குளிருக்கு அடக்கமாக. கரம் கோத்துக் கொண்டு அவர்கள் நடக்கும் இந்தக் காட்சியை யாரேனும் ஓரிடத்தில் நின்று கவனித்திருந்தால் வீதி விளக்கு வெளிச்சத்தில் அவ்விரு உருவங்களும் சில விநாடிகளுக்கு முழுமையாகத் தெரிவதும் மறுபடியும் இருளில் இனம் தெரியாமல் கலப்பதும் அடுத்த விளக்கின் ஒளியில் அவ்வுருவங்கள் மீண்டும் புலப்படுவதுமாய் இருக்கும் ஓர் அழகினை வெகுவாக அனுபவித்திருப்பார்கள். அத்துடன் அவர்கள் கரம் கோத்து ஒன்றி மெல்ல நடப்பதையும் அடிக்கடி ஒருவரை ஒருவர் திரும்பிப் பார்த்து ஓர் அன்னியோன்னிய பாவத்துடன் உரையாடுவதையும் கண்டு அவர்கள் இருவரும் ஒருமித்த மனமுடைய காதலர்கள் என்றே முடிவு கட்டியிருப்பார்கள். ஆனால் இப்படி இனிய கற்பனையில் ஆழ்ந்துபோகவோ, அல்லது இந்த மனோரம்மியமான தோற்றத்தை ரசிக்கவோ சுற்று வட்டாரத்தில் அதிகம்பேர் இல்லை. அந்தச் சாலை வழியே வந்த இரண்டொருவரும் நேரமாகி விட்டது என்பதாலோ அல்லது வேறு அவசர வேலைகள் இருந்த காரணத்தாலோ விரைந்து சென்று கொண்டிருந்தனர். சில நிமிஷங்களுக்கு ஒரு முறை அவர்களைத் தாண்டி ஒரு கார் உறுமிக் கொண்டு பாய்ந்தோடும். இதைத் தவிர அந்தத் தெருவில் நிசப்தமே நிலவியது.

''இப்படிக் கனமான கம்பளிக் கோட்டு அணிந்து கொண்டு கடுங்குளிரில் நடப்பதில் எனக்கு ஓர் அலாதி ஆனந்தம்'' என்றாள் மிருணாளினி தங்கப்பனை ஏறிட்டு நோக்கி. ''இயற்கைக்கே சவால் விடுவதுபோல் நடந்து கொள்வதில் ஒரு திருப்தி. பலத்த மழை பெய்யும்போது 'ரெயின் கோட்' அணிந்து சென்றிருக்கிறீர்களா? எனக்கு அந்த அனுபவம் மெய்சிலிர்ப்பை உண்டாக்கும்! இயற்கையுடனே போராடி அதனை வெற்றி கண்டு விட்டது போல் ஒரு கிளுகிளுப்பு! அசட்டுத்தனம்தானே இது? 'அப்படி நடப்பது இயற்கைதானே? அதிலென்ன அதிசயம்?' என்று பல சந்தர்ப்பங்களில் நாம் அலட்சியமாகப் பல விஷயங்களை ஒதுக்கித் தள்ளிவிடுகிறோம். அப்போதெல்லாம் இயற்கை என்பது எத்தனை சக்தி வாய்ந்தது என்று நினைத்துப் பார்க்கிறோம்? இயற்கையின் பலத்தை சாதாரணமாக நாம் உணர்வதேயில்லை.''

''இயற்கையுடன் நீங்கள் போராடுவது இடக்கட்டும்; உங்கள் வாழ்க்கையே ஒரு பெரும் போராட்டமாக அல்லவா அமைந்துவிட்டிருக்கிறது?'' என்றான் தங்கப்பன்.

மிருணாளினி தன் நெஞ்சையும் சிரத்தையும் உயர்த்தி ஒரு பெருமூச்சு விட்டாள். அந்தச் செயலின்போது அவள் கண்களுக்கு வானில் மின்னிய நட்சத்திரங்கள் தென்பட்டன. அவள் தலை மீண்டும் தாழ்ந்த போது, ''இந்த நட்சத்திரங்களைப் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

தங்கப்பனும் அண்ணாந்து நோக்கினான். ''நினைக்க என்ன இருக்கிறது? வெகு தொலைவில் உள்ளன என்பதும் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சூரியனைப் போன்றது என்றும் அவற்றின் ஒளி பூமியை வந்தடைய எத்தனை எத்தனையோ வருஷங்கள் ஆகின்றன என்றும் படித்திருக்கிறேன்.''

''எனக்குச் சில சமயங்களில் என்ன தோன்றும் தெரியுமா?'' என்றாள் மிருணாளினி. ''வானமே ஒரு கூரை; சர்க்கஸ் டெண்டு கொட்டகை மாதிரி அதிலே சிறிய சிறிய பொத்தல்கள் இருக்கின்றன; அவற்றின் வழியே அந்தக் கூரைக்கு அப்பால் உள்ள ஒளி ஆங்காங்கே கொஞ்சம் கொஞ்சம் ஊடுருவுகிறது என்று நினைத்துக் கொள்வேன்!''

தங்கப்பன் நடப்பதை நிறுத்திவிட்டான். அவன் கரத்தில் அவள் கை சிக்கியிருந்ததால் அவளும் நின்றாள். பொன்னகரத்தில்

முன்பொரு முறை மிருணாளினி பவழமல்லிகைச் செடியை வர்ணித்தது தங்கப்பனுக்கு நினைவு வந்தது. ''இப்படி ஒரே சமயத்தில் இரண்டு வித உள்ளப் பாங்குடன் விளங்க உங்களால் எப்படி முடிகிறது?'' என்று கேட்டான் அவன். ''உங்கள் மனத்தின் ஒரு பக்கம் குழந்தைத்தனமான புதுமை மலர்ச்சியுடன் எளிமையும் அழகும் கொண்ட கவிதா சக்தி பெற்று விளங்குகிறது. மறுபக்கத்தில் மிக முதிர்ந்த சிந்தனையும் புரட்சி வேகமும் சிறுமை கண்டு பொங்கும் சீற்றமும் அலை பாய்கின்றன. இவை இரண்டையும் இணைத்து நோக்கி ஒரு மிருணாளினியாகக் காண என்னால் முடியவில்லை!''

மிருணாளினி சிரித்தாள். சிரித்தபடியே நடந்தாள். அவள் கரத்தால் பற்றி இழுக்கப்பட்டு அவனும் நகர்ந்தான். ''என் மனத்தைச் சொல்லப் போய்விட்டீர்களே; புதுதில்லியில் இப்போது எவ்வளவு அமைதியான சூழ்நிலை பாருங்கள்! இந்தச் சூழலில் இன்று நம்மைப் போல உலவி வரும் யாரேனும் இன்னும் ஓரிரு தினங்களுக்குள் இங்கு சரித்திரத்தையே மாற்றி யமைக்கப் போகிற ஒரு மகத்தான புரட்சி புயல் வேகத்தில் உருவாகப் போகிறது என்று நம்புவார்களா?''

தங்கப்பன் மறுமுறையும் நின்றான். அவள் தோள்களைப் பற்றித் தன்னை நோக்கி அவள் இருக்குமாறு திருப்பினான். ''நிஜமாகவா மிருணாளினி? உங்கள் திட்டங்கள் நிறைவேறும் காலம் நெருங்கிவிட்டதா?'' என்று கேட்டான்.

''வாருங்கள், அப்படி உட்கார்ந்து பேசுவோம்'' என்று அழைத்தாள் அவள். நான்கு சாலைகள் சந்திக்கும் இடத்தின் மையத்தில் அமைந்திருந்ததும் மோட்டார் கார்கள் வலம் வருவதுமான ஒரு பெரிய வட்ட வளைவுக்குள் மலர்த் தோட்டம் போட்டிருந்தார்கள். ஒரு பக்கமாக அமர்வதற்கு 'பெஞ்சு'ம் இருந்தது. அவர்கள் உட்காருவதற்கு முன்னால் கைக்குட்டையை எடுத்து அதில் படிந்திருந்த பனியை ஒற்றி எடுத்தான் தங்கப்பன்.

மிருணாளினி கூறிய விவரங்கள் அவனைத் திகைப்பில் ஆழ்த்தின. கம்யூனிஸத்தின் சிறப்பு பற்றிப் பேசியும் எழுதியும் மேடைப் பிரசங்கம் செய்தும் மக்களைக் கவர முயலுகிற பிரபலஸ்தர்கள் யாரிடமும் மிருணாளினி மதிப்போ மரியாதையோ வைக்கவில்லை. அவர்களில் யாரையும் தன் தலைவராக அவள் கருதவில்லை. அவர்களுடைய இந்த முயற்சி வீண் பிரயாசை என்ற முடிவுக்கு அவள் வந்து நீண்ட நாட்களாகிவிட்டன. தொன்மையான பழக்க வழக்கங்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருப்பவர்களும் இறையுணர்ச்சி மிகுந்தவர்களுமான மக்களை இந்த விதமாகக் கவர முடியாது என்று அவள் தீர்மானித்திருந்தாள். ஆனாலும் இந்த மேடைப் பிரசங்கிகள் ஒரு விதத்தில் பெருபகாரம் செய்தார்கள். அவர்களுக்குப் பின்னால் மிருணாளினியும் அதி தீவிரவாதிகளான அவளுடைய தோழர் பலரும் புரட்சி முன்னணி என்பதாக ஒரு ரகசியச் சங்கம் அமைத்திருந்தார்கள். இந்த ரகசியக் கூட்டத்தினிடம் யாருடைய கவனமும் செல்லாமல் திசை திருப்ப இந்தப் பிரபலஸ்தர்களின் ஆர்ப்பாட்டமான சொற்பொழிவுகள் அவர்களே அறியாதவாறு ஒரு திரைபோல் இருந்து பயன்பட்டன.

புரட்சி முன்னணியின் ரகசியக் கூட்டங்கள் அவ்வப்போது புதுதில்லியில் நடைபெற்றன. இந்தச் சங்கம் இன்றைய லஞ்ச ஊழல் மிகுந்த ஏதேச்சாதிகார ஆட்சியை அடியோடு வெறுத்து அதனைக் கவிழ்க்க ஏற்பாடுகள் செய்து வந்தது. பயங்கரமான ஐந்தாம்படை வேலைகளில் ஈடுபட்டிருந்தது. அயல் நாடுகளில் வெகு நேர்த்தியாக அசல் போலவே அச்சடிக்கப்பட்ட ரூபாய் நோட்டுகளைப் பெருவாரியாகக் கள்ளத்தனமாகக் கொண்டுவந்து தங்கள் சதிச் செயல்களுக்குத் தேவைப்படும்போதெல்லாம் பயன்படுத்திக் கொண்டது. இதன் மூலம் மக்களிடையே பணப் புழக்கத்தையும் அதிகரித்து மேலும் மேலும் பொருளாதாரச் சீர்குலைவு ஏற்பட வழிவகுத்தது. இந்நாட்டின் பாதுகாப்பு முயற்சிகள் பற்றிய பல தகவல்களைச் சேகரித்து வைத்ததுடன் புகைப்படங்களும் எடுத்து வைத்திருந்தது. இச்சங்கத்தின் அங்கத்தினர்கள் ஆயிரக்கணக்கில் இல்லை. குறைந்தபட்சத் தேவைக்கு மேல் இருந்தால் பிறகு அது ஓர் அந்தரங்கக் கூட்டமாய் இராமல் அம்பலத்துக்கு வந்துவிடுமே! ஆனால் இருந்த அங்கத்தினர்கள் அனைவரும் பொறுக்கி எடுக்கப்பட்ட தீரர்கள். சமிக்ஞை கிடைத்தால் போதும்; தங்கள் தங்கள் கடமையை உயிருக்கு அஞ்சாமல் உயிரைக் கொடுத்தேனும் நிறைவேற்றக் காத்திருந்தார்கள். அவரவர்களின் கடமை என்ன என்பது அவரவர்களுக்கு உணர்த்தப் பட்டிருந்தது.



''என்னைத் திணற அடித்துவிட்டீர்கள்'' என்றான் தங்கப்பன். ''ஏதோ இம்மாதிரியான ஒரு கூட்டத்துடன்தான் நீங்கள் தொடர்பு கொண்டிருக்க வேண்டும் என்று நினைத்தேன். உங்களுடன் இத்தனை நாள் பழகியதிலிருந்து இதை அனுமானிக்க என்னால் முடிந்தது. ஆனால் இத்தனை முன்னேற்பாடுகளுடன் இந்த அளவுக்கு நீங்கள் தயாராக இருப்பதாக நான் எண்ணவேயில்லை! அது சரி, உங்கள் நண்பர்களை நான் சந்திக்க வேண்டுமே; எப்போது அழைத்துப் போகப் போகிறீர்கள்?'' என்று கேட்டான் தங்கப்பன் ஆர்வத்துடன்.

''சுலபத்தில் அவர்களைச் சந்தித்துவிட முடியுமா? அல்லது அவர்கள்தான் உங்களைப் பார்க்க எளிதாகச் சம்மதித்துவிடுவார்களா? நான் உங்களை நம்புகிறேன். அதுபோல் அவர்களும் நடந்து கொள்வார்களா? நீங்கள் நம்பிக்கைக்கு உரியவர்தான் என்பதை அவர்களுக்கு நீங்கள் நிரூபித்துக் காட்ட வேண்டும். அப்போதுதான் அவர்களும் தங்கள் முகத்தை உங்களுக்குக் காட்டத் துணிவார்கள்!''

''என்ன செய்ய வேண்டும் நான், சொல்லுங்கள்!'' என்றான் தங்கப்பன். ''இந்த நாட்டில் நல்லாட்சி உருவாக நானும் என் பங்கைச் செய்யத் துடித்துக் கொண்டிருக்கிறேன்!''

''சொல்கிறேன், கேளுங்கள்! கேட்டு மனதில் நன்கு பதிய வைத்துக் கொள்ளுங்கள். மறந்து போய்க்கூட இது விஷயமாக யாரிடமும் பேசிவிடாதீர்கள்!'' என்ற பூர்வ பீடிகையுடன் மிருணாளினி கூறத் தொடங்கினாள்.

''உள்துறை அமைச்சர் தீனதயாளு சில மாதங்களாகவே ராணுவத்தில் கம்யூனிஸ்டுகளின் ஊடுருவல் படிப்படியாக அதிகமாகி வருவதாகச் சந்தேகிக்கிறார். சில்லறை ஆசாமிகள் சிலருடன் உயர் பதவியில் உள்ள பலரும்கூட இப்படி கம்யூனிஸ சித்தாந்தத்தை மேற்கொண்டிருக்கிறார்கள் அந்தரங்கமாக. ராணுவத்தில் உள்ளவர்கள் அரசி



## இனிய தமிழ் புத்தகங்களை படித்து அனுபவிக்க இதோ ஓர் அரிய வாய்ப்பு!

# உங்கள் வீட்டிலேயே உங்களுக்குச் சொந்தமாக ஓர் நேர்த்தியான "வீட்டு நூலகம்" அமைக்க

தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34




SOUTHERN LANGUAGES
BOOK TRUST

# அளிக்கும் திட்டம்

### *முதலீடு மாதம் ரூபாய் 5-00 மட்டுமே!*

18 மாதங்களில் ரூ. 90.00 மதிப்புள்ள நீங்களே இஷ்டப்பட்டு தேர்ந்தெடுத்த அரிய பல தமிழ் நூல்களும் மற்றும் ரூ. 20.00 மதிப்புள்ள 12 பரிசு நூல்களும் அடங்கிய அழகிய நூலகம் உருவாகிவிடும்.

### இத் திட்டத்தின் சிறிய அம்சங்கள் :

* சிக்கல்கள் அற்ற சுலபமான வழி.
* வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்க உதவியாக 75க்கு மேற்பட்ட புத்தகப் பதிப்பாளர்களின் பல அரிய புத்தகங்களின் பட்டியல் இலவசமாக தரப்படுகிறது. சென்னை வாசிகள் டிரஸ்டின் அலுவலகத்திற்கு நேரில் விஜயம் செய்தும் வேண்டிய புத்தகங்களை தேர்ந்தெடுக்கலாம்.
* நாவல், நாடகம், வரலாறு, சரித்திரம், சமயம், விஞ்ஞானம், இலக்கியம், ஓவியம், காவியம் சிறுவர் இலக்கியம் போன்ற எல்லாவித புத்தகங்களும் உள்ளன.
* திட்டத்தில் சேரும் பேர் மாதச் சந்தாவான ரூபாய் ஐந்தைத்தவிர தபால் செலவு போன்ற எவ்விதச் செலவையும் ஏற்கவேண்டாம்.
* டிரஸ்டின் மாத வெளியீடான "புத்தக நண்பன்" என்னும் சஞ்சிகைப் பிரதி ஒன்று அங்கத்தினர்களுக்கு ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படுகிறது.
* 18 மாதங்களில் 12 பரிசுப் புத்தகங்களும் கிடைக்கின்றன.

கீழே கொடுத்துள்ள திட்ட விவரங்களை படித்து உடனே அங்கத்தினராக சேருங்கள்.

முதல் மாத சந்தாவான ரூ. 5.00 தென் மொழிப் புத்தக டிரஸ்டாருக்கு கிடைத்தவுடன் சந்தாதார் இத் திட்டத்தின் அங்கத்தினராகப் பதிவு செய்யப்பட்டு அவருக்கு கீழே கண்டவை தபால் மூலம் அனுப்பப்படும் :

a) பதிவு செய்யப்பட்ட அங்கத்தினர் என்ற ஒரு சீட்டு.

b) பரிசு புத்தகங்கள் மூன்று. (விளம்பரத்தில் காட்டியுள்ள 8 புத்தகங்களிலிருந்து நீங்கள் தேர்ந்தெடுக்கும் 3 புத்தகங்கள்).

c) ஒரு பெரிய புத்தகப் பட்டியல்.

d) டிரஸ்டின் மாதவெளியீடான "புத்தக நண்பன்" என்ற சஞ்சிகையின் பிரதி ஒன்று. (இப் பிரதி தொடர்ந்து ஒவ்வொரு மாதமும் இலவசமாக அனுப்பப்படும்.)

2. 6 மாத சந்தா தொகை செலுத்திய பிறகு அங்கத்தினர்களுக்கு டிரஸ்டார் கீழ்க்கண்டவைகளை அனுப்புவார்கள் :

a) ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்கள்.

b) பரிசு புத்தகங்கள் மூன்று.

மேற்கண்டவைகளைப் பெற, அங்கத்தினர்கள் ஏற்கனவே பெற்ற புத்தகப் பட்டியலிலிருந்து சுமார் ரூ. 75-00 மதிப்புள்ள புத்தகங்களைப் பொறுக்கி அதோடு பரிசுப் புத்தகங்கள் லிஸ்டிலிருந்து தனக்கு விருப்பமான 3 புத்தகங்களையும் குறிப்பிட்டு டிரஸ்டுக்கு தெரிவிக்க வேண்டும். இத் தகவல் கிடைத்தவுடன் டிரஸ்டார் ரூ. 25.00 மதிப்புள்ள புத்தகங்களும் 3 பரிசு புத்தகங்களும் அங்கத்தினருக்கு எவ்வித செலவுமின்றி அனுப்பி வைப்பார்கள்.

3. 12 மாத சந்தா செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு டிரஸ்டார் மறுபடியும் ரூ. 30-00 மதிப்புள்ள அங்கத்தினரே தேர்ந்தெடுத்த புத்தகங்களும், மேலும் 3 பரிசு புத்தகங்களும் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் மேற்சொன்னபடி செய்யவேண்டும்.

4. 18 மாத சந்தா தொகை முழுவதும் செலுத்திய பிறகு அங்கத்தினருக்கு மேலும் ரூ. 35.00 மதிப்புள்ள புத்தகங்களையும், 3 பரிசு புத்தகங்களையும் டிரஸ்டார் அனுப்பி வைப்பார்கள். இவைகளைப் பெற அங்கத்தினர் முன் செய்ததுபோல் செய்யவேண்டும்.

5. 18 மாதங்களுக்கும் சந்தா செலுத்த முடியாமற்போன அங்கத்தினர்களுக்கு, அவர்கள் செலுத்திய தொகையளவு மதிப்புள்ள புத்தகங்கள் அனுப்பப்படும். இவ்வங்கத்தினர்கள் புத்தகங்களுக்கான பாக்கிங் மற்றும் தபால் செலவையும் ஏற்கவேண்டும்.

**இத் திட்டத்தில் சேர்ந்து 18 மாதங்களும் சந்தா செலுத்தும் அங்கத்தினர் அடையும் லாபம் என்ன ?**

| | | | |
|---|---|---|---|
| i) அங்கத்தினர் தேர்ந்தெடுக்கும் புத்தகங்களின் மொத்த மதிப்பு | ... | ரூ. | 90.00 |
| ii) 12 பரிசு புத்தகங்களின் மதிப்பு | ... | ரூ. | 20.00 |
| iii) இலவசமாகப் பெறும் புத்தகப் பட்டியலின் மதிப்பு | ... | ரூ. | 1.00 |
| iv) இலவசமாகப்பெறும் "புத்தக நண்பன்" 18 பிரதிகளின் மதிப்பு | ... | ரூ. | 9.00 |
| v) பாக்கிங், தபால் செலவு இலவசம் | ... | ரூ. | 10.00 |
| | | ரூ. | 130.00 |
| அங்கத்தினர் செலுத்தும்தொகை | | ரூ. | 90.00 |
| அங்கத்தினர் அடையும் லாபம் | | ரூ. | 40.00 |

முதல் மாத சந்தா கட்டியவுடன் பரிசாக கொடுக்கப்படும் புத்தகங்கள் :



பனிப்படலத்துப் பாவை — ஆரம்ப நீதி மார்க் — தாயார் கொடுத்த தனம் — சிவம் தரும் செல்வம்

ரதோத்சவம் — சாகர்கர சித்பிகள் — பெரும் புகழும் — வாழ்வதற்கு வழி

**கீழ்க்கண்ட கூபனை உடனே பூர்த்தி செய்து அனுப்பி அங்கத்தினர் ஆகுங்கள் :**

## தென் மொழிப் புத்தக டிரஸ்ட்
### 25, ஸ்டர்லிங் ரோடு, சென்னை-34

ஐயா,

"வீட்டு நூலகம்" அமைக்கும் உங்கள் திட்டத்தில், அதன் நிபந்தனைகளுக்குட்பட்டு, அங்கத்தினராக சேர விரும்புகிறேன். இதற்கான முதல்மாத சந்தாவான ரூ. 5.00 மணியாடர் மூலம்* அனுப்பியுள்ளேன். விளம்பரத்தில் காட்டியுள்ள எட்டு பரிசு புத்தகங்களில் எனக்குப் பிடித்த மூன்று புத்தகங்களின் பெயர்களை கீழே கொடுத்துள்ளேன்.

1

2

3

பெயர் ..............................

ஊர் : .............................. கையொப்பம் ..............................

தேதி : .............................. முழு விலாசம் ..............................

..............................

*குறிப்பு : சந்தா தொகை எப்பொழுதும் மணியாடர் மூலம் தான் அனுப்பப்பட வேண்டும். சென்னையில் வசிக்கும் அங்கத்தினர் சந்தா தொகையை டிரஸ்டின் அலுவலகத்தில் நேரில் கட்டி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

1966, மார்ச் 10ந் தேதிக்குள் அங்கத்தினராக சேருவோருக்கு அதிகப்படியாக ஒரு பரிசு புத்தகம் அளிக்கப்படும்

யனில் ஈடுபடக் கூடாது என்று கூறப்படுவதால், அதற்காக ராணுவத் தலைவர்கள் மூடர்களாகிவிட முடியுமா? அனைவரும் சிந்திக்கத் தெரிந்தவர்கள்தான். நாட்டின் இன்றைய நிலவரத்தைக் கண்டு அருவருப்புக் கொண்டவர்கள்தான். பலர் இது நமக்குச் சம்பந்தம் இல்லாத விஷயம் என்று நினைக்கிறார்கள். சிலர் இதை அப்படியே விட்டுக் கொண்டு போகக் கூடாது, ஏதேனும் செய்தாக வேண்டும் என்று கருதுகிறார்கள். வெளிப்படையாக இதைக் காண்பித்துக் கொள்ளாது போனாலும் என்றேனும் ஒரு நாள் ஆட்சியைக் கைப்பற்றி நிர்வாகத்தைச் சீர்திருத்திவிடலாம் என்ற எண்ணம் அவர்களிடம் வளர்ந்து வருகிறது. இவர்கள் நம்மவர்கள்'' என்றாள் மிருணாளினி. ''ஆனால் கெட்டிக்காரரான தீனதயாளு இப்படி ஒரு சக்தி ராணுவத்திற்குள்ளேயே உருவாகி வருவதை எப்படியோ மோப்பம் பிடித்து விட்டார்!'' மிருணாளினி தொடர்ந்து பேசினாள்:

''இவர்களுடைய எண்ணிக்கை அதிகமில்லைதான். ஆனால் இந்நிலையை வளர விடக்கூடாது, முளையிலேயே கிள்ளி எறிந்து விடவேண்டும் என்று தீனதயாளு அபிப்பிராயப்படுகிறார். ராணுவம் என்பது பாதுகாப்பு மந்திரி சபையைச் சேர்ந்ததென்றாலும் இது உள்நாட்டு விவகாரமானதால் தீனதயாளுதான் நடவடிக்கை எடுக்க வேண்டும். மேலும் தீனதயாளுவுக்கு உள்ள அணிச்சல் மந்திரி சபையில் வேறு யாருக்கும் கிடையாது. பொறுப்பை அவர் தலையிலேயே கட்டி விட்டு ஒதுங்கியிருக்கவே பாதுகாப்பு மந்திரி சபை விரும்புகிறது. தீனதயாளு மிக சாமர்த்தியமாகச் செயல்பட்டு பாதுகாப்பு மந்திரி சபையின் துப்பறியும் இலாகாவை முடுக்கி விட்டிருக்கிறார். அவர்களிடமிருந்து கம்யூனிஸச் சார்புள்ள தளபதிகளின் பெயர்ப் பட்டியலைப் பெறப் பல மாதங்களாக முயன்று வருகிறார். ராணுவத்தின் துப்பறியும் இலாக்காவும் அரும்பாடுபட்டு யாருமறியாமல் இத்தகவல்களைச் சேகரித்துவிட்டது. தீனதயாளுவின் கைகளுக்கு சாலைதான் பட்டியல் போய்ச் சேரவிருக்கிறது. இனி அவரது உத்தரவுப்படி உள்நாட்டு மந்திரி சபையின் துப்பறியும் இலாக்கா போலீஸ் நடவடிக்கை எடுக்க வேண்டும், இந்தப் பட்டியலில் இடம் பெற்றிருப்பவர்கள் மீது. ஆனால் இத்தனை விவரங்களும் புரட்சி முன்னணியினருக்கு ஆங்காங்கே உள்ள உளவாளிகள் மூலம் இரகசியமாகத் தெரிய வந்துள்ளது.''

''ம்... அப்புறம்?'' என்றான் தங்கப்பன் அடக்க முடியாத ஆவலுடன். ஏதோ விறுவிறுப்பு மிகுந்த ஒரு கதையைக் கேட்பது போலிருந்தது அவனுக்கு.

''மேலே சொல்லுவதற்கு அதிகமாக ஒன்றுமில்லை. அந்தப் பட்டியலை நீங்கள் தீனதயாளு அறியாதவாறு கொண்டுவர வேண்டும். அவ்வளவுதான்!'' என்றாள் மிருணாளினி.

இன்று பதுங்கி, நாளை பாயக் காத்திருக்கும் புரட்சி முன்னணியின் நம்பிக்கைக்குப் பாத்திரமாக வேண்டுமானால் பெரிய காரியமாக எதையாவது தான் சாதிக்க வேண்டியிருக்கும் என்று தங்கப்பன் எதிர்பார்க்கத்தான் செய்தான். இருந்தாலும் அவன் வயிற்றை உள்ளுக்குள்ளேயிருந்து ஏதோ கவ்விப் பிடிப்பது போலத்தான் இருந்தது மிருணாளினி இப்படிக் கூறியதும்.

''நடக்கிற காரியமா இது?'' என்றான் அவன் சந்தேகக் குரலில்.

''நீங்கள் முழு மனத்தோடு முயன்று பார்ப்பதாக உறுதி அளியுங்கள். அது நடந்தேறுவதற்கான வழி முறைகளை நான் வகுத்துத் தருகிறேன்'' என்றாள் அவள். ''தீனதயாளு, உஷா இருவரையுமே உங்களுக்கு நன்றாகத் தெரியும். நீண்ட நாள் பழக்கம். சுலபமாக நீங்கள் முடிக்கக் கூடிய காரியம்தான் இது. என்ன, எனக்கு உதவுவீர்களா மாட்டீர்களா?'' இப்படிக் கேட்டு விட்டுத் தங்கப்பனின் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள் மிருணாளினி.

## அத்தியாயம் 23

# "எதிர்காலம், அது பொற்காலம்!"

**ப**ளிச்சென்று தங்கப்பனுக்கு ஒரு விஷயம் அர்த்தமாயிற்று. தேர்தலின்போதே பார்லிமெண்டுத் தொகுதிக்கு நிற்கும் தீனதயாளு மத்திய மந்திரி சபையில் உள்துறை அமைச்சராகத்தான் பதவி ஏற்பார் என்பதாகப் பரவலாக ஹேஷ்யங்கள் உலவின. அச்சமயத்திலேயே மிருணாளினி தன்னிடம் தொடர்பு கொண்டு வலுவில் அத்தியந்த சிநேகம் செய்துகொண்டதும் முதலாளியான தன்னைக் கம்யூனிஸ சித்தாந்தத்தில் ஈடுபாடு கொள்ளுமாறு செய்ய அரும்பாடு பட்டதும் அதற்கும் மேலாக 'நீங்கள் வெளி உலகைப் பொறுத்த வரை ஒரு முதலாளியாகவே உலவி வர வேண்டும் என்று கேட்டுக் கொண்டதும் எல்லாமே ஓர் உள் நோக்குடன் செய்யப்பட்டவைதான்! உஷாவுடன் நெருங்கிப் பழகி வரும் தங்கப்பன் ஏதேனும் ஒரு விதத்தில் நமக்குப் பயன்படுவான் என்ற எண்ணத்தில் நடந்தவைதான்! இதைப் புரிந்துகொண்டதும் மிருணாளினியின் அபாரமான திறமையில் அவன் முன்னெப்போதையும் விட அதிக மதிப்புக் கொண்டு அவளைக் குறித்துப் பெருமிதப் பூரிப்புடன் புன்னகைத்தான். அதனை மங்கலான நிலவொளியிலும் சற்றுத் தொலைவில் இருந்த வீதி விளக்கின் வெளிச்சத்திலும் கண்ட மிருணாளினி, ''சிரிக்கக் கூடிய விஷயமா இது?'' என்று கேட்டாள் கொஞ்சம் மனத்தாங்கலுடன்.

''இல்லே, மிருணளினி'' என்முன் தங்கப்பன். ''சிரித்ததற்கான காரணத்தைச் சொல்லி உங்களை முகஸ்துதி செய்யப்போவ தில்லை நான். கண்டிப்பாக உங்களுக்கு உதவவும் காத்திருக்கிறேன். ஆனல் உஷாவிடம் நான் கொண்டிருக்கும் நட்பு உங்களுக்கு அவசியமாகத்தேவைப்படுகிற இச்சமயத்தில் அந்த நட்பை இன்று மாலைதான் முறித்துக் கொண்டு வந்து நிற்கிறேன் நான். இதை விடத் துரதிர்ஷ்டம் வேறு என்ன இருக்க முடியும்? உஷாவிடம் சில விஷயங்களை மனம் விட்டுப் பேசியதால் அவளுடைய வெறுப்பையும் ஆத்திரத்தையும் கேலியையும் சம்பாதித்துக் கொண்டிருக்கிறேன். நானும் கோபத்துடன் சாப்பிடாமலேயே வந்துவிட்டேன். மறுபடியும் அவள் என்னைத் தன் வீட்டுக்குள் அனுமதிப்பாளா என்பதே சந்தேகம்!''

''அவ்வளவுதானே? கவலைப்படாதீர்கள்! உஷா உங்களை முன்னைவிட அதிக உற்சாகத்துடன் வரவேற்பாள். நேற்றுக் கோபித்துக் கொண்டு போனவரை இன்று மீண்டும் கவர்ந்து ஈர்த்துத் திருப்பி வரவழைத்து விட்ட தன் அழகை நினைத்து முன்னைப் போனதையும் விட அதிகமாக அகந்தை கொள்வாள். நீங்கள் வேணுமானல் பாருங்கள். சந்தோஷத்தில் தலைகால் புரியாது அவளுக்கு!''

பிரமித்துப் போனன் தங்கப்பன். ''மிருணளினி! நான்தான் உஷாவைச் சரியாகப் புரிந்து கொண்டிருப்பதாக நினைத்தேன். நீங்கள் என்னை விடக் கச்சிதமாக அவளை அளந்து வைத்திருக்கிறீர்கள்! போகட்டும்; உங்கள் விருப்பப்படியே நீங்கள் குறிப்பிடுகிற அந்தப் பெயர்ப் பட்டியலைக் கொண்டு வந்துவிடுகிறேன் என்றே வைத்துக் கொள்ளுங்கள். அது உங்களுக்கு எந்த விதத்தில் உதவப் போகிறது?''

''அதையெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம்; நீங்கள் முதலில் இதைச் செய்து முடியுங்கள்'' என்முள் மிருணளினி.

தங்கப்பன் மெல்லத் தலையசைத்தான். ''என் செய்கைகளின் பின் விளைவுகள் என்னவாக இருக்கும் என்று விவரமாக எனக்குத் தெரிந்தால் ஒழிய நான் இதில் ஈடுபடுவதற்கில்லை! 'ஐ ஆம் வெரி ஸாரி!' ''

''அடடா! என்னைத் தப்பர்த்தம் செய்து கொள்ளாதீர்கள். உங்களிடம் எனக்கு நம்பிக்கை இல்லாமலில்லை. நேரமாகிறதே என்பதால் பிறகு பார்த்துக் கொள்ளலாமென்றேன். உங்களுக்குத் தூக்கம் வரவில்லை என்முல் பேசிக் கொண்டே போக நான் தயார் தான்.''

''நீங்கள் சொன்னதையெல்லாம் கேட்டதற்கப்புறம் இன்றிரவு தூக்கம் பிடிக்குமா, என்ன?''

''சரி; வாருங்கள். இங்கேயே ரொம்ப நேரம் உட்கார்ந்திருக்க வேண்டாம். என்

---



# சிந்தியுங்கள், சிரியுங்கள்!

மனிதர்களாகப் பிறந்த யாருக்குமே நகைச்சுவை உணர்வு பிறவிக் குணமாக அமைந்துள்ளது. நேயர்களும் இதில் பங்கு கொள்ள வேண்டும் என்பதற்காகப் பக்கத்திலேயே ஒரு கேலிச் சித்திரத்தை வெளியிட்டிருக்கிறோம். இந்தச் சித்திரத்துக்கு நகைச்சுவையான வாசகம் என்ன அமையலாம் என்று சற்றுச் சிந்தியுங்கள். ஆனல் ஒன்று. இவ்விதழ் (6-2-66) கல்கியிலிருந்தே இதற்கான நகைச்சுவை வாசகம் எடுக்கப்பட வேண்டும். நீங்கள் இந்த இதழில் படிக்கும் கதைகள் கட்டுரைகள் அரசியல் விஷயங்கள் போன்ற எதிலிருந்து வேண்டுமானலும் இதற்கான வாசகங்களைப் பொறுக்கி எடுக்கலாம். ஒரே பக்கத்திலிருந்து எடுக்கப்பட்ட தொடர்ச்சியான வரிகளாக இருக்க வேண்டும்! இன்ன கதையில் அல்லது கட்டுரையில் இன்ன பக்கத்திலிருந்து எடுத்திருக்கிறீர்கள் என்பதையும் மறக்காமல் குறிப்பிட வேண்டும். சிறந்த துணுக்குக்குச் சிறப்பான பரிசு உண்டு. முடிவு தேதி 13-2-66.



உறையின் மேல் ''சிந்தியுங்கள், சிரியுங்கள்!'' என்று குறிப்பிடவும். இது விஷயமாகக் கடிதப் போக்குவரத்து வைத்துக் கொள்வதற்கில்லை. பிரசுரமாகாத துணுக்கு களைத் திருப்பி அனுப்புவதற்கில்லை.

காரில் உங்கள் ஓட்டலை நோக்கிச் சென்ற வாறே பேசலாம்'' என்றாள் மிருணாளினி.

அவர்கள் சுமார் ஒரு மணி நேரத்துக்கு முன்னதாகக் காலாற நடக்கத் தீர்மானித்த போது காரை நிறுத்திவிட்டு இறங்கிய இடத்துக்கு இப்போது விரைந்து சென்றார்கள்.

மிருணாளினி அவசரமின்றிக் காரை ஓட்டிய படியே திட்டங்களை அவனுக்கு விவரித்து வந்தாள்.

''நாளைக் காலை 'பரம ரகசியம்' என்று மேலே எழுதப்பட்ட ஒரு ஃபைல்கட்டு தீனதயாளுவின் பார்வைக்கு வரும். அதை அவர் அநேகமாக அலுவலகத்தில் வைத்துப் பார்க்க மாட்டார். அதிகாலையில் நாலு மணிக்கு எழுந்திருந்து முக்கியமான அலுவல்களையெல்லாம் தம் வீட்டிலேயே சந்தடியற்ற அமைதியான சூழ்நிலையில் கவனிப்பது தான் தீனதயாளுவுக்கு வழக்கம். காரியாலயத்தில் வருவோரும் போவோருமாக இருப்பார்கள். அடிக்கடி டெலிபோன் மணி அடித்துத் தொந்தரவு கொடுக்கும். வீட்டில் இதுபோன்ற சில்லறைக் குறுக்கீடுகள் ஏதுமின்றி ஆழ்ந்து சிந்தித்து உத்தரவுகளைத் தம் கைப்பட எழுதுவார் அவர். அதிலும் குறிப்பாக இந்த ஃபைல் கட்டு பற்றி அவர் அவசரப்படுவதை விட தீர்க்கமாக யோசித்து முடிவெடுப்பதுதான் அவசியமெனக் கருதுவார். ராணுவத் தலைவர்கள் பலரைச் சுற்றி வளைத்துப் பிடித்துக் கம்பி எண்ண வைக்க வேண்டுமென்றால் இலேசான காரியமா? விரிக்கும் வலையில் பொத்தல்கள் ஏதும் இல்லாமலிருக்கிறதா என்பதைச் சர்வ ஜாக்கிரதையாக ஆராய வேண்டுமல்லவா? இதையெல்லாம் உத்தேசிக்கும் போது அந்த ஃபைல் கட்டு நாளை மாலை அவருடன் அவர் வீட்டுக்கு வந்து சேரும் என்று உறுதியாக எதிர்பார்க்க இடமிருக்கிறது...''

''அப்புறம்?'' என்று அடக்கமாட்டாத ஆர்வத்துடன் கேட்டான் தங்கப்பன். அந்தக் கடுங் குளிரிலும் அவனுக்கு உடம்பு குப்பென்று வியர்த்துக் கொட்டியிருந்தது. நெஞ்சத் துடிப்பு துரித கதிக்கு மாறியிருந்தது.

''அவர் வீடு திரும்பும் சமயத்தில் நீங்கள் உஷாவுடன் பேசிக் கொண்டிருப்பீர்கள்'' என்று தொடர்ந்து கூறினாள் மிருணாளினி. ''அந்த ஃபைல் கட்டை அவர் உஷாவிடம் தந்து 'பத்திரமாக வை' என்பார். அல்லது தாமே கொண்டுபோய் இரும்புப் பீரோவில் வைக்கலாம். எப்படியானாலும் அது எங்கே பத்திரப்படுத்தப்படுகிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும். பிறகு நல்லதொரு சந்தர்ப்பத்தில் அதை யாருமறியாமல் எடுத்து, உங்களுடைய தொழிலகம் சம்பந்தமான கடிதங்கள், தஸ்தாவேஜுகளையெல்லாம் வைத்துக் கொள்ளுகிறீர்களே, ஒரு பெரிய தோல் பை, அதற்குள் இதையும் திணித்துக் கொள்ளுங்கள். ஒருவருக்கும் சந்தேகம் எழாதபடி சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்து விட்டுக் கிளம்பி வந்துவிடுங்கள்!''

''மறுநாள் காலையில் அவர் அலமாரியைத் திறந்து பார்க்காமலா இருந்துவிடுவார்?''

''அதற்குள் பறக்கிறீர்களே? திட்டத்தை முழுமையாகக் கேளுங்கள்! நாளை மறுதினம் ஞாயிற்றுக் கிழமை. அன்று காலை நாலு மணிக்கு தீனதயாளுவின் அலாரம் அடிப்பதற்கு ஐந்து நிமிஷங்களுக்கு முன்னால் அவர் அறையில் டெலிபோன் மணி ஒலிக்கும். இன்று சாயந்திரம் ராஷ்டிரபதி பவன் பார்ட்டியில் அவருக்கு ரொம்பவும் 'வேணுக்கப்பட்ட' ஒருத்தியைப் பார்த்தீர்களல்லவா? அவள் நம்மைச் சேர்ந்தவள். டெலிபோனில் அவள்தான் பேசுவாள். தனக்குத் திடீரென்று நெஞ்சை வலிக்கிறதென்றும், அவரைக் காணத் துடிப்பதாகவும் கூறுவாள். தீனதயாளுவும் அவசரம் அவசரமாகத் தாமே காரை ஓட்டிக் கொண்டு அவளைப் பார்க்கப் போவார். அங்கே அவரை அவள் சிரித்து மகிழ்ந்து வரவேற்பாள். அவரை ஏமாற்றிவிட்டதாகக் குழந்தைத்தனமாகக் கூறிக் குதூகலிப்பாள். அவர் கழுத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டு விடமாட்டேன் என்பாள். இன்று ஞாயிற்றுக் கிழமை, நாள் முழுவதும் இங்கேயேதான் இருக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்வாள். அவளிடமிருந்து தப்ப அவரால் முடியவே முடியாது! 'ஞாயிற்றுக் கிழமைதானே; அலுவல்களை நாளை கவனிக்கலாம். என்ன அவசரம்?' என்று தம்மைத் தாமே சமாதானப்படுத்திக் கொள்வார்.''

தங்கப்பனுக்குத் திகைப்புக்கு மேல் திகைப்பாக இருந்தது. ''ஆனால் திங்கட்கிழமை?''

''திங்கட்கிழமை காலை அவர் தம் அலுவல்களைக் கவனிக்க உட்காரும்போது ஃபைல் கட்டு அவர்வைத்த இடத்திலேயே இருக்கும்'' என்றாள் மிருணாளினி. ''அதை ஞாயிற்றுக் கிழமை மாலைக்குள்ளாகவே நீங்கள் திரும்பக் கொண்டு போய் வைத்துவிட்டு வந்துவிடுவீர்கள். ஆனால் பட்டியலில் உள்ள பெயர்கள் எல்லாம் மட்டும் மாறுபட்டிருக்கும்!''

தங்கப்பன் இப்போது வாயடைத்துப் போய்விட்டான். ஒரு நிமிஷத்துக்குப் பிறகு அவன் நாவை அசைத்தபோதும் வார்த்தைகள் தடுமாறியபடிதான் வெளிவந்தன. அவன், நன்கு பழக்கமான 'மிருணாளினி' என்ற தன் பெயரைக் கூடச் சரியாக உச்சரிக்காமல் உளறிக் கொட்டுவதைக் கேட்டுச் சிரித்தாள் அவள். ''நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் என்று எனக்குத் தெரியும். இதில் ஆபத்து இல்லாமல் இல்லை. அதை நானும் உணர்ந்திருக்கிறேன். அகப்பட்டுக் கொள்ள நேரிட்டால் தேசத் துரோகக் குற்றத்துக்காக ஆயுள் தண்டனை பெறுவது நிச்சயம். ஆனால் இதுபோன்ற ஆபத்துக்களுக்குத் துணிந்து, நடுக்கத்தை உதறித் தள்ளி, இந்தக் காரியத்தில் நீங்கள் இறங்கத் தயாராக இருக்கிறீர்களா, இல்லையா என்பதுதான் கேள்வி.''

''நான் ஒன்றுக்கும் பயப்படவில்லை, மிருணாளினி'' என்றான் தங்கப்பன் சூடாக. ''கண்டிப்பாக இதை முடித்துத் தருகிறேன் நான். இதை நான் சாதித்த பிறகு என்ன நிகழப்போகிறது? அதைச் சொல்லவில்லையே நீங்கள்?''

''பட்டியலைத் தயாரித்தவர்கள் வேறு; அதன்மீது உத்தரவு போடுகிறவர்கள் வேறு; நடவடிக்கை எடுக்கப் போகிறவர்கள் வேறு. இதுதான் நமக்கு மிகச் சாதகமான விஷயம். பட்டியலில் உள்ள சில பெயர்களைப் பார்த்து விட்டுத் தினதயாளு ஆச்சரியப்படுவார் என்பது நிச்சயம். 'இன்றைய ஆட்சியை எதிர்க்கும் நோக்கத்தில் கம்யூனிஸ்டுகளாகக் கரம் கோர்த்து நிற்பவர்கள் இவர்களா?' என்று எண்ணி வியப்பார். ஆனால் பட்டிய லில் மாறுபட்டம் நடந்திருப்பதை அவர் கவனிக்கவே போவதில்லை. 'இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்பது போல் இருந்தவர்க ளாயிற்றே இவர்கள்' என்று ஆத்திரமே அடைவார். உத்தரவு கையெழுத்தாகும். ராணுவத் தளபதிகள் பலர் கைதாவார்கள். இந்த அரசாங்கத்தினிடம் விசுவாசத்துடன் இருப்பவர்களில் பெரும்பாலோர் இப்படிச் சிறையில் அடைபடுவார்கள். இவ்விதம் கைதாவோரில் நம்மவரும்சிலர் இருப்பார்கள். அதிகமாகச் சந்தேகம் எழாதிருக்க நாமே இவர்கள் பெயர்களைப் பட்டியலில் சேர்த் திருப்போம். ஆனால் நம்மவரில் அதிகம்பேர் சுதந்திரமாக வெளியேதானிருப்பார்கள். பாதுகாப்பு மந்திரி சபையின் துப்பறியும் இலாக்கா ஏதோ தவறு நேர்ந்துவிட்டதை உணர்ந்து பரபரப்படையும். பிரதமரையும், பிற மந்திரிகளையும் எச்சரிப்பார்கள். அடுத் தாற்போல் ஆட்சித் தலைவர்களிடையே ஒரே குழப்பம் நிலவும். எல்லாருமே ஒருவரை ஒருவர் சந்தேகத்துடன் நோக்குவார்கள். இந்தத் திகைப்பிலிருந்தும் குழப்பத்தி லிருந்தும் யாரும் மீள்வதற்கு முன்பாகவே வெளியே சுதந்திரமாக இயங்கும் நம் தள பதிகள் பாய்வார்கள். 'இப்படி ராணுவத் தின்மீது அபாண்டப் பழி சுமத்தித் தளபதி களைச் சிறையிலடைப்பது அராஜகம்' என்று முழக்குவார்கள். எதிர் நடவடிக்கை எடுப் பார்கள். இன்றைய ஆட்சித் தலைவர்களைச் சிறைப்படுத்துவார்கள். எல்லா உண்மைகளை யும் அறியாததால் ராணுவம் முழுவதுமே உணர்ச்சிவசப்பட்டு நம் தளபதிகளுக்குப் பக்கபலமாக நிற்கும்!''

''மிருணாளினி! அதிசயப்படுவதற்கும் ஓர் எல்லை உண்டு. இப்போது நான் அதிசயப்படும் சக்தியையே இழந்து விட்டிருக்கிறேன்!''

''ஆட்சி நம் கைக்கு வந்த பிறகு நம்மை ஸ்திரப்படுத்திக்கொள்ள அதிகநேரமாகாது!''

''மிருணாளினி! உண்மையாகவே இவ் வாறெல்லாம் நடக்க முடியும் என்று நீங்கள் உறுதியாக நம்புகிறீர்களா?''

''ஏன் நடக்கக் கூடாது? நைஜீரியா, காங்கோ, எகிப்து, பாகிஸ்தான்... விரல் விட்டு எண்ணிக் கொள்ளுங்கள்... மத்திய ஆப்பிரிக்கக் குடியரசு, ஸான்ஸிபார், ஸுடான், கியூபா, டாமினிகன் குடியரசு, இந்தோனேஷியா, செஞ்சீனு, டோகோ, அல் ஜீரியா, டாஹோமி ஆகிய நாடுகளிலெல் லாம் ராணுவப் புரட்சி நடந்தது ஏன்? ஜனநாயகம் தோல்வியுற்று யதேச்சாதிகார ஆட்சியாக மாறி லஞ்சமும் ஊழலும் தலை விரித்து ஆடியதுதானே முக்கிய காரணம்? பண வீக்கம், வரிக் கொடுமை, வறுமை ஆகியவற்றை இரண்டாவதாகச் சொல்ல லாம். இந்த நிலை இன்று நம் தேசத்தில் நிலவவில்லை என்று நீங்கள் மனப்பூர்வமாக சொல்லிவிடுங்கள், பார்க்கலாம்! இன்னும் பல நாடுகளை உதாரணமாகக் கூறலாம். நினைவுக்கு வந்தவற்றை மட்டும் சொன் னேன். புரட்சி உருவாகித் தோல்வியுற்ற பல தேசங்களும் உண்டு. ஆனால் இங்கே நாம் நிச்சயமாக வெற்றி பெற்றே தீருவோம். நம்பிக்கையுடன் உறுதியாகச் செயலாற்ற வேண்டும் நாம்!''

''மக்களை மறந்துவிட்டாயே, மிருணாளினி! அவர்களுடைய ஆதரவின்றி எதைச் சாதிக்க முடியும் நாம்?''

''அவர்களுடைய ஆதரவு கண்டிப்பாக நமக்குக் கிடைக்கும். தேர்தல் என்று வரும் போதுதான் இன்று ஜனங்கள் மொட்டைத் தலைக்கும் முழங்காலுக்கும் முடிச்சுப் போட் டுக்கொண்டு பிறகு ஓட்டுப் போடுகிறார்கள். தங்கள் தலையில் தாங்களே மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டு ஏமாறுகிறார்கள். பணம், பயம், பசப்பு வார்த்தை போன்ற ஏதேதோ சக்திகள் அவர்களிடையே புகுந்து விளையாடு கின்றன. ஆட்சி மாறினால் அவர்கள் முதலில் சற்றுப் பீதியடையலாம். ஆனால் சீக்கிரமே, இங்கு நிலையான, நேர்மையான ஆட்சி நடை பெறும் என்று உணர்ந்து மகிழ்வார்கள். உற்சாகத்துடன் வரவேற்பார்கள். அதற் கேற்ற விதத்தில் நம்முடைய பிரசாரமும்

### வீடு எரிந்தும் வயிறு எரியாதவர்!

பிரிட்டிஷாரின் பண்பையும், அவர்களது கடமையுணர்ச்சியையும் குறித்தும் பல கதைகள் சொல்லப்படுவதுண்டு.

கன்ஸர்வேடிவ் கட்சியைச் சேர்ந்த மான்ஃரோஃப்ட் பிரபு லண்டன் கூட்டம் ஒன்றில் குறித்த நேரத்துக்கு வந்தவர் பேச்சைத் தொடங்கினார்: ''நண்பர்களே, நான் இன்று நீண்ட நேரம் உரை நிகழ்த்த முடியாதது குறித்து மிகவும் வருந்துகிறேன். காரணம், என் வீடு தீப்பற்றி எரிந்து கொண்டிருக்கிறது!....''

— என். வி.

அமைய வேண்டும். ஆட்சி கைமாறுகிற அதே நேரத்தில் ரேடியோ மூலமும் நாம் ராணுவ ஆட்சியைப் பிரகடனப்படுத்துவோம். சட்டத்தையும் நீதியையும் புறக்கணித்து ராணுவத் தளபதிகளைக் கைதாக்கியதைச் சுட்டிக் காட்டுவோம். சட்டத்தையும் நீதியையும் நிலைநாட்டவே பாடுபடுகிறோம் என்பதை வலியுறுத்துவோம். லஞ்ச ஊழலுக்கும் யதேச்சாதிகாரத்துக்கும் முடிவு கட்டி, ஒழுக்கத்தையும், உழைப்பையும் அரியாசனத்தில் ஏற்றி வைப்பதாக வாக்களிப்போம். உண்மையான மக்களாட்சி நடைபெற விரைவிலேயே நியாயமான முறையில் பொதுத் தேர்தல் நடைபெறுமென்று அறிவிப்போம். உழைப்பின்றிப் பணம்பண்ண உரிமை பெறுவோர் இனி இங்கு இருக்க மாட்டார்கள். அரசியல் ஞானமின்றி ஆண்டு மக்களைத் துயரத்தில் ஆழ்த்துவோருக்கு இனி இங்கு இடமில்லை. வறுமையும் பசியும் பிணியும் பதறித் துடித்துக் கொண்டு ஓட்டமெடுக்கும்! தங்கப்பன்! இந்த நாட்டின் வரலாற்றில் மகோன்னதமான ஒரு புதிய என்று தங்களைச் சொல்லிக் கொள்ளுகிற சிலரது உயிர்களைக்கூடப் பறிக்கும்படியிருக்கலாம். எப்படியும் ரத்தம்சிந்துவதைத் தவிர்க்க முடியாது. மக்களிடமும் கொஞ்சம் கடுமையாகவே நடந்து கொள்ளும் அவசியம் ஏற்படலாம். ஆனால் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு இந்த ஆரம்ப நடவடிக்கைகளை மேற்கொண்டு விட்டால் அப்புறம் உதயமாவது ஒரு பொற்காலமாக அல்லவா இருக்கும்? நாமும் பிடியைத் தளர்த்திவிடலாம் அப்போது!''

இதற்குள் தங்கப்பன் தங்கியிருந்த ஹோட்டலை அவர்கள் நெருங்கிவிட்டார்கள். ''உங்களை இறக்கிவிட வேண்டிய இடம் வந்து விட்டது. மீண்டும் நாளை சந்திக்கிறேன்'' என்றான் அவன்.

''இன்னும் ஒரே ஒரு சந்தேகம்'' என்றான் தங்கப்பன். ''நீங்கள் சற்று முன்னால் உலகின் பல்வேறு நாடுகளில் நடந்தவற்றை உதாரணத்துக்கு எடுத்துக் காட்டினீர்கள். ஆனால் அவற்றிலும் புரட்சி வேறு, சதி செய்து ஆட்சியைக் கைப்பற்றுவது வேறு



## சிறைக்குப் போனாலும்....

**''வக்கீல் சார்! நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்!.. இந்தக் கேஸில் நான் ஜெயிலுக்குப் போகாமல் இருக்க நீங்கள்தான் உதவி செய்ய வேண்டும்....!'' என்று தம் வக்கீலைக் கேட்டுக் கொண்டார் ஒரு பணக்காரர்.**

**''நன்றாயிருக்கிறது!.... இவ்வளவு பணம் இருக்கும் போது உங்களை ஜெயிலுக்குப் போக விட்டு விடுவேனா நான்?.... கவலைப்படாதீர்கள்!....'' என்று தைரியமளித்தார் வக்கீல்.**

**சொன்னபடியே செய்தார் அந்த வக்கீல். அந்தப் பணக்காரர் ஜெயிலுக்குப் போகும்போது ஓட்டாண்டியாகத்தான் போனார்!**

அத்தியாயம் ஆரம்பமாகப் போகிறது! அதற்கு வழி வகுத்த உங்களை அனைவரும் போற்றிக் கொண்டாடப் போகிறார்கள். சரித்திர புருஷனாக நீங்கள் மாறவிருக்கிறீர்கள்!''

''போதும், மிருணாளினி! உங்களுடைய வாசாலகத்தினால் மட்டும் என்னை வென்றுவிட முடியாது என்பது உங்களுக்குத் தெரியாதா? யதார்த்த நிலையை உணர்ந்தவன் நான்.''

''நானும் இதன் மறுபக்கத்தை மூடி மறைத்துவிட விரும்பவில்லை'' என்றான் அவன். ''ஆரம்பத்தில் நாம் மிகவும் கண்டிப்புடன்தான் நடந்து கொள்ள வேண்டி இருக்கும். இன்றைய ஆட்சியாளரால் சிறைப்படுத்தப்பட்ட ராணுவத் தளபதிகளை விடுவிப்பதாகச் சொல்லி நம்மவர்கள் சிலர் உள்ளே இருப்பார்களே, அவர்களை மட்டுமே சிறை மீட்போம். மற்றவர்கள் சில காலம் நம் நம்பிக்கைக்குப் பாத்திரர்களாகும்வரை உள்ளேயே இருக்க வேண்டியதுதான். வேறு சில விதங்களிலும் நாம் கண்டிப்புக் காட்ட வேண்டி நேரும். இன்றைய தலைவர்கள் அல்லவா? சிறிய நாடாயிருந்தால் சதிச்செயல் வெற்றி பெறலாம். பாரதம் போன்ற ஒரு பெரிய துணைக் கண்டத்தை, சதிச்செயலால் ஆட்சியைக் கைப்பற்றிய ஒரு கும்பல் கட்டிக் காக்க முடியுமா? பிற ராஜ்யங்கள் தம் தலைமையை ஏற்க மறுத்தால்?''

''பெரிய சந்தேகப் பேர்வழி நீங்கள். நாடு முழுதும் ராணுவம் பரவலாக நிற்கும்போது அவ்விதமெல்லாம் நிகழாது என்றுதான் நான் கருதுகிறேன். அப்படியே சில பகுதிகள் இன்ற நமக்கு இணங்கி வராமல் பிரிந்து போனால்தான் என்ன? அவைகள் தங்களுக்குள்ளேயும் ஒன்றுபட்டு நிற்கப் போவதில்லை. நாளடைவில் சிறிது சிறிதாக நாம் அவற்றைக் கவர்ந்து கொள்ளலாம்!''

கார் நிற்கவே, தங்கப்பன் கீழே இறங்கிக் கொண்டான். கதவைச் சாத்தினான். கார் நகரத் தொடங்குவதற்கு முன்னால், ''நீங்கள் மனந்தளராதீர்கள். கலக்கம் குறைவது போலிருந்தால் என்னை நினைத்துக் கொள்ளுங்கள், புதுத் தெம்பு பிறக்கும்!'' என்றாள் மிருணாளினி.

**(தொடரும்)**




மூங்கிலின் மீது பருத்தி விளைவிக்க எங்களால் முடியுமென்று கூறிக்கொள்ளவில்லை நாங்கள். என்றாலும் அதற்கு அடுத்தபடியான ஒன்றை நிறைவேற்றுகிறோம். மூங்கிலையே பருத்தி போன்றதொரு பஞ்சாக மாற்றுகிறோம்.

கிராஸிம் ஸ்டேபிள் ஃபைபர் என்று நாங்கள் வழங்குகிறோமே அது இயற்கைப் பஞ்சு போலவே இருக்கும். பருத்தியோடு அதனைக் கலந்து நெசவு செய்வதனால் கிடைக்கும் துணி, மாறாத புதுமெருகோடு என்றும் பொலிவுடன் சோபிக்கும். கிராஸிம் செயற்கைப் பஞ்சுடன் பருத்தி இணைந்த துணிகள் உயரிய பண்புகள் கொண்டவை, மேனிக்கு இணக்கமானவை, அணியக் கச்சிதமானவை, நீடித்துழைப்பதோடு, சலவைக்கும் எளிதானவை. அதே சமயம் விலையும் மிகக் குறைவாக இருப்பது குறிப்பிடத்தக்கது. எனவே, துணி வாங்கும்போது குறிப்பிட்டுக் கேளுங்கள்:

## கிராஸிம் ஸ்டேபிள் ஃபைபர் இணைந்தது.

---

**க்வாலியர் ரேயான் ஸில்க் மானுபாக். (வீவிங்) கம்., லிட்., நாக்தா (ம.பி)**

தொழில்நுட்ப விவரங்களுக்கு தயவுசெய்து எழுதுக:
டெக்ஸ்டைல் ரிஸர்ச் டிபார்ட்மெண்ட், குவாலியர் ரேயான், ...
59, சர்ச்கேட் ரிக்ளமேஷன், பம்பாய்-1.

அடுத்த அறையில் பத்மா தன் தோழிகளுடன் சேர்ந்து சிரிக்கும் சத்தம் கேட்டது. அவ்வளவு சிரிப்புக்களுக்கும் நடுவே, அவள் சிரிப்பு மட்டும் வெள்ளி மணிகள் கட்டிய சித்திரக் கதவு அசைவது போல், தனியாக அவன் காதில் விழுந்தது. தொடர்ந்து அவள் ஆர்வம் கனிந்த குரல் கேட்டது.

பத்மா சொல்வாள்: ''அத்தான்! உங்களுக்கு 'ஜோவியலாக' இருக்கவே தெரியவில்லை !''

பதிலுக்கு அவன் சிரித்துக் கொண்டாலும், மனத்துக்குள் ஓர் ஏக்கம் புலரும்; விளையாட்டில் சேர்ந்து கொள்ள முடியாத குழந்தையைப் போல. சில சமயம் அவன் வேதனைப் படப்பட அவளும் இரக்கமற்றுச் சீண்டிக் கொண்டேயிருப்பாள். அவன் சங்கோசி என்று கண்டு கொண்டும், வலுவில் பேச்சுக்கு இழுத்துக் கழுத்தை அறுப்பதில் அவளுக்கு ஓர் அலாதி ஆனந்தம்.

பேச்சு கொம்மாளமாய் அவர்களுடைய பௌதிக லெக்சரர் குமாரைப் பற்றித் திரும்பியது. அந்தப் பெயர் வந்ததுமே பத்மாவுக்கு, எப்படி ஒரு கங்கு கரையற்ற உற்சாகம் ததும்பிற்று?



குரலில் இயற்கையாகப் பொங்கும் ஊற்றுப் போல ஒரு மகிழ்ச்சி? குமாருடைய அறிவு, சாமர்த்தியம், பேச்சு, பாவனைகள், ஒன்றையுமே அவள் தன் பாராட்டுக்குத் தப்ப விடுவதில்லை. மற்றவர்கள் சில சமயம் அதற்காக அவளைப் பரிகாசம் செய்தாலும்கூட.



அவளுடைய கல்லூரித் தோழிகள் வந்ததும், அவளுடன் பேசிக் கொண்டிருந்தவன் எழுந்து உள்ளே வந்து விட்டான். அங்கே இருந்து அவன் என்ன செய்ய? அவர்கள் பேசும் விஷயங்களில் அவனுக்குப் பழக்கம் இல்லை. அப்படிச் சகஜமாக உட்கார்ந்து 'கல கல'வென்று பேச்சையும் சிரிப்பையும் உதிர்க்கும் சரளமும் அவனுக்கு இல்லையோ ?

அவனுள் அப்போது ஒரு பொறாமை துளிர்த்து நின்றது. ஏனென்று தெரியாமல் இல்லை. ஆனால் அதற்கு அவனிடம் சமாதானமும் இல்லை. அந்தப் பாராட்டும் புகழ்ச்சியும் காதில் விழ விழ இருப்புக் கொள்ளாத ஒரு வேதனை. அவன் அப்படி வெளிப்படை




யாய்ப் பாராட்டுவதை மற்றத் தோழிகள் பரிகாசமாய்க் குத்திக் காட்டுவதை உணரும் போது ஒரு பக்கம் ஆத்திரம்கூடப் பொங்கும். ஆனால் அவனுக்காகப் பரிந்து பேச விரும்பும் ஆர்வத்தை விலக்க மனத்தில் வலிமை இல்லை.

கோபு ஊரிலிருந்து வந்து ஒரு மாதம் ஆயிற்று. வருஷத்துக்கு ஒரு முறை இப்படி வருவது வழக்கம்தான். அதுவும் பத்மாவின் விடுமுறைக் காலத்தை அனுசரித்துக் கொண்டு வருவான். அவளுடன் சேர்ந்து இருந்து பேசக் கொஞ்சம் நேரம் கிடைக்கலாம் என்கிற எதிர்பார்ப்புடன்.

ஒவ்வொரு முறை வரும் போதும், ஒவ்வோர் ஆச்சரியம் காத்திருக்கும் அவனுக்கு. அவளுடைய வளர்ச்சியில், தோற்றத்தில், பழக்கத்தில், பேச்சில், ஒவ்வொன்றிலும் ஒரு புதிய மாறுதல் தெரியும். வளரும் பூஞ்செடியைக் கண்டு வியக்கும் பெண் குழந்தையைப் போல, அவன் மனத்திலும் ஓர் ஆர்வம் விடியும். வெய்யிலின் ஒளியில் பவழமாய் மின்னும் மலரையே ஆவலோடு கவனிப்பது போல், அவளுடைய புதுப் பார்வையிலும், செயலிலும் கவிதை நயம் கண்டு சொல்லத் தெரியாமல் நிற்பான். அவளிடமிருந்து கனிவாய் ஒரு வார்த்தை வந்தாலும் அதில் மிளிரும் அழகு அவனைக் கனவாக்கி நிற்கும்.

கோபுவின் தந்தை ஊரில் வியாபாரத் துறையில் வேரூன்றி விட்டவர். அவன் பி. ஏ. வரை படித்தும், அவருக்கு உதவியாகத்தான் போக வேண்டியிருந்ததைத் தவிர அந்த மரத்தின் தனி விழுதாய் வெளியே ஊன்றிக் கொள்ள முடியவில்லை. அதிக வேலைகள் இல்லாத போது, நடுவில் இப்படி ஓர் இடைவெளி தெரியும். அப்போது சென்னைக்குப் புறப்பட்டு வந்து விடுவான்.

''தனியாக இங்கே உட்கார்ந்து என்ன செய்து கொண்டிருக்கிறீர்களாம்?'' என்று தலையைக் குறும்பாக அசைத்துக் கொண்டே உள்ளே வந்தாள் பத்மா.

''உன் பேச்சை ரசித்துக் கொண்டிருந்தேன்'' என்று சொல்லும் அளவுக்குத் துணிவு இல்லை. பக்கத்தில் இருந்த ஒரு புத்தகத்தை எடுத்துப் பக்கங்களை விசிறியாகப் புரட்டினான். அதையா படித்துக் கொண்டிருந்தான் அவன்? அவள் லைப்ரரியிலிருந்து கொண்டு வந்த புத்தகம் அது. அவனைப் படிக்கச் சொல்லி இருமுறை எடுத்துக் கொடுத்தாள். அவனுக்குத்தான் ஏனோ அதில் கவனம் பதியவில்லை.

அப்புறம் ''இதைப் படித்தீர்களா?'' என்று புத்தகத்தை எடுத்துக் கொண்டு, கையைப் பின்னால் மடித்தபடி அவனருகே குனிந்து கேட்டாள். அவன் பதில் சொல்லு முன்னால் அவளே உதட்டைப் பிதுக்கிக் கொண்டாள்.

ஒரு பிரபல கிரிக்கெட் ஆட்டக்காரரின் நினைவுகளின் தொகுப்பு அது. ஆட்டத்தில் சுவாரசியம் உள்ளவர்கள் சுவைத்துப் படிக்கக் கூடிய பல நிகழ்ச்சிகள், படங்களோடு இருந்தன. அவளுக்கு அந்த ஆட்டத்தில் ஒரு தனி பிரமை. அவனுக்கும் அதில் ஒரு பிரமை விழ வேண்டும் என்று அவள் எத்தனையோ பாடுபடுவாள்.

புத்தகத்தை எடுத்துக் கொண்டு உள்ளே போய் விட்டாள் பத்மா. சட்டென்று அந்த இடம் வெறிச்சென்று இருந்தது அவனுக்கு.

மாலை நேரம். கடற்கரைக்குப் போயிருந்தார்கள். அவர்களை உட்கார்ந்து பேசிக் கொண்டிருக்க விட்டுவிட்டு, மாமா உலாவப் போய் விட்டார். மண்டியிட்டு உட்கார்ந்தபடி, இடது கையை மணலில் ஊன்றிக் கொண்டு, மணலை நீவி அதில் ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள் பத்மா.

பின்னாலிருந்து அவளை யாரோ பெயர் சொல்லி அழைக்கும் சத்தம் கேட்டுத் திரும்பினான். அவள் முகம் நிமிர்ந்தது. சட்டென்று மேகம் விலகிய நிலவைப் போல, அவள் முகத்தில் ஒரு மலர்ச்சி. குளிர்ந்த சிரிப்புடன் கைகளைக் கூப்பி வணங்கினாள்.




''அந்தக் குரலில் சட்டென்று நெருங்கினாற்போலத் தெரிந்த பரிவில் ஏதோ ஓர் அனுதாபம்தான் தெரிந்தது அவனுக்கு. அவளும் அடைய முடியாததற்கு, அவன் நழுவவிட்டதற்கு அனுதாபமா? அப்படியானால் யாருக்கு வேண்டும் இந்தப் பரிவு? அதன் அடையாளமாக இந்த உபசாரம்? கனமையானதொரு கோபம் அவனுள் எழுவதை உணர்ந்தான்.'' தாழ்வு மனப்பான்மையில் தவிக்கும் ஆண் மகனுக்குத் தன் அந்தரங்கத்தை ஒரு பெண் எத்தனை நளினமாகக் காட்டுகிறாள்? இளம் உள்ளங்களின் உள்ளத் தவிப்பை உருவகப்படுத்தும் லட்சுமி சுப்பிரமணியத்தின் இந்த இனிய கதை சிறப்புச் சிறுகதையாக வருவதற்கு ஏற்றதுதானே?

''வாருங்கள்.''

அவன் வயது இருக்கலாம் அந்த வாலிபனுக்கு. நீண்ட தூய வெள்ளை நிற ஜிப்பா; எடுப்பான உடல் அமைப்பை நிறுத்திக் காட்டுவதைப் போல. கூர்மையான பார்வை தெரியும் அளவாக அமைந்த கண்ணாடி. கைவிரல்கள் பளபளவென்று மின்னிய தோல் பையின் மூதுவில் தாளமிட்டன.

''எங்கே இப்படி?''

''இன்று வானொலியில் ஒரு பேச்சு. இப்போதுதான் பதிவாயிற்று. அப்புறம் இப்படியே வந்தேன்.''

''இவரைத் தெரியுமா உங்களுக்கு?'' என்று அவன்புறம் திரும்பினாள். ''என்னோடு படித்தவர். இப்போது பத்திரிகை ஒன்றில் துணை ஆசிரியராக இருக்கிறார். அவர் எழுதும் கதைகள் எனக்கு மிகப் பிடிக்கும்!''

''அடிக்கடி வரும் பாராட்டுக் கடிதங்களில்தான் தெரிகிறதே?'' என்று சிரித்துக் கொண்டான் அவன்.

''எனக்கு வெறுமனே புகழத் தெரியாது.''

''இதுவும்கூட ஒரு புகழ்ச்சிதான்.''

அவர்களுடைய சிரிப்பு கோத்துக் கலந்து ஒலித்தது. அவனுக்குள் ஒரு மனப் புழுக்கம். தன்னைப் பற்றி அவள் அறிமுகம் செய்து வைக்கக்கூட இல்லை. ஆனால் அவனைப் பற்றி அறிமுகம் செய்து வைக்கக் குறிப்பாக என்ன இருந்தது ?

அவனை நடுவில் வைத்துக் கொண்டு இருவரும் பேச ஆரம்பித்து விட்டார்கள். சாட்சிக்கு ஒரு கருவியாகத் தன்னை அவர்கள் உபயோகிப்பது போல் அவனுக்குத் தோன்றியது. ஆனால் அந்த ஆதங்கம், பேச்சில் உருக்காண முடியவில்லை. புகழ்பெற்ற ஆசிரியர்களைப் பற்றி, அவர்களுடைய நடையைப் பற்றி, சமீபத்தில் வெளியானவைகளைப் பற்றி, பாராட்டும் விமரிசனமுமாக அவர்கள் பொழிந்து தள்ளுகிறார்கள். அவனுக்கு என்ன தெரியும், அந்தப் பேச்சின் ஓட்டத்தில் கலந்து, தானும் எதிர் நீச்சுப் போட?

பத்மாவுக்கு இவ்வளவெல்லாம் தெரிகிறதே என்ற வியப்பு ஒருபுறம். தனக்கு அதற்குச் சமானமாய்ப் பேச வகை இல்லாத ஏக்கம் மறுபுறம். தன் பலவீனத்தை உணர்ந்து அவன் தன்னை ஒதுக்கி விட்டுப் பேசிக் கொண்டிருக்கிறாள் என்ற குத்தல் தரும் வேதனை இன்னொரு பக்கம். அந்த வாலிபன் எழுந்து போகும் வரை இருப்பாகவே இல்லை.

''எப்படிப் பேசுகிறார், கவனித்தீர்களா? அந்தச் சாரனத்தில் நான் அப்படியே இழைந்து போனேன். அந்தச் சொற் பிரயோகத்தில்கூட ஒரு தனி லாகவம். ஒன்றுக்குப் பதில் இன்னொன்றைப் போட்டுவிட முடியாது.''

அவன் எதுவும் சொல்லவில்லை. சூழ்ந்த அந்தி இருளில், அவள் குரல் அவனை எட்டுகையில், அதன் அந்தரங்கம் ததும்பும் கொஞ்சல். கடல் ஓரம் நுடுநுடுங்கும் அலை நுரையில் மினிரும் மினுமினுப்பாய் அவள் பார்வை. உள் நினைவில் தோய்ந்தும், பேச்சில் இனிப்பதுமாக இழுத்த பாகு போலக் கனியும் அவள் பேச்சு. அவன் அதற்கு ஈடு இல்லைதான்.

கடல் ஓரம் விளக்குகள் ஏற்றிக் கொண்டன. மாமா திரும்பி வந்து விட்டார். அவர்கள் எழுந்து திரும்பி விட்டார்கள். கட்டை விரலால் மணலைச் சிதற விட்டுக் கொண்டு அவள் எழுந்து நடந்து வந்தாள். தோளில் லாகவமாகச் சரிந்த தலைப்பில், கொத்தாய் ஒருபுறம் மட்டும் நழுவிய பூச்சரத்தில் மணிக்கட்டின் மென்மை தெரிய விலகிய வளைகளில், அவள் மனமும் நிலைபிழந்து நின்றது. அவள் கலக்கம் அவனுக்கு ஏனோ புரிய மாட்டேன் என்கிறது?

கச்சேரி கேட்கப் போயிருந்தார்கள். சென்னையில் புதிதாகக் கட்டியிருந்த கட்டடம் அது. அதன் அமைப்பையும் வசதிகளையும் அவனுக்குக் காட்டிப் பிரமிக்க வைக்க வேணுமென்ற ஆசையேதானோ அவளுக்கு ? அவள் அழைப்பை மறுக்க அவனுக்கு மனமில்லை; கச்சேரி என்று மூன்று மணி நேரம் உட்கார்ந்திருக்கப் பொறுமை இல்லை என்றாலும்கூட.

குழலின் ஓசையில் அவள் மயங்கியவள் போல் உட்கார்ந்திருந்தாள். பட்டுப்பூச்சியின் இறகுகளைப் போல, ஸ்வரத்தின் அநுபவிப்பில் துடிக்கும் இமைகள். மடிமேல் தாளமிட்ட விரல்கள் அந்த இசைக்கு அநுசரிப்பாய் அசைந்தன. அவள் அவனுடன் பேசவே யில்லை. அந்த இசையின் லயிப்பில் அவள் தன்னை மறந்து உட்கார்ந்திருந்தாள்.

முடிந்து வெளியே வந்த போது அவள் சொல்லிக் கொண்டே வந்தாள். ''இவருடைய கச்சேரிகள் என்றால் நான் விடுவதில்லை. இந்தச் சிறு வயதில் என்ன ஞானம் கவனித்தீர்களா? முதலில் சங்கராபரண ராக ஆலாபனையின் போது — ''

தன்னை மறந்து பேசி விட்டவள், சட்டென்று அவன் முகத்தைக் கவனித்தாள். கல்லில் செதுக்கியது போல, அதில் துளி அசைவுகூட இல்லை.

''ப்ல'' என்று சேலையின் தலைப்பை முறுக்கி விட்டுக் கொண்டு தலையைக் குனிந்து கொண்டாள்.

''எனக்கு இதில் எல்லாம் பிடிப்பு இல்லை. பத்மா. ஏனோ உனக்கு இவ்வளவு பிரமை இருப்பது தெரிந்தும் கூட, எனக்கு ஒரு பற்றுதல் விழவில்லை. உன்னைத் திருப்தி செய்வதற்காகக்கூட'' என்று சொல்ல நினைத்தான். அது நினைப்போடு தங்கி நின்று விட்டது.

அவள் பேச்சு அதற்காக நிற்கவில்லை. தனக்குள்ளே பேசிக் கொள்வது போல, ஏதோ ஒரு திருப்திக்காக, வழியெல்லாம் பேசிக் கொண்டே வந்தாள்; அவனுக்கு அதில் எதுவும் புரியாது என்பதைக்கூட மறந்து விட்டவளாய்.

அவன் மனத்தில் தான் பின்தங்கிவிட்டது போல ஓர் உணர்ச்சி. பதில் தெரியாத வினாக்கள் மனத்துள் பொறித்தாற்போல மின்னின. ஒரு நினுசான ஏக்கம், பல வடிவங்களாய் ஒன்றோடொன்று புழுங்கின. அவள் குரலில் தெரிந்தது போன்ற ஏதோ ஒரு வெற்றி உணர்வு, தன்னுடைய தோல்வியையே பிரதிபலிப்பது போல, உயர்ந்து எழுந்து தெரிந்தது.

மறுநாள் ஊருக்குப் புறப்பட வேண்டும். ஏதேதோ சாமான்கள் வாங்கி வரக் கடைத் தெருவுக்குப் போயிருந்தான். பத்மாவும்கூட வந்திருந்தாள்.

ஜவுளிக் கடையின் வாசலில் ஒரு கணம் அவள் கால்கள் தயங்கின. உயரத்தில் அலங்காரமாகத் தொங்கிய புடவை ஒன்றைக் காட்டி, ''அது நன்றாக இல்லை?'' என்று கேட்டாள். அவனுக்கு என்ன தோன்றிற்றோ, கடைக்குள் நுழைந்து விட்டான்.

''என்ன செய்யப் போகிறீர்கள்?''

''அதை வாங்கப் போகிறேன்.''

ஒரு வெட்டு வெட்டி அவள் முகம் அவன் புறம் திரும்பிற்று. வியப்பில் புருவங்கள் நெறிந்தன.

''யாருக்காக?''

''நீயே சொல்லு.''

''உங்கள் தங்கை நிர்மலாவுக்கு வாங்குங்கள். அவள் சிவப்புக்கு இந்தக் கறுப்பு நிறம் எடுப்பாக இருக்கும்.''

''அவளுக்கு வேண்டுமென்றால் அவள் வாங்கிக் கொள்வாள்.''

''இல்லை. நீங்களும் வாங்கிக் கொடுக்கலாம். அதுவும் சரிதான். உங்களுக்குப் பிடித்த ஒன்றை, அவளுக்குப் பொருத்தமாகக் கற்பனை செய்து பார்க்கிறீர்கள். இயல்புதானே அது? அதுவும் உங்களுக்குப் பிடித்தமான ஒருவருக்காகத்தானே?''

அவனால் மறுக்க முடியவில்லை அதற்கு மேல். அவனைப் பார்த்த அவள் கண்களில் கட்டுப்படுத்தும் அந்த உறுதி இருந்தது. அதைச் சோதிக்கும் துணிவு இல்லை அவனுக்கு.

வீட்டுக்கு வந்ததும் மாமாவிடம் ஊருக்குப் போய்ச் சொல்ல வேண்டிய விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தான். பத்மா அங்கே இல்லை. தனக்கு அவைகளில் சம்பந்தம் இல்லை என்பது போலவா எழுந்து போய் விட்டாள்? அவனுக்கு நெருங்கிய, அவனைப் பற்றிய விவகாரங்கள் அவளுக்கு முக்கியம் இல்லை. அவளுடைய ஆசைகளும், கனவுகளும் அமைந்த வழியில் அவனால் செல்ல முடியவில்லை. இதுதான் உண்மையானால் அவர்களுக்கு இடையே இணைப்பு ஏது?

படுக்குமுன் கண்ணாடியின் முன் ஒருகணம் நின்று பார்த்துக் கொண்டான். அவனுடைய உருவத்தில் என்ன குறை? தோற்றம் எடுப்பாக இல்லையா? நெடிய உயர்ந்த உருவம், சிவப்பு நிறம், அவளுக்குப் பிடித்ததென்று சொல்லும் புன்னகை—யாவும் இருந்து என்ன? அவளை அவனால் திருப்தி செய்ய முடியவில்லை; கவர இயலவில்லை. இருவரிடையேயும் ஒரு மோனம் விரிந்து அதன் கரைகள் அகன்றது போன்ற உணர்ச்சி. அவனால் சொல்லிக் காட்டிக் கொள்ள முடியவில்லை. சொல்லின் பலக் குறைவால் அதில் உணர்ச்சியோ இல்லையோ என்றுதான் படுகிறது.

காலையிலிருந்தே அவள் கண்ணில் படவில்லை. அவனிடமிருந்து ஒதுங்கினாற் போல, இரண்டொரு சந்தர்ப்பங்கள் நேர்ந்த போதும் கூட விலகிக் கொண்டு விட்டாள். மாமாதான் ஏதோ மும்முரமாக இருந்தார். புறப்படும் சமயத்தில் அவனிடம் அந்த உறையைக் கொடுத்தார்.

''என்ன மாமா இது?''

''பத்மாவின் ஜாதகம். அவளுக்குத் தகுந்த நல்ல வரனைப் பார்த்துக் கொடுப்

பக்கத்து வீட்டுப் பெண்மணி: கொஞ்ச நாளைக்கு முன்னாலே இவங்க நல்லா இடமா இருந்தாங்களே. இப்ப எல்லோரும் பஞ்சைமா எலும்பும் தோலுமா போயிட்டாங்களே?

அவள் கணவர்: பிறத்தியாருடன் போட்டி போட்டுக்கிண்டு வயித்தைக் கட்டி, வாயைக் கட்டி, வீட்டைக் கட்டிண்டவங்க பின்னே எப்படி இருப்பாங்க?



பது உன் தந்தையின் பொறுப்பு என்று நான் சொன்னதாகச் சொல்லு.''

அவனைச் சுற்றி இருந்த உலகம் சட்டென்று இடிவது போல் இருந்தது. ஏதேதோ யோசனைகள் உருவமின்றி ஒருங்கே எழுந்து அடங்கின. கதவின்புறம் திரை அசைந்தது. அவனுக்குத் தெரியும். அங்கே நிற்பது பத்மாதான். அங்கே போய்க் கேட்க அவனுக்குத் தைரியம் இல்லை. அவள் விரும்பியதைத்தான் அவள் தந்தை செய்கிறாரா? திரையை விலக்கிக் கொண்டு அவள் முக உணர்ச்சிகளைப் படிக்க அவனுக்குத் துணிவில்லை.

அவன் பெட்டியில் சாமான்களை அடுக்கிக் கொண்டிருந்தான். அவன் பின்புறமாக வந்து நின்றாள் பத்மா.

''மாமாவுக்குப் பிடிக்கும். நான் கொடுத்தேன் என்று கொடுங்கள்.''

அவன் அதை வாங்கிக் கொண்டான். விரல்கள் செல்லமாய்க் கிண்ணத்தைத் தடவின. இலேசான நகங்களில் விரல் படியும் போது உள்ளே இருக்கும் பண்டத்தின் இதமான சூடு தெரிந்தது. 'கம்'மென்று எழுந்த திரட்டுப் பாலின் மணம்.

அந்தக் குரலில் சட்டென்று நெருங்கிவிடும் போலத் தெரிந்த பரிவில், ஏதோ ஓர் அநுதாபம்தான் தெரிந்தது அவனுக்கு. அவளை அடைய முடியாததற்கு, அவள் நழுவ விட்டதற்கு அனுதாபமா? அப்படியானால் யாருக்கு வேண்டும் இந்தப் பரிவு? அதன் அடையாளமாக இந்த உபசாரம்? ஊமையானதொரு கோபம் அவனுள் எழுவதை உணர்ந்தான்.

''ஜாதகம் பத்திரமாக இருக்கிறதா?''

குத்தி வாங்குவது போல அந்தக் கேள்வி. அடியுண்ட பார்வையாகத் தலைநிமிர்ந்தான்.

''இருக்கிறது. அப்பாவிடம் சொல்லித் தேடிப் பார்க்கச் சொல்கிறேன். நல்ல வரனாக. ஆனால் அதற்கு முன்னால்—''

''—முன்னால்?''

''உன் கணவர் எப்படி இருக்கவேண்டுமென்று நீ சொல்வது நல்லது இல்லையா, பத்மா?''

''உங்களுக்குத் தெரியாதா உண்மையாகவே?''

''தெரியாது.''

''சொல்லுகிறேன். சிவப்பாக, ஒல்லியாக, உயரமாக, கண்ணாடி போட்டுக் கொண்டு—''

அவன் கண்கள் மருண்டன. காதருகே கலகலவென்ற நகைப்பு. நம்ப முடியாதவனாகத் தலை நிமிர்ந்து பார்த்தான். அவள் முகத்தில் அவன் திகைப்பைப் புரிந்து கொண்ட மாறுதலுங்கூட இல்லை. தலைப் பூவைச் சரி செய்துகொள்ளும் பாவனையில் முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''பத்மா, நீ சொல்வது—''

மறுபடியும் அந்தச் சிரிப்பு, பனித் துளிகளை முகத்தில் வாரி இறைத்தாற் போலக் குளுமையாகச் சொரிந்தது. கண்களில் சிறு குறும்பு.

''அத்தான்! உங்களைப் போல அசடைத்தான் பார்த்ததில்லை. அப்பா ஒரு குறிப்பாகத்தான் ஜாதகத்தைக் கொடுக்கலாம். ஜாடையாகத்தான் சொல்லலாம். நீங்கள் புரிந்து கொள்ள வேண்டாமா? இதிலேயும் கூடக் கூச்சமா?''

அவன் எழுந்து நின்று கொண்டான். சட்டென்று அவள் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட விதம் அவனால் நம்பக் கூடியதாக இல்லை. பள்ளிக்கூடச் சிறுமி போலப் பீறிடும் சிரிப்பு.

''அப்பாவை மட்டும் இல்லை பத்மா. பெண்ணையும்கூட எனக்குப் புரியத்தான் இல்லை.''

''ஏனாம்?''

''அவள் வருணிக்கிற பையனுக்குச் சாதுரியமாகப் பேசத் தெரியாது. பாடம் சொல்லித் தரத் தெரியாது. விளையாட்டில் ஆர்வம் இல்லை. சங்கீதத்தில் ரஸனை கிடையாது. கதை எழுதாவிட்டால் போகிறது; பாராட்டிப் பேசவோ எழுதவோகூடவும் தெரியாது. இன்னும்.........''

அவள் கலகலவென்று சிரித்தாள். விளக்கேற்றாத மாலை இருளில் அதன் உருட்டு அலை பாய்ந்தது; நெளிவு கண்ணாடி வரியாகப் பளபளத்தது.

''பத்மா! ஏன் சிரிக்கிறாய்?''

அவள் சிரிப்பு சட்டென்று அடங்கிற்று.

''ஐயோ அத்தான், இப்படியும் அப்பாவியாக இருப்பீர்களா? அந்த மாதிரி எல்லாம் இருந்தால் நன்றாக இருக்குமென்று நினைத்தேன். உங்களிடம் என் ஆசைகளையும் சொன்னேன். சொல்லக் கூடாதா? இல்லாததைக் குறைகளாய் எடுத்துக் காட்டினேனா? தனக்குப் பிடித்த ஒன்றை, தன் மனத்துக்குப் பிடித்தவர்களிடம் பொருத்தி வைத்துக் கற்பனை செய்து பார்ப்பதுதானே இயல்பு? உங்கள் தங்கைக்குப் பொருத்தமான புடவையை நீங்கள் தேர்ந்து எடுத்ததைப் போல? அவள் மேல் இருக்கும் பிரியத்தின் அடையாளம்தானே உங்கள் ஆசையும்?''

''நீ... நீ மனிதத் தத்துவம் பேசுகிறாய், பத்மா...... எனக்கோ மனத் தத்துவம்கூடத் தெரியாது.''

''ஒரு தத்துவமும் இல்லை. ஒரு முயற்சி தான் செய்து பார்த்தேன்.''

''என்ன முயற்சி?''

''உங்களிடம் இருந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றிய பண்புகளை, என் மேல் உங்களுக்கு இருக்கும் அன்பின் சக்தியை உபயோகித்து, தோற்றுவிக்க முடியுமா என்று பார்த்தேன். அந்த அளவுக்குத் தாண்டிவிடக் கூடிய சக்தி உங்களிடம் எனக்கு இருக்குமோ என்று பார்த்தேன். பின்னே என்ன?''

அவள் குரல் நிதானமாய்ப் பூரண வடிவுடன் இருளிலிருந்து பிரிந்து வந்தது. அதன் உறுதியில் அவன் தன்னம்பிக்கைக்குப் புது உருவம் கிடைத்தாற் போல் இருந்தது.

''அது உன்னால் முடியும் பத்மா!'' என்றான்.

# சாதல் இல்லையேல் காதல்



## சோ

**காட்சி 36 — சபேசன் வீடு**

(சபேசன் அறை. இரவு மணி சுமார் பத்து இருக்கும். சபேசன் ஒரு சாய்வு நாற்காலியில் அமர்ந்திருக்கிறார். நாகராஜனும் சுரேஷும் அடிமேல் அடி வைத்து அறைக்குள் நுழைகின்றனர். சுரேஷ் கையில் ஒரு கூரிய கத்தியைப் பிடித்திருக்கிறான்.)

சுரே: ஸார்...... ஸார்......

சபே (திரும்பிப் பார்த்து): நீயா? என்ன இந்த நேரத்துலே..... என்ன காப்பி, டீ ஏதாவது சாப்பிடறியா?

சுரே (முறைப்பாக): என்ன உபசாரம் பலமா இருக்குது? கையிலே கத்தியைப் பார்த்த உடனே குலே நடுங்குதா ?

சபே: கத்தியா!.... (கத்தியைப் பார்த்து) ஓ!.... கையிலே கத்தி வெச்சிருக்கிறியா ! இப்பதான் பார்க்கிறேன்.

நாக: நல்லாப் பார்த்துக்குங்க. நிஜக் கத்தி........

சபே: என்ன விலே?

சுரே: அது உங்களுக்கு அநாவசியம்.... கத்தியை என்ன விலைக்கு நாங்க வாங்கினா உங்களுக்கென்ன?

நாக: எங்க கத்தி. அதை நாங்க என்ன விலைக்கு வேண்ணாலும் வாங்குவோம்.

சபே: உங்க கத்தின்னு அதை நீங்க ஏன் விலைக்கு வாங்கறீங்க?

சுரே: உஸ்ஸ்..... மரியாதையா இப்ப நேரே மாலதிகிட்டே போய் நீங்க எங்க திட்டத்தைப் பத்திச் சொல்லப் போறீங்களா, இல்லையா?

நாக: சுரேஷ் தன் சிநேகிதனுக்கு எழுதின லெட்டரை, நீங்க படிச்சது. அதுலே எங்க திட்டம் விவரமா இருந்தது. நாங்க உங்களை ஏமாத்தினது, நான் சாகலே, நான்தான் நாகராஜன்கறது எல்லாம் உங்களுக்கு இப்ப நல்லாத் தெரியும், இல்லையா ?

சபே: தெரியும்.

சுரே: அதை அப்படியே மாலதிகிட்டே சொல்லணும்......எழுந்திருங்க.... கம் ஆன்!

சபே: எங்கே......

நாக: மாலதிகிட்டே போய் சொல்றதுக்கு.

சபே: நான் மாட்டேன்.....

சுரே: மரியாதையா நாங்க சொல்றபடி செய்யுங்க..... இல்லேன்னா கத்தியிலே ஒரு குத்து.

நாக: சதக்! சதக் !

சபே: ஒரே குத்துலே எப்படி ரெண்டு 'சதக்' வரும்?

சுரே: ரெண்டு பேரும் சேர்ந்துதானே குத்தப் போறோம்!

சபே: ஓ! அது எனக்குத் தெரியாது.

நாக: சரி! இப்ப என்ன சொல்றீங்க..... மரியாதையாய்ப் போய் மாலதிகிட்டே நடந்ததை, நடந்தபடி சொல்லிடறீங்களா?

சபே: நான்தான் மாட்டேன்னு சொல்லிட்டேனே!

சுரே : அது முதல்லே சொன்னீங்க..... இப்ப என்ன சொல்றீங்க?

நாக: இப்ப நாங்க பயமுறுத்தியிருக்கமே!

சபே: ஓ! நீங்க என்னைப் பயமுறுத்தினீங்களா ? எனக்குப் பயமா இல்லையே—நான் என்ன பண்றது?

நாக: மரியாதையா பயப்படுங்க ஸார் !

சுரே: ப்ளீஸ் பயப்படுங்க ஸார்.

நாக: பயப்படறீங்களா, இல்லே, அதுக்கு ஒரு தடவை பயமுறுத்தட்டுமா?

சபே: டேய், இடியட்ஸ்! எனக்கு நேரம் ஆவுது. தூங்கணும். நீங்களும் வேணும்னாலும் படுத்துத் தூங்குங்க. சும்மா சத்தம் போடாதீங்க.

சுரே (பரிதாபமாக): நீங்க பயப்படுவீங்கங்கற நம்பிக்கையோட வந்தோம். நீங்க இப்படி நம்பிக்கைத் துரோகம் செய்யலாமா ?

நாக: நீங்க ஒரு ஜெண்டில்மேனா இருந்தா பயப்படணும் ஸார்.

சபே: நீங்க என்ன சொன்னாலும் சரி.... நான் மாலதிகிட்டே நடந்ததைச் சொல்லப் போறது இல்லே......

(மாலதியும் கனகசபையும் ஓடி வருகிறார்கள்.)

கன: என்ன இங்கே சத்தம்..... இந்த நேரத்துலே.....

மால (சுரேஷையும், நாகராஜனையும் பார்த்து): இவங்க எங்கே வந்தாங்க ?

கன (அவர்களைப் பார்த்தவுடன் சுரேஷைக் காட்டி): இவன்தான்..... ராஸ்கல்..என்னை ஏமாத்தினியேடா..... டேய்.... உன்னை.... இரு.....இரு......

சபே (கனகசபையிடம் நாகராஜனைக் காட்டி) இவர்தான் நாகராஜன் தம்பி தியாகராஜன்.....

நாக: இல்லே, இல்லே! நான் நாகராஜன தம்பி இல்லே.... நாகராஜன் அண்ணன் இல்லே...... ஜமீன்..... நான்தான் நாக ராஜன்........

சபே: நீ யாருன்னு உனக்கே தெரியலே !

கன: இந்தக் காலத்துப் பசங்களுக்கே அது தான் பெரிய வியாதி.

மால: சித்தப்பா..... நாகராஜன் இறந்து போனதுக்கே இவர்தான் காரணம்... பம்பாய்க்கு வர்றதுக்கு முன்னுலேயே நாக ராஜன் ஒரு கவிதை எழுதினுர். அதுலே தம்பியை விஷப் பாம்புன்னு எழுதினுர். அதுக் கேத்த மாதிரிதான் இவர் இருக்கார்.

நாக: அப்போ ! அந்தக் கவிதைக்கு அது அர்த்தமே இல்லே. மாலதி என்னே நம்பு. நான்தான் நாகராஜன்..... எங்க இட் டத்தை விவரமா எழுதின கடுதாசியைக் கவர் உள்ளே போட்டுக் கொடுத்தேன்..... நீதான் அதை அஜாக்கிரதையாயிருந்து தொலேச்சுட்டே.......

மால: ஏதாவது பொய் சொல்லி என்னே ஏமாத்தப் பார்க்கிறீங்க. நாகராஜன் கொடுத்த கவர்லே வெறும் காகிதம்தானே இருந்தது ? உங்க எதிரிலேதானே கவரையே பிரிச்சேன்.... நான் எவ்வளவு ஜாக்கிரதையா அந்தக் கவரை வெச்சிருந்தேன்.... நானும் மிஸ்டர் சபேசனும் அதைப் பார்க்க எவ் வளவு ஆவலா இருந்தோம்.....

சபே: நீதான் கடையிலே இமர்னு என்னே ஏமாத்திட்டு, நீ மட்டும் பிரிச்சுப் பார்த்துட்டே.......

மால: தப்புதான்..... அந்த வெறும் பேப்பருக்கு என்ன அர்த்தம்னு எனக்கு இன்னும் தெரியலே....: உங்களுக்குப் புரி யறதா ?

சபே: என்னே ஏன் கேக்கறே? நீதான் என்னே ஏமாத்திட்டு எனக்கு முன்னுலே தனியா அந்தக் கவரை பிரிச்சுட்டியே..... அது விஷயமா எங்கிட்ட பேசாதே....

நாக: என்னே நம்ப மாட்டியா மாலதி....

(நாதனும் நிர்மலாவும் வருகிறுர்கள்.)

சபே: அடேடே! நாதன் நீ எங்கே வந்தே ? கம் ஆன் நிர்மலா.... என்ன இந்த நேரத்துலே ரெண்டு பேரும் இப்படி...

நாத: ஒன்னுமில்லே சபேசன்....

நிர்: என்னு ஒன்னுமில்லே..... நான் சொல்றேன்....நீங்க ஒரு லெட் டர் கிழிச்சுப் போடலே..... அந்த லெட்டர் பத்தி மாலதி கிட்ட சொல் லணும்.... அது ரிக்வெஸ்ட் பண்ணத் தான் வந்தோம்.....

சபே: லெட்டர் கிழிச்சுப் போட் டேனு? ஓ. இந்தப் பசங்க உங்களேயும் ஏமாத்தி யிருக்காங்களா?

நாத : அப்ப இவங்க சொன்னது பொய்யா ?

சபே: இந்த சுரேஷ் விளையாட்டுக்காரப் பய....... யாரையாவது ஏமாத்திக்கிட்டே இருப்பான்.

சுரே: மிஸ் மாலதி! நான் சொல்றேன். கொஞ்சம் கேளுங்க...... நாகராஜன் செத் துட்டான்னு சொல்லி, அவனுக்குத் தம்பி யைச் சருஷ்டி செய்து, பணம் நரட்ட நினைச்சோம்...... எங்க இட்டம் எப்படி, எப்படியோ திரும்பி, கடையிலே உங்க சித்தப்பாகிட்டே இருந்தே பணத்தை அடிச் சோம். இப்ப நாகு கையிலே பத்தாயிரம் பணம் ரெடியா இருக்கு.....

மால: அவர்தான் இறந்துட்டாரே.

சுரே: அப்போ நான் சொல்றதை நம்ப மாட்டீங்களா ?

நாக: ஸார். மிஸ்டர் கனகசபை சித்தப்பா, நீங்க சொன்ன மாதிரியே ஏதோ ஒரு வழியிலே மொத்தமா பத்தாயிரம் சம்பாதிச் சுட்டேன்...... உங்க சொல்லேக் காப்பாத்த மாட்டீங்களா ?

கன: என்னய்யா, உளர்றே.... நீ சம்பாதிச்சா என்ன பிரயோசனம்? உங்க அண்ணன் நாகராஜன் சம்பாதிச்சாத்தானே கல்யாணம்? அவனேதான் பூட்டானே !

நிர்: ஓ! மை காட்! சுரேஷ்!! இது இன்னு கன்ப்யூஷன் ! மணி பன்னிரண்டாவப் போறது ?

நாக: அய்யய்யோ ! சுரேஷ்! மணி பன்னிரண்டாகப் போகிறது!....

சுரே: ஆகட்டுமேடா....

நாக: என்னடா, இது! ஒன்னும் தெரி யாம பேசறே ! இன்னிக்கு என்ன தேதி....



காலண்டரைப் பாரு...... இன்னிக்குப் பன்னிரண்டு மணியோடே சித்தப்பா கொடுத்த ரெண்டு மாசம் கெடு தீர்ந்து போயிடுண்டா !...... அப்புறம் நாம எல் லாத்தையும் நிரூபித்தும் பயனில்லேயே !

சுரே: அடக் கடவுளே ! நாம் இத்தனே நாள் தேதியைக் கவனிக்காம இருந்துட் டமே !

**சபே:** கனகசபை! இன்னிக்குப் பன்னிரண்டு மணியோட கெடு இல்லையா?

கன: ஆமாம்..... எனக்கே இப்பதான் ஞாபகம் வருது......

சுரே: ஸார் கனகசபை.... எனக்கு ஒரு ஐடியா...... இவன் நாகராஜனு இல்லே. அவன் தம்பி தியாகராஜனென்ற விஷயத்தை அப்புறம் முடிவு செய்துகொள்வோம். நீங்க, பன்னிரண்டு மணிக்கு முன்னுலே பத்தாயிரத்தை வாங்கி வெச்சுடுங்க.... இவன் நாகராஜன்னு தெரிஞ்சா கல்யாணம் நடக்கட்டும்....... இல்லாட்டி நிக்கட்டும்.

கன: அதுவும் நியாயம்தான்.... செய்துப்புடுவோம்.

சபே: ஏய் கனகசபை! என்ன முட்டாளா இருக்கியே! இவன் கையிலேயிருந்து நீ எப்படிய்யா பணத்தை வாங்கலாம். உனக்குப் பந்தயம் யாரோட......

கன: நாகராஜனோட......

சபே: இவன் யாரு......

கன: தியாகராஜன்.....

சபே: பின்னே எப்படி இவங்கிட்டே பணத்தை வாங்கலாம்....

கன: அதுவும் நியாயந்தான்....வேண்டாமய்யா!

நாக: சுரேஷ்....... என்ன இது...... சபேசன் நான் சொன்னு என்னமோ



கேப்பாருன்னு....... நீ எங்கிட்டவே கதை அடிச்சிருக்கே போலிருக்கு.... எனக்கு ஒண்ணுமே புரியலே......

திர்: எனக்கு ஒரு ஐடியா!

சுரே: என்ன?

நாக: என்ன? என்ன?

திர்: நாம எல்லாரும் இப்ப ஒரு 'பிக்சர்' போறு என்ன

நாக: கர்மம்! இதான் ஐடியாவா?

சுரே: இப்போ எது சினிமா....இத்தனை மணிக்குப் பாதி நடந்திருக்கும். பேசாம இரு..

நாக (அழுகிறான்): சுரேஷ்...... டேய்....

சுரே: என்னடா......

நாக: கெடியாரத்திலே முள் நகர்ந்துகிட்டே இருக்குடா..... அய்யய்யோ! மணி பன்னிரண்டு அடிக்க அஞ்சு நிமிஷம்கூட இல்லையே!

சுரே: மிஸ்டர் சபேசன்...... உங்களுக்கு சவு இரக்கமே கிடையாதா?

மால (சபேசனிடம்): இவங்க சொல்றது நிஜமா?

**சபே:** சே! சே! சும்மா தமாஷ் பண்றாங்க. நான் ஏன் அந்த மாதிரி லெட்டரெல்லாம் கிழிக்கப் போறேன்..... இவன் தியாகராஜன் தான்..... நாகராஜன் தம்பி.

நாக: சார், பன்னிரண்டு மணிக்குள்ளே உண்மையை ஒப்புக்காட்டி நான் தற்கொலை பண்ணிக்கப் போறேன்.

சபே: நல்ல தமாஷ் பண்றீங்க ரெண்டு பேரும்.

நாக: ஸார் ஸார்.... இன்னும் நாலே நிமிஷம்....... சொல்லிடுங்க..... கெடு தீர்ந்து போயிடும்......

சுரே: அப்புறம் நீங்க சொல்லிக்கூடப் பிரயோசனம் இல்லே....

நாக (சபேசன் காலில் விழுகிறான்): நான் செஞ்சதெல்லாம் தப்பு.... என்னை மன்னிச்சு உதவி பண்ணுங்க ஸார்......

சுரே (அவனும் அவர் காலில் விழுகிறான்): ஸார், எனக்கு வாழ்க்கையிலே எவ்வளவோ உதவி பண்ணியிருக்கீங்க..... இந்த உதவி தான் ஸார் மறக்க முடியாத உதவியா யிருக்கும். என்னை நம்பி வந்த நாகராஜன் வாழ்க்கை என்னுலே பாழாகிடும் போலே இருக்குது. நீங்கதான் காப்பாத்தணும்...

(சபேசன் ஒன்றும் பேசாமல் உள்ளே போகிறார்.)

திர்: ஏய்! சுரேஷ்! வாட்சஸ் இஸ்? பொம்பிளே மாதிரி அழுகிறே! அழு வாதே! ப்ளீஸ்!

சபே (திரும்பி வந்து): மாலதி... இந்தப் பேப்பரைப் படிச்சுப் பாரு.... (மாலதியிடம் ஒரு காகிதத்தைக் கொடுக்கிறார்) கனகசபை! இந்தப் பசங்க சொல்றது உண்மை தான். மாலதிக்கு முன்னுலே நான் அவ கையிலே இருந்த கவரைப் பிரிச்சுப் பார்த்துட்டேன். எக்ஸ்க்யூஸ் மீ மாலதி..... என்னுலே பொறுமையா இருக்க முடியலே.... அதுனுலேதான் உனக்குத் தெரியாம நாகராஜன் உங்கிட்டே கொடுத்த கவரை நான் பிரிச்சுப் பார்த்துட்டேன். இவங்க



"உங்களுக்கு என்ன ஸார்? இரண்டு இட்லி, இரண்டு வடையா?"

"கையை நீட்டு. இரண்டு இட்லிகள்; இரண்டு வடைகள் என்று சொல்லணும், தெரிஞ்சுதா?"

திட்டம் அதுவே விவரமா இருக்கவே, இவங்க என்னை ஏமாத்த நினைச்சதையும் புரிஞ்சுக்கிட்டேன்.

கரே: அப்ப முதல்லேயே உங்களுக்குத் தெரிஞ்சு போச்சா ?

சபே: யெஸ் ! நான்தான் வெறும் பேப்பரை வெச்சேன்.

கரே: அதனாலேதான் மாலதிக்கு அர்த்தமே கண்டு பிடிக்க முடியலே !

சபே: ஸ்ஸ்.... இவங்க விளையாட்டுக்குச் சரியா நானும் விளையாடினேன்.... இப்ப வரைக்கும் இவங்களை நான்தான் ஏமாத்தினேன்...... நான்தான் ஜெயிச்சேன்.

கரே: ஒரே அழுகுணி ஆட்டம் ஆடி ஜெயிச்சிருக்கீங்க......

கன: சின்ன வயசிலேயிருந்து அதே புத்தி தான் இவனுக்கு!

சபே: கனகசபை..... நீ சொன்னபடி நாகராஜன் ஜெயிச்சுட்டான்..... கல்யாணத்தை நடத்த வேண்டியதுதானே....

கன (ஒரே தாவாகத் தாவி, நாகராஜன் கையிலிருந்து பணத்தைப் பிடுங்கிக் கொள் கிறார்): அப்பாடி ! நல்ல வேளை....

(மணி பன்னிரண்டு அடிக்கிறது.)

கன: நல்ல வேளை! பன்னிரண்டு மணிக்குள்ளே.......பணம் என் கைக்கு வந்தது.... இல்லாட்டி நாகராஜன் ஜெயிச்சான்னு நான் எப்படி ஒத்துக்க முடியும்? கல்யாணம் எப்படி நடக்கிறது ?

சபே: வெரிகுட்! மாலதி, என்ன முழுக்கவும் படிச்சியா? பையன் எப்படிச் சாமர்த்தியமா பண்ணியிருக்கான் பார்த்தியா ?

மாலதி (வெட்கத்தோடு): போங்க மாமா.

நாக: மாலதி... எல்லாம் கரேஷ் உதவியிலேதான் என்னாலே முடிஞ்சது.....

நாக: சபேசன்...? இந்தக் கல்யாணம் எப்போ நடக்கறது ?

சபே: ஏன்?

நாக: அதே முகூர்த்தத்திலே நம்ம நிர்மலாவுக்கும் கரேஷுக்கும் கல்யாணம் நடத்திப் புடணும்.

சபே: கரேஷ்! அது வேறே ஏற்பாடு பண்ணிக்கிட்டியா? பெரிய ஆள்யா நீ! நிர்மலா, இந்த மாதிரி தங்கமான பையன் கிடைக்க நீ கொடுத்து வைச்சிருக்கணும்.... கரேஷ் இன்னிக்கே உங்க ஊருக்குத் தந்தி கொடுத்து எல்லாரையும் வரவழைச்சுடு..... பம்பாயிலேதான் ரெண்டு கல்யாணமும் நடக்கணும்.

கரே: சரி ஸார்.... (வெட்கப்படுகிறான்)

சபே: அடி சக்கை ! உனக்குக்கூட வெட்கமா........

நாக: ஹிஹி....... (சிரிக்கிறான்)

சபே: போங்! அப்படி சிரிக்காதேய்யா.... எனக்குப் பழைய ஞாபகம் வரது !.... மாலதி.... இந்தப் பய சிரிக்காம பார்த்துக்க!

நாக: மாலதி..... நான் சாகலேன்னு தெரிஞ்சுகிட்டே இல்லையா?

மால: பேசாம இருக்க மாட்டீங்க !

கரே: டேய், இனிமே ஏன்டா, கவலே ? சாதல்தான் இல்லேன்னு ஆயிடுச்சு ! இனிமே காதல்தான்! டோன்ட் வொர்ரி!

சபே: சும்மா பேசாதீங்க ! என்னை ஏமாத்தப் பார்த்தீங்களே ? முடிஞ்சுதா ? கடைசியிலே என் காலிலேதானே வந்து விழுந்தீங்க ?

மால: (சிரிக்கிறாள்)

கரே: இவன் கல்யாணம் நடக்க ஒரு தடவை செத்துப் பொழைச்சுட்டான் பாவம்..... என்ன பண்றது. தன் வினை தன்னைச் சுடும். இவன் பண்ணின பாவம், இந்த மாதிரி கஷ்டம் அநுபவிச்சான்...

நாக: நான் என்னடா பாவம் பண்ணினேன்......

கரே: துணிஞ்சு கவிதை எழுதினியேடா, மகா பாவி! அது போருதா?

(அனைவரும் சிரிக்க)

கரே: மாலதி, உங்க கிட்டே ஒரே ஒரு வேண்டுகோள்......

மாலதி : கேளுங்க......

கரே: உங்க கல்யாணத்துக்கு நான் எவ்வளவோ உதவியிருக்கேன்.... அதுக்குப்பிரதி உபகாரமா இதைக் கேக்கறேன்.

நாக: டேய்! அவளைக் கடன் கேக்கா தேடா...... அசிங்கம்.....

கரே: நீ பேசாம இருடா.... மிஸ் மாலதி, நான் கேக்கற உதவியைச் செய்வீங்களா?

மால: கரேஷ், நீங்க எங்க ரெண்டு பேருக்கும் செய்திருக்கிற உதவிக்கு நான் என்ன வேண்ணாலும் செய்யத் தயாரா இருக்கேன் சொல்லுங்க......

கரே: தமிழ் மக்களின் சார்பிலே கேட்டுக்கறேன்....... இனிமே இந்த நாகராஜன்... கவிதை எழுதாம பார்த்துக்க வேண்டியது உங்க பொறுப்பு !

(முற்றும்)

# நிவேதனம்



— வ.சா. நாகராஜன் —

மாலை ஐந்தரை மணிக்கு வரவேற்பு என்று அழைப்பிதழில் போட்டிருந்தது. யாரோ மூன்றாந்தரப் பாடகியின் கச்சேரிக்கும் ஏற்பாடு ஆகிக் கொண்டிருந்தது. மூர்த்தி மாப்பிள்ளை சூட் அணிந்து ஐந்து மணிக்கே தயாராகி விட்டான். காற்றே இல்லை; புழுக்கத்தில் கோட்டினுள் வியர்வை கசகசத்தது.

சகோதரிகள், குழந்தைகள் புடைசூழ விஜயாவை அழைக்க மூர்த்தி மாடிப்படி ஏறினான். சென்னையில் அதுதான் வழக்கமாம். 'ரிசப்ஷ'னுக்குப் புது மாப்பிள்ளை போய் மனைவியை அழைத்து வரவேண்டும் என்பது.

விஜயாவை அழைத்து வர வேண்டும் என்பதற்கு மூர்த்திக்குச் சொல்லியா தர வேண்டும்?..... விஜயா! —

விஜயா என்றால் எல்லோரையும் போன்ற பெண்ணா அவள்? தலை நிறையப் பூ; கண் நிறைய நாணம்; வாய் நிறையச் சிரிப்பு; கன்னத்தில் பளிங்கின் பளபளப்பு; ரோஜாவின் மென்மை!

காலை மணமேடையில்தான் விஜயா எத்தனை அழகுப் பெருக்குடன் உட்கார்ந்திருந்தாள்! அருகில் இருக்கும் அவன் கடைக்கண் பார்வைக்கு மட்டும் தெரியும்படியான மறையாத உதட்டோரப் புன்னகையுடன் இருந்த அவள் அழகில் நெஞ்சைக் கிளறும் பெண்மைக் கவர்ச்சி இல்லை; ஆண் பிறப்பையே அடக்கும் தாய்மைக் குளிர்ச்சியையும் ஒரு தெய்வீகத் தெளிவையும்தான் அவன் கண்டான்!

மூர்த்தி மதுரைத் தெருக்களில் எத்தனையோ பெண்களைப் பார்த்ததுண்டு. எத்தனையோ பெண்களின் களங்கமற்ற விழி அழகையும் தாமரை மொட்டை நிகர்க்கும் உதட்டுக் குவியலையும், சங்குக் கழுத்தழகையும் தனித் தனியாக நினைத்துப் பார்த்து வியந்ததுண்டு. ஆனால் அந்த அழகு அத்தனையும் நிறைந்து நினைவிலேயே நெஞ்சை வருடும் விஜயாவின் முன்னால் வேறு யாரையும் அவனால் ஒப்பிட்டுப் பார்க்க முடியவில்லை.

அவன் தன் அதிர்ஷ்டத்தை எண்ணி எண்ணி உவகை அடைந்தான். நெஞ்சையள்ளும் அழகும் மனசை நிறைவிக்கும் அடக்கமும் அறிவு ஒளி சொட்டும் படிப்பும், ஒவ்வொரு செயலிலும் தெரியும் பண்பும்— விஜயா எதில் குறைந்தவள்? எல்லாவற்றுக்கும் மேலாக மூர்த்தி மிகவும் எதிர்பார்த்தபடி விஜயா காரியாலயம் ஒன்றில் வேலை பார்ப்பவள்.

ஆம்; மூர்த்தி, மனைவி என்ற ஒரு பாரத்தை ஏற்கவில்லை. மாதம் இருநூறு ரூபாய் வட்டி கொடுக்கும் ஒரு மூலதனத்தையும் சேர்த்து ஏற்றுக் கொண்டான். விஜயா, மூர்த்தியின் உள்ளத்துக்கு உவகையூட்டுபவளாக மாத்திரம் இல்லாமல் தேவைகளை அதிகரித்துக் கொண்டு போகும் வாழ்க்கையில் பொருளாதாரப் பிரச்னைகளிலும் ஈடு கொடுப்பவளாக அமைந்திருந்தாள்.

மூர்த்தி ஒரு வழியாக மாடிப் படி ஏறி எட்டிப் பார்த்த போது, கோடி அறையில் வாயில் கதவுப் பக்கம் முதுகைக் காண்பித்தபடி விஜயா தன் அலங்காரத்துக்குக் கடைசி 'டச்' கொடுத்துக் கொண்டிருந்தாள். அவள் பக்கத்தில் ஒரே ஒரு தோழி மாத்திரம் நின்று கொண்டிருந்தாள்.

''விஜயா! மணி ஆயிடுத்துடி. ஆபீஸுக்குத்தான் தினம் லேட் என்றால் ரிசப்ஷனுக்குமா லேட்டாகக் கிளம்பணும்?'' என்று முழக்கிக் கொண்டிருந்தாள் தோழி.

அவள் சொன்னது காதில் விழவே மூர்த்தி வாயிற்படியில் தயங்கி நின்றான்.

''ஆபீஸில் எல்லாரும் வருவா இல்லே? மொத்தம் ஐம்பது பேர்கள் வருவார்களா சுமாரா?'' என்று தோழி கேட்டாள், விஜயாவை.

''எனக்கு எப்படித் தெரியும். எல்லார்க்கும் பத்திரிகை கொடுத்திருக்கிறேன். வருகிறவர்கள் வருவார்கள்.'' விஜயாவின் பதிலில் தெரிந்த அமரிக்கையை மூர்த்தி கவனித்தான்.

தோழி ஒருகணம் தயங்கினாள். விஜயாவின் அருகில் சற்று நெருங்கி, ''ராகவனுக்குப் பத்திரிகை கொடுத்தியோ?'' என்று கேட்டாள்.

ஏனோ விஜயா சற்றுத் தயங்கினது மாதிரி இருந்தது. தோழியின் கேள்வி சற்று அசம்பாவிதம் என்பதாக விஜயா நினைத்தது போல் இருந்தது. ஒரு நிமிஷ மௌனத்துக்குப் பிறகு, ''உம்......'' என்றாள் அசுவாரசியமாக.

''வரேன் என்று சொன்னாரோ?''

''உம்......''

''பாவம்! அநேகமாக வர மாட்டார்.''

மூர்த்தியின் வருகையை யாரோ கூற, விஜயாவும் தோழியும் திரும்பினார்கள். விஜயா தலை கவிழ்ந்தாள். தோழியின் விஷமச் சிரிப்பு மூர்த்தியின் பார்வைக்கு வெறுப்பையே அளித்தது.

''விஜி! எத்தனை நேரம் மாப்பிள்ளையைக் காக்க வைப்பது? ஊம்... கிளம்பு.......'' யாரோ விஜயாவை முடுக்கினார்கள்.

விஜயா அடியெடுத்து வைத்தாள். இருவரும் மாடிப் படிக்கட்டுகளில் மௌனமாகவே இறங்கி முன்பக்கத்துப் பந்தலுக்கு வந்தார்கள். பின் தலை முழுவதையும் மறைத்த மல்லிகைப் பூவின் மணமும் புதுப் பெண்ணின் உடல் மணமும்...... அப்பா!

விஜயாவின் காரியாலயத்தில் வேலை பார்க்கும் ஆண்களும் பெண்களுமாக ஒரு பெருங்கூட்டமே பந்தலுக்கு வந்தது. விஜயா மாலை அசைந்தாட எழுந்து நின்று ஒவ்வொருவர் முகத்தையும் பார்த்துக் கைகூப்பி வரவேற்றாள். மூர்த்தியும் எழுந்து நின்று வருவோரை வரவேற்றான்.

"இவர்தான் ஆபீஸ் மானேஜர்......"

மூர்த்தியின் கையைக் குலுக்கிவிட்டு வழக்கமான வார்த்தைகளை மானேஜர் மொழிந்தார்.

"இவர்தான் சூபரிண்ட்........"

"சந்தோஷம்."

"இவர் காஷியர்....."

"................"

"இதோ, இவள் எங்கள் ஆபீஸ் டைப்பிஸ்டு சுமி!"

"உமியா.......?"

"இல்லை, சுமி! சுமித்திரா!"

'சுமி' விஜயாவின் கைகளைத் தன் இரண்டு கைகளிலும் பற்றிக் குலுக்கி விஜயாவை இரண்டடி தள்ளி அழைத்துக் கொண்டு போய் ரகசியமாகப் பாவிக்கும் குரலில், "உன் கணவர் அழகாக இருக்கிறாரடி. மதுரைக்காரர் என்றதும் ஒரு மாதிரியாக இருப்பார் என்று நினைத்துக் கொண்டிருந்தோம்!" என்றாள் மூர்த்தியையும் கடைக் கண்ணால் பார்த்துக் கொண்டே.

'நீங்கள் சென்னைப் பட்டணத்தில் இருப்பதனால் மதுரைக்காரர்கள் என்றால் மட்டம் என்ற நினைவா? மதுரைக்காரர்கள் என்றால் அழகில் குறைந்தவர்களா?" என்று கேட்க மூர்த்திக்கு வாய் துடித்தது. அதற்குள் இன்னொரு பெண் வந்து விட்டாள். இவள் கொஞ்சம் அடக்கம். அமரிக்கையாக விஜயாவுக்கு வாழ்த்துக் கூறிக் கடைக்கண்ணால் மூர்த்தியையும் பார்த்துக் கொண்டாள்.

அறிமுகம் முடிந்து டிபன் ஆனபிறகு அவர்களுடைய வாழ்த்துதல்களுடன் பரிசுப் பொருள்களையும் பிரசங்கத்துடன் மானேஜர் விஜயாவிடம் அளித்தார். பரிசுப் பொருள்களில் ஒரு ஸெலுலாய்டு குழந்தை, புட்டிப் பால் டின், பால் புகட்டும்,பாட்டில் — ஒரே சிரிப்பு, ஆரவாரம் !

கூட்டம் கலைய ஆரம்பித்தது. கச்சேரியும் ஒரு வழியாக முடிவடைந்து அநேகமாகப் பந்தல் காலியாகி விட்டது. மீதியிருந்த நாலைந்து பேர் கொஞ்சம் நெருங்கின நண்பர்கள் போலும், சாப்பாட்டுக்குத் தங்கினார்கள். மூர்த்தி வந்தவர்களில் யாருடனோ சற்றுத் தள்ளி நின்று பேசிக் கொண்டிருந்தான். ஆனால் அவன் பார்வையோ அத்தனை சிநேகிதிகளிலும் தனி அழகுடன் ஒளி வீசும் கண்களுடன் நின்று கொண்டிருந்த விஜயாவை விட்டு ஒரு கணம்கூட அகலவில்லை. விஜயாவின் சிநேகிதி ஒருத்தி அவளுடைய காதுக்குள் குனிந்து ரகசியமாகக் கேட்டது மூர்த்திக்கும் கேட்டது.

"ராகவனுக்கும் பத்திரிகை கொடுத்தியோ ?"

"உம்....." என்று சொன்ன விஜயா தலையைக் குனிந்து தலையைச் சாய்த்துக் கேட்டாள். "இன்று அவர் ஆபீசுக்கு வரவில்லை?" அவளுடைய குரலில் கனிவும் இரக்கமும் தெளிவாகத் தெரிந்தன.

"வந்தார். ஆனால் இங்கு வருவதாக இல்லை. பாவம்! அவரைப் பார்த்தாலே பரிதாபமாக இருக்கு....."

"தஸ்......."

மூர்த்தி திரும்பினான்.

ராகவன்......? யார் ராகவன்? அவன் ஏன் வரவில்லை......? அவனைப் பார்த்தாலே ஏன் பாவமாக இருக்கிறது.....?

மூர்த்தியின் மனம் குடைந்தது.

அவனை அறியாமலேயே அவன் கற்பனை லை பாய்ந்தது. குடம் நிறைந்து நிற்கும்



பாலில் மிதக்கும் தூசி அவன் கண்களுக்கு விகாரமாகத் தெரிந்தது.

ராகவன் யார்.......?

யாராக இருக்க முடியும்?

அவன் வரவுக்கு இத்தனை ரகசியம் ஏன்? எல்லோருக்கும் இத்தனை பாவம், இத்தனை அநுதாபம் ஏன்?

மூர்த்தியின் நெஞ்சின் ஓரத்தில் விஜயாவைப் பற்றி ஒரு சிறு கரும் புள்ளி விழுந்தது. விஜயா சென்னைக் காரியாலயம் ஒன்றில் உத்தியோகம் பார்ப்பவள். மூர்த்தி பிறந்ததிலிருந்தே மதுரையில் படிப்பும் வேலையுமாகப் பழகியவன். சென்னைக்காரர்களின் மனோபாவமும், புகழும், இத்தனை நேரம் அவன் மனசின் எங்கோ ஓர் ஓரத்தில் இருந்தாலும் இப்போது அந்த நினைவு விசுவரூபம் எடுத்தது.

ராகவன் யாராக இருக்க முடியும்?

சென்னை மதுரை மாதிரியா? சினிமாவும், பீச்சும், பலவகைப்பட்ட தோழிகளும், சிந்தனைகளும்,..........

ராகவன் யார்?....

பீச் ரோட்டின் அருகில் காதலர் பாதை என்ற பெயருடனேயே ஓர் இடம் இருக்கிறதாமே......!

மூர்த்தியின் மனம் மீண்டும் மீண்டும் எங்கோ வட்டமிட்டது. இத்தனை நேரம் இருந்த நிம்மதி மறைந்து அவன் செவிகளில் 'ராகவன், ராகவன்' என்ற சொல்லே பேரொலியாக எழுந்தது. விஜயாவின் முகத்தைப் பார்த்தான். சீ! இந்த முகத்தை, அதுவும் இன்று, என்னவோ பைத்தியக்காரத்தனமாக நினைப்பது என்ன பேதைமை!

அது ஒரு பெரிய கல்யாண சத்திரம். ஒரே கல்யாண கூட்டம். மாடியின் முன் பக்கம் முழுவதும் வந்தவர்கள் தங்கும் அறைகள்.

மாடியின் பின்பக்கம் சற்றுத் தள்ளி, அதற்கும் பின்னாலிருந்த மொட்டை மாடிக்குப் போகக் கதவுடன் கூடிய அறை. அறை முழுவதும் மல்லிகைப் பூப் பந்தல் மணத்தை வாரி இறைத்தது. நீல நிற விளக்கு நிலவு வெளிச்சத்தைத் தெளித்தது. கட்டோடு கொளுத்தி வைக்கப்பட்ட ஊதுவத்தியின் மணமோ உள்ளத்தையே குடைந்தது. புதுக் கட்டில், புது மெத்தை, புது மணம்..... எல்லாம் புதுமை......

மூர்த்தி தோளில் நிற்காமல் வழுவும் பட்டு அங்கவஸ்திரத்தை எடுத்துக் கட்டில் கம்பியின்மீது போட்டான். விஜயா நின்ற இடத்தில் நின்றபடியே நிலம் நோக்கினாள்.

வெளியில் அரவம் அடங்கி விட்டது.

விஜயா ஒரு கணம், இல்லை, ஒரு கணத்தில் பாதி நேரம்..... மெல்லத் தலைதூக்கி உள்ளத்தின் அடி ஆழத்திலிருந்து எழும் பெருவகை பொங்க, இமைக்க மறந்த ஒளிப் பெருக்குடன் அவனை நோக்கினாள். ஒரு பெண் ஓர் இளைஞனைப் பார்க்கும் பார்வை அல்ல அது; ஓர் உள்ளம் மற்றோர் உள்ளத்தைத் தொட்டுத் தீண்டும் மின்னல் அது.

அந்த ஒரு கண அநுபவ உணர்ச்சிப் பிழம்பில் அவன் ஆடவனாய்த் தோன்றியதன் பயனை அடைந்தான்.

கையில் கட்டிய கங்கணக் கயிறுகூட அழகூட்ட, மின்கொடி போல் நிற்கும் அந்தப் பெண்மைப் பேரழகின் மேனியழகைப் பார்த்துப் பார்த்துப் பூரித்தான் மூர்த்தி. அப்பொழுது அவனுக்கு எங்கோ படித்திருந்தது நினைவுக்கு வந்தது. "ஒரு பொருளின் மதிப்பு அவரவர் மனத்தையும் சந்தர்ப்பத்தையும், உணர்ச்சியையும் பொறுத்தது !"

ஒரு வழியாகத் தன் நினைவுக்குத் திரும்பிய மூர்த்தி, விஜயாவின் பக்கம் ஓரடி எடுத்து வைத்து, "விஜி, வா, மொட்டை மாடியில் கொஞ்ச நேரம் நிற்கலாம். ஊம்.......?" என்று அழைத்தான்.

அறையின் பின்பக்கத்துக் கதவைத் திறந்து வெளியில் அடி எடுத்து வைத்ததும் உள்ளே பொங்கி வழிந்த பூவின் மணமும் ஊதுவத்தியின் மணமும் குறைந்து, நிலவின் மணம் மாத்திரம் இதமாக இருந்தது. விஜயா கைப்பிடிச் சுவரருகில் வந்து நின்றாள். நிலவின் மங்கிய வெளிச்சத்தில் அவள் கன்னம் பளபளத்தது.

"விஜி !.........."

மூர்த்தியின் மனத்தின் கோடியில் 'ராகவன்' என்ற பேரொலி எழுந்தது.

நிலவொளியும் நீலவானமும் விஜியின் நெருக்கமும் மூர்த்தியை எங்கோ இழுத்துச் சென்றன. வாழ்க்கையின் இன்பமயமான நேரங்களை ஒவ்வொரு கணமாக, ரசனை உணர்வுடன் அநுபவிக்க ஆசைப்படும் ரசிகனான மூர்த்தி மெதுவான குரலில் சொன்னான், "விஜி! எனக்கு உயர்ந்த ரசிக உள்ளம் இருப்பதாக நான் நினைத்துக் கொண்டிருக்கிறேன். என் உள்ளம் இப்போது கடல் ஆரவாரத்துடன் பொங்குகிற மாதிரித்தோன்று


குளுமை
மிகக் குளுமை
அருமையான குளுமை

கிறது. இதோ, இந்தச் சந்திரனும், சந்திரனின் ஒளியும், அதன் தண்மையும் எனக்காகவே இருப்பது போன்ற பிரமையும் ஏற்படுகிறது. இப்போது இருக்கும் மனநிலையில் சந்திரனின் கிரணங்களையே பெற்று அந்தக் கிரணத்தின் மென்மையழகைப் பிரதிபலித்தபடியே ஒருத்தி இதோ என் எதிரில் நிற்பதாகவே தோன்றுகிறது.''

விஜி மௌனமாக நின்றாள்.

மூர்த்தி விஜயாவையும் ஆகாயத்தையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டு நின்றான்.

அவன் பார்வையில் நிர்மலமாக இருந்த ஆகாயத்தில் திட்டுத் திட்டாகப் பரவிக் கிடந்த மேகப் பஞ்சுகள் தெரிந்தன. சந்திரனையே உற்றுப் பார்க்கும் போது, சந்திரனிலும், சந்திரனிலும்..... அது என்ன? குதிரையா? வாத்தா? கிளியா.... இது எதற்காக? இவ்வளவு அழகுடைய சந்திரனின் அழகும் ஏன் பூரணமாக இல்லை? அதில் அந்தத் திட்டு ஏன்?

ராகவன் யார் ?

மறைந்திருந்த நினைவு மீண்டும் தலையெடுத்தது. ராகவன் யார் என்று விஜியிடம் தெளிவாகக் கேட்க முடியுமா? அதுவும் இன்றைக்கா ?

மறந்து ஒதுக்க நினைத்தும் அதே நினைவு மீண்டும் எழவே, ''உள்ளே போகலாம்'' என்று சொல்லிவிட்டு நகர்ந்தான்.

உள்ளே தட்டு நிறையப் பழங்கள், பாத்திரங்களில் பட்சண வகை, கூஜாவில் பால்....

மூர்த்தி நிமிர்ந்து நின்று விஜயாவைப் பார்த்துச் சிரித்தான். விஜயா உதட்டைக் குவித்து, நாணத்துடன் தலை குனிந்தாள்.

இருவர் மனத்திலும் தாங்கள் இப்படிக் காலம் காலமாகக் காத்துக் கொண்டு நிற்பது போல் தோன்றியது.

விஜயா நகர்ந்து போய்ப் பால்கூஜாவிலிருந்து தம்ளரில் பாலை எடுத்துக் கொண்டு வந்து மூர்த்தியின் எதிரில் நின்றாள்.

''பால்.......''

''தம்ளரில் எடுத்துக் கொடு.''

''உம்.''

''நீ முதலில் குடி.''

''இல்லை, நீங்கள்........''

''ஊம், நீதான்........''

மூர்த்தி தம்ளரைக் கையில் வாங்கி அவள் உதட்டருகில் கொண்டு போய் வைத்தான்.

விஜயா உதட்டைக் குவித்து நகர்ந்து கொண்டாள். நகர்ந்த வேகத்தில் தம்ளரில் இருந்த பால் தளும்பி அவள் உதட்டை நனைத்து வழிந்தது.

அவள் நகர்ந்து நின்று நெட்டுயிர்த்தாள். தம்ளர் பாலில் அவள் பார்வை ஏனோ ஒரு மாதிரியாகப் பதிந்தது தெரிந்தது.

''பரவாயில்லை. நீங்கள் குடியுங்கள்.....''

''என்ன விஜி.....?''

''ஒன்றுமில்லை, சின்ன வயதிலிருந்து எனக்கு ஒரு வழக்கம். எதைச் சாப்பிட்டாலும், முதலில் நிமிர்ந்து நின்று கண்களை மூடிக் கடவுளுக்கு நிவேதனம் செய்துதான் சாப்பிடுவேன். இது குழந்தையிலிருந்தே அப்பா சொல்லிக் கொடுத்த பாடம்.''

''சரி, இந்தப் பாலையும் உன் வழக்கப்படி நிவேதனம் பண்ணேன்.''

''இந்தப் பாலையா?...... ஊம்..... இது என் உதட்டில் பட்டு விட்டது. மீதிப் பாலை எப்படி நிவேதனம் செய்ய முடியும்? வேண்டாம்; பரவாயில்லை. நீங்கள் குடியுங்கள்...''

'மீதிப் பாலை'க் கடவுளுக்கு நிவேதனம் செய்ய முடியாது!...... மூர்த்தியின் மனத்தில் மின்னல் ஒன்று ஓடியது. நிவேதனம்....

''விஜயா! இப்போது நான் உன்னையே சாப்பிடப் போகிறேன். சாப்பிடுவதற்கு முன்னால் உன்னையும் உன் கடவுளுக்கு நிவேதனம் செய்ய வேண்டாமா?''

எதிர்பாராத கேள்வியினால் விஜயா சற்றுத் திகைத்தாள். முத்து உதிரும் சிரிப்புடன், ''என்னையா...? நிவேதனமா...?'' என்றாள்.

''உம்......''

சற்று யோசித்துவிட்டு அவள் சொன்னாள்: ''பாலையும் பழத்தையும் உணவையும் நிவேதனம் செய்தால் சுவாமி அவற்றைச் சாப்பிடுவதில்லை. ஆனால் என்னையோ........''

''உம், சொல் விஜி!''

''என்னை எந்தத் தெய்வத்துக்கு நிவேதனம் செய்ய வேண்டுமோ, அந்தத் தெய்வம் நேராகவே வந்து என்னை உண்கிறது !''

''விஜி......''

தெய்வத்தையும் நிவேதனத்தையும் நினைத்துப் பரவசமாகி நின்றான் அவன். ''பாலைக் கூட நாம் குடித்து மீதியாக்காவிட்டாலும், கன்று குடித்து மீதியாக்கிவிடுகிறது. பூச்சி தின்ற மீதிப் பழம்தான் கடவுளுக்குக் கிடைக்கிறது. உணவைக்கூட முதலில் ஈ தொட்டு விடுகிறது. ஆனால் இந்தக் கடவுளுக்குச் செய்யும் இந்த நிவேதனம்......''

''விஜயா!......''

தன் கால்களில் விழுந்து மெய்ம்மறந்து கிடந்த விஜயாவை மூர்த்தி இரு கைகளாலும் தூக்கினான். அவள் உடலில் பெருகி நின்ற பக்திப் பரவசம் மூர்த்தியின் உடலிலும் பாய்ந்தது.

ஆவிக் கலப்பில் அமுத சுகத்தில் மூடியிருந்த விழிகளைத் திறந்து கட்டிலை நோக்கி அடி எடுத்து வைத்து, தங்களைச் சூழ்ந்து பரவச நிலையின் வேகத்தைச் சற்று மாற்ற நினைத்த மூர்த்தி, ''இன்று உன் ஆபீசிலிருந்து எல்லாரும் வந்தார்களா?'' என்று சாதாரணமாக, கேள்வியின் அடியில் தொக்கி நின்ற அர்த்தத்தை வாஸ்தவமாகவே உணராமல் கேட்டான்.

தன் நிலைக்கு மீண்ட விஜயாவும், ''உம்... ஒருவரைத் தவிர'' என்றாள்.

''யார் ?''

''ராகவன் என்ற ஒருவர். எனக்கு எதிர் நாற்காலி அவருடையது. பாவம், ரொம்ப நல்லவர். அதனால்தானோ என்னவோ, இரண்டு குழந்தைகளைத் தவிக்க விட்டுவிட்டு அவர் மனைவி பதினைந்து நாட்களுக்குமுன் போய் விட்டாள். ரொம்பப் பாவம்....!''

''பாவம்......!'' பெருமூச்சுடன் கூடவே, நினைத்துப் பார்க்கக் கூடப் பிடிக்காத பெரிய பாரம் ஒன்றும் மூர்த்தியின் நெஞ்சிலிருந்து ஓடி வந்து வெளியில் விழுந்தது.

நிவேதனப் பொருள், 'தெய்வத்தின்' பிடியில் சிக்கித் தவித்துக் கொண்டிருந்தது.

# வட்ட மேஜை

★ தொந்தரவு ஏன்?
★ மனத்தை வென்றது!
★ சிறு சேமிப்பு பெரிய செலவு!

ஆரம்ப ஆசிரியர்கள் நாட்டின் நெருக்கடி நிலைமையையும், பாதுகாப்பின் அவசியத்தையும் நன்கு உணர்ந்து குறைந்த ஊதியத்திலும் தங்களால் இயன்ற அளவு நன்கொடையாகவும், தேசிய சேமிப்புப் பத்திரங்கள் வாங்கியதன் மூலமும் உதவியுள்ளார்கள். மேலும் பொதுமக்களிடமிருந்தும் பள்ளியில் படிக்கும் மாணவர்களிடமிருந்தும் வசூலித்துக் கொடுத்துள்ளார்கள். இவை யனைத்தும் யாவரும் அறிந்திருப்பார்கள். இந்நிலையில் தற்பொழுது ஆரம்ப ஆசிரியர்களிடம் தங்கப் பத்திரம் வாங்குவதற்கென்று கட்டாயமாகப் பணம் வசூல் செய்து வருகிறார்கள். விலைவாசி உயர்ந்துள்ள இந்நாளில் குறைந்த ஊதியம் பெறும் ஆரம்ப ஆசிரியர்களிடம் பணம் இருக்காது என்பதை அறிந்துள்ள ஆணையரும் கல்வி விஸ்தரிப்பு அதிகாரியும் ஆசிரியர்களிடம் நேரில் சென்று அவர்களை அவர்களின் ஓய்வு கால உதவிக்கென அரசினர் ஆணைப்படி சேமித்து வரும் பிராவிடெண்ட் பண்ட் நிதியிலிருந்து தன் குடும்பச் செலவுக்காகவும், விசேடங்களுக்காகவும், ரூபாய் நூற்றி இருபது கடனாக வேண்டும் என்று எழுதச்சொல்லி உடனே பணம் கொடுக்க ஆவன செய்து, அப்பணத்தைத் தங்கப் பத்திரம் வாங்கத் தந்துவிடும்படி வற்புறுத்தப் படுகிறார்கள். கடனைப் பல தடவைகளில் மீண்டும் ஆசிரியர்களே கட்டியாகவேண்டும். இதனால் உண்மையாக உள்ள செலவுக்குக் கடன் வாங்கும் சந்தர்ப்பத்தையும் இழந்து விடுகிறார்கள்.

முன்பெல்லாம் நாங்கள் கடன் மனு எழுதினால் அனுமதி பெற்று வரப் பல மாதங்களாகும். பணம் கிடைப்பதற்கும் விசேடம் முடிவதற்கும் சரியாக இருக்கும். எல்லாம் மெதுவாக நடக்கும்போது இந்தக் கடன் வழங்குவதில் ஏனோ இவ்வளவு அவசரம்?

ஆசிரியர் மனநிலை இப்படி இருந்தால் கல்வித் தரம் எப்படி உயரும்? இவற்றையெல்லாம் ஆராயாது இப்படித் தொந்தரவு செய்கிறார்கள். எதிர்த்துக் கேட்டால் வேலை மாற்றம் ஆகும். எல்லையில் அமைதி ஏற்பட்டும் ஏன் இந்தத் தொந்தரவு?

வைத்திநாதன்பேட்டை
22-1-66 ராமையன்

'துரும்பன்' அவர்கள் எழுதியிருந்த 'நில் கவனி, நட' கட்டுரை மிகவும் முக்கியமானது. அதில் 'சென்னை' என்று இருக்குமிடமெல்லாம் 'மதுரை' என்றிருந்தாலும் பொருத்தமாயிருக்கும். கார், லாரி இவைகளின் மயிர்க்கூச்செறிய வைக்கும் 'ஹாரன்' ஒலிகளையும் குறிப்பிட வேண்டும். நடை பாதைகளின் அகலம் மூன்று அடிகள். இதிலும் சைக்கிள்கள், மாடுகள், பிச்சைக்காரர்கள் முதலியவர்கள்தான் கொலுவீற்றிருக்கலாம். இந்நிலை மாறுமா?

மதுரை,
22-1-66 அ. க. ஜனார்த்தனன்

கல்கி 16-1-66 இதழ் கண்டேன். ''மானிடம் வென்றது'' என்னும் சிறப்புக் கதை என் மனத்தை வென்றுவிட்டது. உள்ளத்தை உருக்கும் உணர்ச்சி மயமான அந்தக் கதை – உண்மையிலேயே சிறப்புக் கதையாக அமைந்திருந்தது. ஆசிரியரின் எழுத்தும், நடையின் வேகமும், இறுதிவரை ''சஸ்பென்ஸ்'' கெடாமல் கொண்டு சென்றிருப்பதும் பாராட்டக் கூடியது.

சென்னை-17
22-1-66 ஆர். பாபு

சிறு சேமிப்பு, சிறு சேமிப்பு என்று ஒவ்வொரு வருஷமும் பிரமாதப்படுவது தெரிந்ததே. 2-3-58ல் இந்தச் சிறு சேமிப்புத் திட்டத்துக்காக நான் ஐந்து ரூபாய் செலுத்தினேன். ஒரு தாற்காலிக ரசீது உடனே கொடுத்தனர். ஆனால் ஒரிஜினல் தேசிய சேமிப்புப் பத்திரம் இது நாள் வரை எனக்குக் கொடுக்கப்படவில்லை. பத்திரம் தரப்பட வேண்டுமென்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு மனுவுக்கு மேல் மனுவாக இந்த எட்டு வருஷமும் கொடுத்ததில் எனக்கு ரூ. 20.80 செலவழிந்து விட்டது. பத்திரத்தை வாங்குவதற்கு எனக்கு இந்த அரசாங்கம் இவ்வளவு செலவு வைத்து விட்டது! சிவப்புநாடா முறையின் பயங்கரத்தை என்னவென்று சொல்வதெனத் தெரியவில்லை.

தென்காசி
17-1-66 பி. ஏ. முகம்மது

நமது சென்னை ஒலிபரப்பு 18 மணி நேரமாக நீடிக்கப்பட்டுள்ளது. அதனால் மகிழ்ச்சி ஏற்படவில்லையே? காலை 10 மணி முதல் 12 மணி வரையிலும் 2-30 முதல் 5-30 வரையிலும் விவித பாரதி நிகழ்ச்சிகளைத்தான் கட்டாயமாகக் கேட்க வேண்டியிருக்கிறது. அந்த நேரத்தில் தமிழ்த் திரைப்பட இசைத்தட்டுக்களைப் போட்டால் எவ்வளவோ நன்றாக இருக்கும். மேலும் விவித பாரதி நிகழ்ச்சி மட்டும் சக்தி வாய்ந்த சிற்றலை வரிசைகளில் ஒலிபரப்பப்படுகின்றன. ஆகையால் எவரும் அதை மத்திய அலை வரிசையில் கேட்க மாட்டார்கள். எனவே அந்நேரத்தில் தமிழ்த் திரைப் பாடல்களை ஒலிபரப்பினால் என்ன? தமிழ்த் திரைப் பாடல்களுக்காக ரசிகர்கள் ஏன் வெளி நாட்டு ஒலிபரப்புகளுக்கு ஏங்கிக் கொண்டிருக்க வேண்டும்?

கோவை, 5-1-66 மணி

Edited printed & published by T. Sadasivam on behalf of Messrs. Bharathan Publications Private Ltd., at the Kalki Press, Kilpauk, Madras-10

